

# சுபா சுந்தரம்!

## மனம் திறக்கிறார் சுபா சுந்தரம்

“ஒரு மனிதனுடைய வாழ்நாளில் எட்டு வருட காலம் என்பது கணிசமான பகுதி. என்னைப் பொறுத்தவரை சிறையில் இருந்ததை ஊழ்வினை என்பதா, விதி என்பதா தெரியவில்லை. ராஜீவ்காந்தி கொலையைத் தொடர்ந்து பல நாட்கள் விசாரணைக்காக சி.பி.ஐ. அலுவலகத்துக்கு அழைக்கப்பட்டேன். 1991-ம் வருடம் ஜூலை இரண்டாம் தேதி வழக்கம் போல் விசாரணைக்குச் சென்றேன். என்னுடைய தனிப்பட்ட சொத்து விவகாரங்களைக் கேட்ட அதிகாரிகள், நான் கைது செய்யப்படுவதாகச் சொன்னார்கள். சுறுசுறுப்பும், பரபரப்புமாக இருந்த என் அன்றாட நடவடிக்கைகள் தாற்காலிகமாக முடக்கப்பட்டன. ஃபோட்டோ ஜர்னலிஸ்டாக வாழ்க்கையைத் துவக்கிய நான், வளரும் தொழில்நுட்பங்களைப் பயன்படுத்தி, முன்னேறுவதற்காகப் போட்ட திட்டங்கள் கற்பனைக் கோட்டையில் மட்டுமே பத்திரப்படுத்தப்பட்டன...

“நீதிமன்றக் காவலின்போது சைதை சப். ஜெயில், செங்கல்பட்டு சிறைச்சாலை; சேலம் சிறைச்சாலை என்று மூன்று இடங்களில் வைத்திருந்தார்கள். கைது செய்யப்பட்ட முதல் இரண்டு நாட்கள் எப்படி இருந்தேன் என்று இன்று நினைத்துப் பார்க்கிறேன். நடைப்பிணம் என்று சொல்வார்களே, கிட்டத்தட்ட அதே நிலைதான்!

“இதே வழக்கில் என்னுடன் கணவன் - மனைவியாக இரு ஜோடிகள் கைது செய்யப்பட்டார்கள். விஜயன் - செல்வலட்சுமி, ஜெயக்குமார் - சாந்தி ஆகியோர் தாம் அவர்கள். இரண்டு ஜோடிகளுக்கும் பார்த்திபன், ரகுவரன் என்று மூன்றரை, நான்கு வயதில் குழந்தைகள் இருந்தார்கள். விஜயனையும், ஜெயக்குமாரையும் முதலிலேயே கைது செய்துவிட்டார்கள். அதன்பின்தான் அவர்களது மனைவிகளைக் கைது செய்தார்கள். பெண்களைக்

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com    ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

கைது செய்து சிறையில் அடைக்கும் முன்பு நகைகளைக் கழற்றி ஜெயில் அதிகாரிகளிடம் கொடுத்து விட வேண்டும். சாந்தி நகைகளைக் கழற்றும் போது, குழந்தையான பார்த்திபன், "நகையை ஏன் எடுக்கறாங்க... அம்மாவை என்ன செய்யப் போறீங்க" என்று மழலைக் குரலில் அழுது கொண்டே கேட்டது என்னை உருக்கி விட்டது!

"பல நாட்கள் அந்தக் குழந்தைகள் ஜெயிலில் எங்களுடனே இருந்தனர். என் புண்பட்ட மனதுக்கு அந்தக் குழந்தைகளின் குறும்புகள் ஆறுதலாக இருந்தன. என்னைப் பார்க்க வரும் என் மனைவி, அந்தக் குழந்தைகளுக்கும் விளையாட்டுப் பொருட்கள், சாக்லேட் என்று வாங்கி வருவார். பின்னர் அவர்களுடைய உறவினர்கள் வந்து குழந்தைகளைத் தங்களுடைய பொறுப்பில் வளர்க்க எடுத்துச் சென்று விட்டனர்.

"**1993**-ம் வருடம் ஜனவரி 17-ம் தேதி சேலம் ஜெயிலிலிருந்து என்னைப் பூந்தமல்லி ஜெயிலுக்கு மாற்றினார்கள். அந்த ஜெயிலுக்குள்ளேயே தடா கோர்ட்டும் செயல்பட்டது. காலையில் சப்பாத்தி, மதியம் சாதம், சாம்பார், ரசம், மாலை சப்பாத்தி என்று கொடுப்பார்கள். இரவு உணவை ஆறு மணிக்கே கொடுத்து செல்லுக்குள் அடைத்து விடுவார்கள். விசாரணைக் கைதியாக இருந்ததால், சொந்த உடைகளை அணிந்து கொள்ளலாம்; விருப்பப்பட்ட பத்திரிகைகள், புத்தகங்கள் வாங்கிக் கொள்ளலாம். மனைவி, குழந்தைகள், அண்ணன், தம்பி போன்ற ரத்த சம்பந்தப்பட்ட உறவினர்களே என்னைப் பார்க்க அனுமதிக்கப்பட்டனர். என்னுடன் புதுக்கோட்டையைச் சேர்ந்த இரும்பொறை என்பவரும் கைது செய்யப்பட்டிருந்தார். 'அம்மாவுக்கு கேன்ஸர், இன்னும் சிறிது நாளில் இறந்து விடுவார். வந்து பார்த்து விட்டுச் செல்லவும்' என்று அவருக்குத் தகவல் வந்தது. ஆனால் அதிகாரிகள் அவரை பரோலில் விடவில்லை. எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தார். அனுமதி கிடைக்கவேயில்லை. அவர் சென்று பார்க்காமலேயே அம்மா இறந்து போனார்! அம்மா இறந்தவுடன் அதிகாரிகள், "நீங்கள் பரோலில் சென்று அம்மாவின் ஈமக்கிரியைகளைச் செய்து வாருங்கள்" என்று வேன், பாதுகாப்புப் போலீஸ் ஆகியவைகளை ஏற்பாடு செய்தனர். ஆனால் இரும்பொறை இளம்பவில்லை.

"உயிரோடு இருக்கும்போது எவ்வளவோ கெஞ்சினேன். விடவில்லை. இறந்த பின்னர் ஏன் செல்ல வேண்டும்?" என்று மறுத்து விட்டார்.

உடனிருந்த தோழர்கள் என்னிடம் வந்து, "அண்ணே நீங்கள் சொன்னால் கேட்பார்" என்றார்கள். நானும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். அப்போது சில காலம் முன்புதான் என் தாய் மாமன் இறந்தபோது பரோலில் சென்று வந்தேன். அதைச் சொல்லி, 'இப்போது தாயின் முகத்தைப் பார்க்காவிட்டால் வாழ்நாள் முழுவதும் வருத்தப்படுவீர்கள்' என்று சொன்னேன். மனிதர் கேட்கவேயில்லை. பெயருக்கேற்பத் தன் முடிவில் உறுதியாகவே இருந்து விட்டார்! ரொம்ப நாட்கள் இந்தச் சம்பவம் என் மனத்தில் இருந்து கொண்டேயிருந்தது.

"ஜெயிலில் தொலைக்காட்சிப் பெட்டி உண்டு. மாலை உணவை வாங்கி, செல்லுக்குள் வைத்துவிட்டு, தூர்தர்ஷன் செய்தியைப் பார்த்த பிறகே சாப்பிடுவேன். அப்படித்தான் ஒருநாள் கேட்ட செய்தி ஒன்று இடி போல் என்னைத் தாக்கியது.

'இதயம் பேசுகிறது' ஆசிரியர் மணியன் மறைந்து விட்டார் என்ற செய்திதான் அது. பழைய ஞாபகங்கள் வந்து நெஞ்சில் முட்டி மோதின. எவ்வளவு இடங்களுக்கு ஒன்றாகச் சென்றிருக்கிறோம்! உள்நாட்டில் சுற்றாத இடமில்லை. வெளிநாடுகளுக்கும் என்னை அழைத்துப் போன உற்ற நண்பர் அவர். அன்று சாப்பிடவே இல்லை! மணியனைப் பற்றிய நினைவுகள் வட்டமிட, விட்டத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த என்னைப் பார்த்து நண்பர்கள் பயந்து டாக்டரை அழைத்தனர்!

"**பூ**ந்தமல்லி கோர்ட்டில் சென்ற வருடம் ஜனவரி மாதம் 28-ம் தேதி தீர்ப்பு வழங்கப்பட்டது.

'நான் விடுதலையாகி விடுவேன்' என்று உறவினர்களும் நண்பர்களும் உறுதியாகக் கருதினார்கள். என்னுடைய உதவியில்லாமலேயே ஸ்டில் போட்டோகிராபராகத் தொழிலைத் துவங்கிவிட்ட என் மகன் அருண், நான் விடுதலை அடைந்து வெளியே வரும்போது படமெடுப்பதற்காக, மற்ற காமிரா நண்பர்களோடு காத்துக் கொண்டிருந்தான். ஆனால் தீர்ப்போ வேறுவிதமாக இருந்தது. தூக்குத் தண்டனை!

"என்னை விட என்னுடைய சுற்றமும் நட்பும்தான் பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆனால், என் மனதுக்குள் ஒரு பட்சி தொலைவில் தெரிந்த வெளிச்சத்தை சுட்டிக் காண்பித்துக் கொண்டிருந்தது. வெளியே படமெடுக்கக் காத்துக் கொண்டிருந்த என் மகனைப் பற்றிய நினைவுகள்தான் என்னை

அதிகமாகப் பாதித்தன.

"தீர்ப்புக் கொடுத்த அடுத்த நாளிலிருந்து நான் அரசாங்கத்துக்குச் சொந்தமானவனாக மாறிவிட்டேன். தனிப்பட்ட உடைகள் தடை செய்யப்பட்டன. சென்னை மத்தியச் சிறைச் சாலையின் தனிமைச் சிறையில் அடைக்கப் பட்டேன். சிறை வாழ்க்கை என்னைப் பண்படுத்திக் கொள்ள நிறையவே உதவியது.

"சிறைச்சாலை நூலகங்கள் என்னை இன்னமும் பரந்த நோக்கமுள்ளவனாக மாற்றின. என்னுடன் கைதாகிச் சிறையில் இருந்தவர் கர்நாடகத்தைச் சேர்ந்த ரங்கனாத். தமிழே தெரியாது. ஐந்து பாகங்களைக் கொண்ட 'பொன்னியின் செல்வனை' நாங்கள் விடாமல் படித்துக் கொண்டிருந்ததைப் பார்த்து ஆர்வத்தால் தமிழ் கற்று, விடுதலை ஆவதற்குள் 'பொன்னியின் செல்வனை' முழுவதும் படித்து முடித்து விட்டார்! ஒவ்வொரு புதன் கிழமையும் சிறை அதிகாரிகளால் படிக்கக் கொடுக்கப்படும் கல்கியும் விகடனும்தான் நாட்டு நடப்புகளைத் தெளிவாக எடுத்துச் சொன்னது.

"நான் சிறையில் இருந்தபோது என் குடும்பத்தினர் பட்ட கஷ்டங்களைப் பற்றி எனக்கே பல விவரங்கள் தெரியாது. 91-க்குப் பிறகு சில காலம் கெடுபிடியான சூழல் காரணமாக, கிட்டத்தட்ட சமூகப் புறக்கணிப்பை அவர்கள் சந்திக்க வேண்டியிருந்தது. எந்தப் பிரச்னையையும் என் கவனத்துக்குக் கொண்டு வராமல், என்னுடைய தேவைகளை மட்டும் தெரிந்து கொண்டு, அவற்றை நிறைவேற்றிய என் மனைவியை - அவருடைய தியாகத்தை - ஒன்றிரண்டு வரிகளில் சொல்லிவிட முடியாது. ஒவ்வொரு முறையும் அவர் என்னைப் பார்க்க வரும்போது, தாயை எதிர்நோக்கும் குழந்தையின் மனநிலையில்தான் நான் இருந்தேன்!

"ஜெயில் வாழ்க்கை இன்னொரு வகையிலும் உதவியிருக்கிறது. நான் பழகாத தமிழகத் தலைவர்கள் கிடையாது. பலர் மிக நெருக்கமாகவே என்னுடன் பழகியிருக்கிறார்கள். ஆனால் நான் ஜெயிலுக்குப் போன பிறகும் சரி; இந்த எட்டு வருட காலத்துக்குப் பிறகு விடுதலையானவுடனும் சரி தொலைபேசியில் கூட நலம் விசாரிக்காமல் இருந்து விட்ட 'சிலரை'ப் புரிந்து கொள்ள சிறை வாழ்க்கை நன்றாகவே உதவியிருக்கிறது! ஆனால், நான் எதிர்பாராத இடங்களிலிருந்து குடும்பத்துக்குக் கிடைத்த உதவிகள் மனிதப் பண்புகள் உயிரோடு இருப்பதைத் தெரிவித்துக் கொண்டிருக்கின்றன. எங்கள் விடுதலைக்காக one man army போன்று செயல்பட்ட நெடுமாறன் அவர்களிடம் இருந்து துவங்கிப் பட்டியலிட்டால் ஒரு கல்கி போதாது.

"இனி நான் என்ன செய்யப் போகிறேன்? காமிராவைத் தோழனாகப் பெற்று வாழ்க்கையில் உயர்ந்தவன் நான். விஷுவல் மீடியத்தின் வீச்சைப் பார்த்துப் பிரமித்து நிற்கிறேன். செல்போன்களும், பேஜர்களும் நம் ஊர் வளர்ச்சியை எனக்குப் புரிய வைத்துக் கொண்டிருக்கின்றன. எட்டு வருட காலத்தில் தவற விட்டுவிட்ட விஷயங்களைப் பற்றி முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். என்னைப் பொறுத்தவரை, சாதனைகள் செய்வது கொஞ்சம் தள்ளிப் போயிருக்கிறது; அவ்வளவுதான்!"

சந்திப்பு : தில்லப்பா
படங்கள் : ஸ்ரீஹரி

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ஆர். ராஜதுரை,
97, பிடாரி வடக்கு வீதி,
சீர்காழி - 609 110.

# நீங்கள் கேட்டவை – தராசு

● அஸ்வதிமணாளன்,
சென்னை - 28.

? ராணுவ ரகசியங்களைக் கையாளும் பிரதமர் அந்நிய நாட்டவராக இருக்கக் கூடாது என்ற கருத்து தங்களுக்கு உடன்பாடா...?

! சோனியா பிரதமராகக் கூடாது என்று பி.ஜே.பியினரும் தற்போது காங்கிரஸுக்குள்ளேயே பவார் முதலியவர்களும் கூறுவது ராணுவ ரகசியங்கள் தொடர்பானது அல்ல; 90 கோடி இந்தியர்களின் தன்மானப் பிரச்னை என்கிறார்கள். சோனியா இரட்டைப் பிரஜா உரிமை வைத்துள்ள வரை இந்த வாதம் சக்தி மிக்கதாகவே இருக்கும்.

● ஜெயலெக்ஷ்மி, சோழபுரம்.

? உலகப் புகழ்பெற்ற டைம் பத்திரிகை அட்டையை சச்சின் அலங்கரிக்கிறாரே?

! எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்வாரா என்று ஆவலுடன் காத்திருந்த ரசிகர்கள் அவருடைய துயரத்தில் பங்கேற்கிறார்கள்!

● அ. சுகுமார், காட்டுக்காஜூர்.

? ஓர் அமைச்சர், கருணாநிதியை இரண்டாவது அம்பேத்கர் என்று சட்ட சபையில் புகழ்ந்து தள்ளியிருக்கிறாரே...?

! 'ஜெ' நாட்களை நினைவுபடுத்தும் பேச்சு.

● ஆர். சாலமோன், ஆலங்குளம்.

? பரிசுச் சீட்டு மூலம் '98–99இல் ரூ. 18.34 கோடி வருமானம் கிடைத்துள்ளது. வருங்காலத்தில் இதை ஐம்பது கோடி, நூறு கோடியாக உயர்த்துவதற்கு அரசு முயற்சி செய்யும்' என்று கூறுகிறார் முதல்வர். இது, நாங்கள் ஏமாளிகளை அதிகரிப்போம் என்று கூறுவது போல் இல்லையா...?

! மக்களின் ஏமாளித்தனத்தையும் பேராசையையும் வியாபாரிகள் பயன்படுத்தி லாபம் சம்பாதிப்பது போலவே அரசும் செய்வது வருத்தத்துக்குரிய விஷயம் தான். அரசுக்கே அகௌரவம்.

● சு.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

? ஞானபீடப் பரிசு தமிழுக்கு ஏன் கிடைப்பதில்லை என்ற சர்ச்சை எப்போது ஓயும்...?

! தமிழுக்கு அது கிடைத்த பிறகு!

● செ. மலர்விழி, மதுரை - 10.

? தமிழ்நாட்டில் 40 தொகுதிகளிலும் காங்கிரஸ் கட்சியே வெற்றிபெறும் என்று திண்டிவனம் ராமமூர்த்தி கூறுகிறாரே...?

! இப்போது காங்கிரஸ் இருக்கிற கதியைப் பார்த்தால் அந்த எண்ணில் நான்கு என்கிற இலக்கத்தை நீக்கிவிட வேண்டும்!


• வெளியேறிய... • ...அநாதைகள்!


• தன்மானப் பிரச்னை!


• நூறு கோடி அகௌரவம்!

● டி. அழகர்சாமி,
பெத்தானியாபுரம்.

? பாரதீய ஜனதா ஆட்சிக்கு வந்தால் மீண்டும் கவிழ்ப்பேன் என்கிறாரே சுப்ரமணிய சுவாமி?

! அவரேதான் கவிழ்ந்து கிடக்கிறாரே! நிமிரட்டும் பார்க்கலாம்!

● மு. இரவிச்சந்திரன், சேலம் - 9.

? ராஜீவ் கொலை வழக்கில் விடுதலையானவர்களை வரவேற்க வந்தவர்கள் தமிழ் ஈழத்துக்கு ஆதரவாகக் கோஷம் போட்டார்களாமே?

! ஆபத்து முடியவில்லை என்பது ஊர்ஜிதமாகிறது.

● மல்லிகை மன்னன், மதுரை - 17.

? "அரசியல் அநாதைகளான வாழப்பாடி ராமமூர்த்திக்கும் வைகோவுக்கும் அடைக்கலம் கொடுத்து, அனாதை ஆசிரமம்

நடத்தியவர் புரட்சித் தலைவி!" என்று காளிமுத்து தம்பட்டம் அடிக்கிறாரே?

! இப்போதாவது அவர்கள் இருவரும் அநாதை ஆசிரமத்திலிருந்து வெளியேறி, வாழ்க்கையைத் தொடங்கியிருக்கிறார்களே என்று மகிழலாம்.

● வி. பரமசிவம், மதுரை.

? ராமர் பிள்ளை கடத்தல் பற்றி...?

! நாடகமே உலகம்!

● மு. அப்துலஜீஸ், வானூர்.

? 'சோனியா பிரதமரானால் தீக்குளிப்பேன்' என்கிறாரே உமாபாரதி. ஒரு பொறுப்பான அரசியல்வாதி பேசக்கூடிய பேச்சா இது...?

! உமாபாரதி பொறுப்பான அரசியல்வாதி என்று நீங்கள் நினைத்துக் கொண்டால், அதற்கு அவரா பொறுப்பு?!



• பெருகும் எதிர்பார்ப்பு!

● ஆர். ராஜதுரை, சீர்காழி. ❑

? பயங்கரவாத தடுப்புச் சட்டமான பொடாவை கருணாநிதி வாபஸ் பெற்றதன் மூலம் தி.மு.க. ஆட்சியில் தீவிரவாதம் வேரோடு ஒழிக்கப்பட்டு விட்டது என்று கருத இடம் உள்ளதே..? இது குறித்துத் தராசின் கருத்து...?

! சட்டம் வாபஸ் பெறப்பட்டதற்கு முக்கியக் காரணம் மத்திய அரசின் ஒப்புதல் கிடைக்கவில்லை என்பதே. மனித உரிமைகளை பாதிக்கும் விதமாக சட்டம் அமைந்துள்ளது. அப்பாவிகள் கொடுமைப் படுத்தப்படலாம் என்கிற அச்சமே. பயங்கரவாதம் ஒழிந்து விட்டதாகக் கூற முடியாது. ஆனால், இருக்கிற சட்டங்களைக் கொண்டே பயங்கரவாதத்தை ஒடுக்க முடியும். இந்த மன உறுதி, சம்பந்தப்பட்ட அனைவரிடமும் இருக்க வேண்டும்.



• கதியும் கணக்கும்!

● எம். கருணாகரன், சென்னை – 33.

? நாட்டில் எவ்வளவோ பிரச்னைகள் இருக்க, உலகக் கோப்பை கிரிக்கெட்டுக்குச் சிறப்பிதழ் வெளியிடுமளவுக்கு அதிக முக்கியத்துவம் தரப்படுவது நம் நாட்டில் அவசியமா...?

! டபுள் ஒக்கேங்க! எத்தனை பிரச்னை இருந்தால் என்ன... கலை, இலக்கியம், விளையாட்டு எல்லாமும் தழைக்க வேண்டும்.

● ராஜி, கமுதி.

? ராஜீவ் கொலை வழக்கில் 19 பேரை விடுதலை செய்து வந்திருக்கும் தீர்ப்பு பற்றி...?

! வட்டமேஜையில் சேலம் அழகிரிசாமி எழுதியுள்ள கடிதம் காண்க!

● சுகந்தி நாகராஜன், தேவூர்.

? மனமெல்லாம் பிரச்னைகளால் சூழப்பட்டு நிற்கும்போது உடனடி அமைதி பெற ஏதேனும் சிறந்த வழியுண்டா...?

# உலகக் கோப்பை சிறப்பிதழ் அவசியமா?

! இதற்கு முன் இதே போல் திகைத்து/ துவண்டு நின்ற கணத்தை எண்ணிப் பாருங்கள்... அந்த நிலைமையிலிருந்து மீண்டு வந்து வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக வாழ முடிந்திருக்கிறதே; இந்தச் சந்தர்ப்பத்திலும் முடியும் என்று சில முறை சொல்லிக் கொள்ளுங்கள். சில நிமிடம் தியானம் செய்துவிட்டு ஒவ்வொரு பிரச்னையாக அணுகி தீர்வு யோசியுங்கள்.



• கவிழ்த்தார், கவிழ்ந்தார்!



• நெருப்பும் பொறுப்பும்

# வயித்தெரிச்சல் பாட்டு

**நா**மம் அம்மா நாமம்
நல்லாப் போடு நாமம்
கோவம் கொண்டு புண்ணியமில்லே
குழைச்சுப் போடு நாமம்

ஜிம்பாப்புவே காரன்
ஜெயிச்சுப்புட்டான் வீரன்! – வெறும்
ஜாம்பஜாரு டமு கிட்டயும்
ஜகா வாங்குவான் சூரன்.

ஆடுறாங்க மேட்சு – ரொம்ப
அலுப்புத் தட்டியாச்சு! – பல
கோடி பணம் சேர்த்ததால
குளிருவிட்டுப் போச்சு!

அள்ளித் தரான் 'எக்ஸ்ட்ரா' - இவன்
அதியமானு வம்சம் – அவன்
சொல்லி சொல்லி அடிக்கறாண்டா
சூரப்புலி அம்சம்.

மூட்டை நிறைய துட்டு
மூஞ்சிக்குக் கட் டவுட்டு – வெறும்
ஓட்ட விழுந்த 'பேட்'டுக்கா நம்
உலகக் கோப்பை? டவுட்டு.

கோயில் கட்டும் ரசிகா!
'கோப்பை' ஆசை இருக்கா? – வேற
வேல வெட்டி பார்த்தாலாச்சும்
வயிறு ரொம்பும் அழகா.

– குரோம்பேட்டை கவிராயர்

• விழா மேடையில்

கைக்குழந்தை முதல் ஊர்ப் பெரியவர்கள் வரை எல்லோரையும் ஒன்றாய்ச் சேர்த்து ஒரு திருவிழாவில்தானே பார்க்க முடியும்? அப்படித்தான் பார்க்க நேரிட்டது கும்பகோணத்தில்.

தஞ்சை-நாகை-திருவாரூர் மாவட்ட எழுத்தாளர் கூட்டமைப்பின் எட்டாம் ஆண்டு வாசகர் திருவிழாவும், அமரர் கல்கி நூற்றாண்டு விழாவும் டூ-இன்-ஒன் நிகழ்ச்சியாக நடைபெற்றது.

கோடை வெப்பத்தைத் தணிப்பதற்காக தக்கதொரு தருணம் பார்த்து வீசியது மந்த மாசத் தென்றல். தவழ்ந்து வந்த பூங்காற்றை அனுபவித்துக் கொண்டிருந்த இனிய மாலைப் பொழுதில் சுவாமிமலை எஸ். மணிமாறன் குழுவினரின் நாதஸ்வர மங்கள இசையுடன் மலர ஆரம்பித்தது அந்த விழா.

வாசகர் அரங்கத்தில் வாசகர்கள்-மேடையில் வீற்றிருந்த எழுத்தாளர்களுக்கிடையே நடைபெற்ற நேருக்குநேர் நிகழ்ச்சி சூடாகவும் சுவையாகவும் அமைந்தது.

"சினிமாங்கறது ஒரு பெரிய சாதனம். அதுல வெளிப்படுத்துறதுக்கு வேற விஷயமே இல்லையா? காதல்தான் ரொம்ப முக்கியமா சார்" என ஒரு வாசக இளைஞர்

# வெண்கலக் கடையில் செந்தமிழ் யானை!


• எழில்


• தேனுகா

ஆவேசமாய் வினா தொடுக்க, திரைப்பட இயக்குனர் எழில் சாந்தமாகப் பதிலளித்தார். "சினிமாங்கறது ஒரு பொழுது போக்குச் சாதனமா? இல்லே ஒரு கருத்துச் சாதனமான்னு பாக்கும்போது அது எனக்கு ஒரு Entertainment mediaவாத்தான் படுது. காதலப்

பத்தி இன்னும் நாலைஞ்சி படம் செஞ்சதுக் கப்புறம் ஒரு கருத்தைச் சொல்ற மாதிரி ஒரு படம் பண்ணித் தர்றேன்..."

"எது இலக்கியம்?" என ஒரு வாசகர் ஆர்வமாய்க் கேட்க அதற்கு, "படிக்கின்றவர் களை பாதிப்பு அடையச் செய்கின்ற படைப்பே இலக்கியம். அந்தப் படைப்புக்கு உன்னதமான நோக்கமும் இருக்க வேண் டும்" என்று பதில் தந்தார் எழுத்தாளர் ஆர்னிகா நாசர்.

"வரதட்சணைக் கொடுமை விஷயத்தில் தாங்கள் ஏன் ஆண்களை மட்டுமே சாடு கிறீர்கள்? அதற்குத் துணை நிற்கும் பெண் களைப் பற்றித் தாங்கள் எழுதுவதில்லையே" என ஒரு ஆண் வாசகர் கேட்க, "இந்த ஆண்கள் வரதட்சணை கிடைக்கும் வரை நமக்கு ஆதாயம் என்றுதானே பார்க்கிறார் கள். வரதட்சணை வேண்டாம் என பெரும் பாலான ஆண்கள் மறுத்துச் சொல்ல முன்வரவில்லையே?" என்று


• படத்திறப்பின் போது...

கிடுக்கிப்பிடி பதில் கொடுத் தார் எழுத்தாளர் அனுராதா ரமணன்.

"பொதுவாக ஒரு பக்கச் சிறுகதைகள் கல்கியில் வருவதில்லையே, ஏன்?" என ஒரு பக்கச் சிறுகதை ஸ்பெஷலிஸ்ட் மன்னார் குடி பி.ஆர். பார்த்தசாரதி வினா தொடுத்தார்.

"பொதுவாகவே ஒரு பக்கச் சிறுகதைகள் என்றால் அதில் ஏதேனும் ஓரிடத்தில் ஆபாசம் இருப்பதாக ஒரு கருத்து நிலவு கிறது. எந்த இடத்திலும் ஆபாசம் இல்லா மல் தவிர்த்து, நல்ல ஒரு கருத்தை வெளிப்படுத்தக் கூடிய தாகவும், தரமானதாகவும் இருக்கும் ஒரு பக்கச் சிறுகதைகள் வரவேற்கப் படுகின்றன" என்று கல்கி ராஜேந்திரன் அறிவிப்புச் செய்யவும் வாசக எழுத்தா ளர்களின் கரவொலியில் அரங்கமே அதிர்ந்தது.


• ஜி.ஆர். மூப்பனார்

**வா**சகர் அரங்கம் நிறைவு பெற்றவுடன் மேடையிலிருந்து அமரர் கல்கி இயற்றிய தமிழிசைப் பாடல்கள் இனிய நாதவெள்ள மாய்ப் பெருக்கெடுத்து வந்தன. திருமதி. கண்மணி சிதம்பரம் தமது குரலினிமையால் காற்றினிலே வரும் கீதத்தை அரங்கிலே அற் புதமாய்த் தவழ விட்டுக் கொண்டிருந்தார். 'தக்கத் தைய்யா... தைய்யா... தக்கத் தைய்யா... தைய்யா...' பாடலுக்கு குதித் தாடக் கூடிய எட்டு வயது பைஜாமாச் சிறுவன் முன் வரிசையில் அமர்ந்து மெய் மறந்து தலையசைத்துக் கொண்டிருந்தான்.

"எங்கள் மாவட்டத்தில் பிறந்தவர்க்கு நாங்கள் விழா எடுக்கிறோம்" என உரிமை கலந்த அன்புடன் எல் லோரையும் வரவேற்றுப் பேசினார் கவீட் ரவி. எழுத்தாளர் கூட்டமைப் பைச் சார்ந்த கபிஸ்தலம் எஸ். இராஜேந்திரன், சின் னஞ்சிறு கோபு

• டி. ராஜேந்தர்



• பார்வையாளர் பகுதியில்..


• அனுராதா ரமணன்

ஆகியோர் சின்னஞ்சிறு உரை நிகழ்த்தினர்.

மு. தனகோபாலன் எழுதிய "மருந்தும் மக்களும்" என்ற புத்தகத்தை கல்கி ராஜேந்திரன் வெளியிட, முதல் பிரதியை சிட்டி யூனியன் வங்கி சேர்மன் வி. நாராயணன் பெற்றுக் கொண்டார். சேலம் மாவட்ட வாசகர் பேரவையின் 'உங்கள் ரீடர்ஸ்' இதழை எழுத்தாளர் ஆர்னிகா நாசர் வெளியிட முதல் இதழை கயத்தை சத்தியமூர்த்தி பெற்றுக் கொண்டார். விழாக் குழுவினர் உருவாக்கிய அமரர் கல்கி நூற்றாண்டு விழா மலரைத் திரைப்பட இயக்குனர் டி. ராஜேந்தர் வெளியிட, முதல் பிரதியை தொழில் அதிபர் செ. ஜெகன்லால் பெற்றுக் கொண்டார்.

கும்பகோணத்தில் எங்கு நோக்கினும் கோயில்கள் என்பது எல்லோர்க்கும் தெரிந்த சங்கதி. புதிதாய் ஒரு சங்கதி இப்போது புறப்பட்டிருக்கிறது. கும்பகோணத்தில் எங்கு நோக்கினும் துணுக்கு எழுத்தாளர்கள்! வாசக எழுத்தாளர்களுக்கு அரங்கிலேயே சிறுகதை-கவிதை-நகைச்சுவைத் துணுக்குப் போட்டிகள் வைத்து உடனடி முடிவையும் அறிவித்து-பரிசளித்து பரவச உணர்வைப் படரச் செய்தனர் விழாக்குழுவினர்.

தலைமை உரை ஆற்றிய ஜி.ஆர். மூப்பனார், "ஒன்றிணைந்த தஞ்சை மாவட்டத்துக்கும்-அமரர் கல்கி அவர்களுக்கும்-மூப்பனார் குடும்பத்தாருக்கும் இடையே உள்ள முக்கோண பாசப் பிணைப்பை-உண்மையான அன்பை" மலரும் நினைவுகளாக அரங்கிலே அலை பாய விட்டார். "மறைந்தும் மறவாத நிலையில் நம் நெஞ்சங்களில் வாழ்ந்து கொண்டிருக்கும் கல்கி அவர்கள் மற்றவர்கள் மனதைப் புண்படுத்தாத வண்ணம் விமர்சனம் செய்தவர்" என மனம் திறந்து பேசினார் ஜி.ஆர். மூப்பனார்.

முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் கே. கிருஷ்ணமூர்த்தி, "அமரர் கல்கி நூற்றாண்டு விழாவுக்கும், இந்திய அரசியலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு" என்று புதிர்போட்டார். "நூற்றாண்டு விழாவின் தொடக்கத்தில் பாராளுமன்றம் இயங்கிக் கொண்டிருந்தது. நடுவிலே கலைக்கப்பட்டு விட்டது. நூற்றாண்டு விழாவின் முடிவிலே பாராளுமன்றத் தேர்தலும் நடைபெறப் போகிறது" என அவர் போட்ட புதிர் முடிச்சுக்களை அவரே அவிழ்த்து விட்டார்.

"எழுதுவது என்பது எளிதான விஷயமல்ல. எழுத்து என்பது அக்னியைப் போல. ஒரு பெண் கர்ப்பம் சுமந்து பிரசவிப்பது போல் எழுத்தாளர்கள் அக்னியை கர்ப்பம் சுமந்து படைப்புகளைத் தந்து சமூகத்திற்குப் பங்களிப்புச் செய்கிறார்கள். எழுத்துத் துறையில் பன்முக ஆளுமைத் திறன் படைத்தவர் அமரர் கல்கி" என புகழாரம் சூட்டினார் கலை விமர்சகர் தேனுகா.

"வரலாற்று நாவலில் கற்பனையையும் அதே சமயத்தில் தேச விடுதலைப் போராட்டத்தையும் கலந்து தந்தவர் கல்கி. முதுகெலும்புள்ள தேசிய எழுத்தாளராய் அவர் வாழ்ந்தார். எழுத்துலக அவதார புருஷர்" என்று குறிப்பிட்டார் எழுத்தாளர் ஆர்னிகா நாசர்.

வாசக நெஞ்சங்களை சிறை பிடித்து வைத்திருக்கும் எழுத்தாளர் அனுராதா ரமணன் தமது உரையில், "நான் முதன் முதலாகப் படித்த நாவல் பொன்னியின் செல்வன். ஐந்தாவது படித்துக் கொண்டிருந்தபோது வீட்டிலிருந்த படிக்கத் தெரியாத சமையல்கார அம்மாவுக்கு ரீடராய் இருந்து படித்துக் காண்பித்த நாவல். பின்னாளில் அந்த நாவலை மீண்டும் மீண்டும் வாசிக்க நேர்ந்த போதெல்லாம் ஒரு தாயின் மடியில் படுத்திருக்கும் சுகம் எனக்குக் கிடைத்துக் கொண்டே இருந்தது. இறைவனிடம் சென்று ஒருவன் சாகா வரம் கேட்கிறான். அதற்கு இறைவன், "ஒரு எழுத்தாளராக-ஒரு படைப்பாளியாக- ஒரு கவிஞனாக நீ வாழ்ந்து மறைந்தால் இந்த மண்ணில் சாகாத மனிதனாக உலா வருவாய்" என்கிறார். அந்த வகையிலே அமரர் கல்கி அவர்களின் ஸ்தூல சரீரம்தான் நம்மை விட்டுப் போயிருக்கின்றதே தவிர, அவர் எழுதிய எழுத்துக்களின் மூலமாக அவர் நம்முடன் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்" என பெண்மைக்கே உரிய உருக்கத்துடன் அவையோரையும் உருக வைத்துப் பேசினார்.

"அமரர் கல்கி இந்த நாட்டின் இளைஞர்களுக்காக எழுதினார். இந்த விழாவும் இளைஞர்களால் நடத்தப்படுகிறது. நாட்டின் எதிர்காலம் இளைஞர்களிடம் தான் இருக்கிறது. இந்த விழாவைப் பார்க்கும்போது இளைஞர்களிடம் என்போன்றோருக்கு நம்பிக்கையும் ஏற்படுகிறது" என்று தம் வயதை மறந்த இளமைத் துடிப்போடு பேசினார் சிட்டி யூனியன் வங்கி சேர்மன் வி. நாராயணன்.

(தொடர்ச்சி 16ம் பக்கம்)



ஸ்ரீ அருணாச்சலேஸ்வரர்

# நினைத்தாலே முக்தி தரும் திருவண்ணாமலையில் தானத்திலே சிறந்த அன்னதானம் செய்வோம் வாருங்கள்...



ஸ்ரீ அன்னபூரணி

ॐ அடிமுடி காண முடியாத ஜோதி மலையான திருவண்ணாமலையில் மாதாமாதம் பௌர்ணமியன்று லட்சோப லட்ச மக்கள் கூடி கிரிவலம் வருவது நாம் அறிந்ததே.

ॐ ஆன்மீகத்தில் நாட்டங்கொண்ட பலர் தான மனமிருந்தும் பணம் இல்லாத காரணத்தால், புண்ணியம் தரும் தேவரகசியமான அன்னதான பெருமையை தெரிந்திருந்தும், செய்ய வழியறியாத இல்லறவாசிகளுக்கு ஓர் அரிய வாய்ப்பு ஏற்படுத்தியுள்ளோம்.

ॐ இலட்சியங்களை நிறைவேற்ற லட்சங்கள் தேவையில்லை அன்னதானமே அஷ்ட தரித்திரத்தைப் போக்கி அஷ்ட ஐஸ்வர்யங்களைத் தரவல்லது!

**மாதாமாதம் பௌர்ணமி அன்று அன்னதானம் செய்ய "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை"யில் நீங்களும் பங்கு கொள்ளுங்கள்.**

ॐ ஆன்மீக அன்னதான திருப்பணியில் நீங்களும் பங்கேற்று ஸ்ரீ அன்னபூரணி, அருள்மிகு அருணாச்சலேஸ்வரர் அருளை பெறுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

ॐ ஆன்மீக அன்னதான அறக்கட்டளை மூலம் உடல் ஊனமுற்றோர்கள், கண்பார்வையற்றோர்கள், ஆதரவற்ற முதியோர்கள் - விதவைகள் - ஏழைகள் என அனைவருக்கும் அன்னதானம் செய்ய, தாங்கள் இப்புனித பணிக்கு தங்களால் இயன்ற நன்கொடை செய்ய அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

தாங்கள் கீழ்க்கண்ட எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகின்றீர்கள் என்பதை எங்களுக்கு தெரிவித்தால் அதன்படி நாங்கள் அன்னதானம் செய்து பிரசாதத்துடன் ஸ்ரீ அன்னபூரணி, அருள்மிகு அருணாச்சலேஸ்வரர் படத்தை தங்களுக்கு அனுப்பி வைக்கின்றோம்.

❖ பிறந்தநாள் ❖ திருமணநாள் ❖ முன்னோர்கள் திதி நாள் ❖ வாழ்க்கையில் வளம்பெற ❖ தொழிலில் முன்னேற்றம் பெற ❖ நிரந்தர வேலை பெற ❖ புதிதாக தொழில் தொடங்க ❖ புதிதாக வீடு/மனை பெற ❖ கணவன்-மனைவி வாழ்வில் சுகம் பெற ❖ பிள்ளை பாக்கியம் பெற ❖ கல்யாண பாக்கியம் பெற ❖ நோயிலிருந்து சுகம் பெற ❖ மன அமைதி பெற

- இந்த கைங்கரியத்தில் பங்குபெறும் ஆன்மீக அன்பர்களை, எமது 'ஆன்மீகம்' இதழில் புகைப்படத்துடன் அறிமுகப்படுத்துகிறோம்.
- நன்கொடைகள் அவரவர் சக்திக்கு ஏற்ப கொடுக்கலாம். நன்கொடைகள் பணமாகவோ, அல்லது பொருளாகவோ, அதாவது அரிசி, நெய், பருப்பு வகைகள், எண்ணெய், எள், புளி, என்று எந்த பொருளாகவும் கொடுக்கலாம்.
- பணம் அனுப்புபவர்கள் ஆன்மீக அன்னதான அறக்கட்டளை (Aanmeeka Annadhana Charitable Trust) என்ற பெயரில் Cheque / D.D / M.O. மூலம் அனுப்பி வைக்கலாம். உடனடியாக தங்களுக்கு Receipt அனுப்பி வைக்கப்படும்.
- பொருள்கள் அனுப்புவோர் TVS / ABT மூலமாக திருவல்லிக்கேணி, சென்னை-5க்கு அனுப்பி வைத்து எங்களுக்கு தெரிவித்தால் நாங்கள் உடனே Delivery எடுத்துக் கொள்வோம்.

- தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக் கொள்கிறோம்.
- ரூ.500/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் ஒரு வருடத்திற்கு இலவசமாக அனுப்பப்படும்.
- ரூ.1000/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் இரண்டு வருடத்திற்கு இலவசமாக அனுப்பப்படும்.
- ரூ.2500/- அனுப்புபவர்களுக்கு ஆன்மீகம் மாத இதழ் ஐந்து வருடத்திற்கு இலவசமாக அனுப்பப்படும்.

**ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகள் ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டாகும் - ஸ்வாமி விவேகானந்தா**

## அன்னதானத்தைப் பற்றிய நற்செய்தி!

1. அன்னதானத்திற்கு என்ன சிறப்பு என்றால் இதில்தான் ஒருவரை முழுமையாக திருப்திப்படுத்த முடியும். 2. பணம், காசு, ஆடை, ஆபரணங்கள், நிலம், வீடு இதுபோன்றவற்றை எவ்வளவு கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறவர் அதற்கு மேல் தந்தாலும் வேண்டாம் என்று சொல்லவே மாட்டார். அன்னம் போடுகிற போதுதான் ஒருவர் என்னதான் திரும்பத் திரும்ப உண்டாலும் ஓரளவுக்கு மேல் உண்ண முடியாது. 3. தானம் செய்யும்போது ஆர்வத்தோடு மனமுவந்து முக மலர்ச்சியுடன் சர்வ சந்தோஷமாக செய்யும் தானத்தில்தான் முழுமையான பலன் கிடைக்கின்றது.

**Cheque / D.D / M.O அனுப்ப வேண்டிய முகவரி :**




## ஆன்மீக அன்னதான அறக்கட்டளை (REGD.)

63, மல்லன் பொன்னப்ப தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

தொலைபேசி : 8594741, 8594742, 8594743, 8410633.

ஃபேக்ஸ் : 91 - 044 - 8594561




**எ**ன் கணிப்பு பொய்யாகவில்லை. தமிழ்மணி அந்த லாட்டரி விற்கும் சிறுவனி டம் வசமாக மாட்டிக் கொள்ளப் போவதை நினைத்தபோது பரம சந்தோஷமாக இருந் தது.

ஊருக்கே உடைசல் தரும் மனிதன். இன்று அவனுக்கும் அதிர்ஷ்டம்; அதன் நிமித்தம் பரபரப்புகள், பரவசங்கள்.

"யாரு தமிழுக்கா லாட்டரி உழுந்துருக்கு? நம்ம டாய் தமிழ்மணிக்கா?"

"பின்ன... நாங்க என்ன அரேபியா பாஷையா பேசிக்கிட்டிருக்கோம். அந்தப் பயலுக்குத்தான் லாட்டரி அடிச்சிருக்கு..."

"ஐயோ நல்ல நாள்ளேயே அவன் அளக் கற அளப்ப தாள முடியாதே. இதுல லட்ச ரூவா வேற கிடைச்சா தரைல நடக்க மாட் டானே..."

என் சகாக்கள்தான் ஆளானுக்கு கமெண்ட் அடித்தார்கள். அப்படியே வழி மேல் விழி வைத்து அவனுக்காக எதிர் பார்க்கவும் செய்தோம்.

நிமிடத்திற்கொருமுறை அந்தப் பொடி யன் வேறு வந்து வந்து எட்டிப் பார்த்து விட்டுப் போனான்.

தமிழ்மணிக்கு சீட்டு விழுந்த விஷயம் பரபரவென்று பஸ் ஸ்டாண்ட முழுக்கப் பரவி விட்டது. அந்தச் சிறுவனுக்கும் மவுசு கூடி விட்டது. இரண்டு கைகளிலும் ஏகத் துக்குச் சீட்டுக்களுடன் உற்சாகமாதச் சுற்றி வர ஆரம்பித்தான்.

"பொடியன் உஷார் பார்ட்டின்னு நினைச்சேன். பரவால்ல, லக்கான ஆள்தான். வாடா இங்கன, ஒரு அஞ்சு சீட்டு தாடா..."

"வெண்ண... வெண்ண சோத்துக் கையால தாடா. எனக்கும் லட்ச ரூவா




உழுவணும்னு வேண்டிக்கிட்டு தா."

"எலே... அதான் நீ வித்த சீட்டுக்கு ரூவா உழுந்திரிச்சுல்ல? இன்னும் என்னடா கூவிக் கூவி வித்துகிட்டு? பஸ் ஸ்டாண்டு லையே ஒரு கடைய பிடிச்சு ஒக்காந்து விக் கப் பாருடா. அந்த லட்ச ரூவா உழுந்தவ னோட ஒரு போட்டா படம் எடுத்து மாட்டி வெச்சுக்க... என்ன?"

"அதாண்ணே அந்தாளைத் தேடறேன். ஆளையே காணோம்?"

''வந்தா உட்றாதே. எதாவது பாத்து போட்டுக் கொடுக்கச் சொல்லு. உன் முதலா ளிக்கும் வகையா கமிஷன் இருக்கும். உட் றாதே. என்ன?"

ஆப்பிள் ஆரஞ்சு பேரீச்சை என்று கடை போட்டிருக்கும் சகாக்கள் அந்தப் பொடி யனை நன்றாகவே ரேக்கி விட, அவன் முகத்தில் மத்தாப்புப் பளபளப்பு. கூடவே அதில் தமிழ்மணியை இன்னமும் பார்க்க முடியவில்லையே என்னும் ஏக்கம்.

எனக்கென்னவோ தமிழ்மணி அன்று இவனிடம் சொன்னது போல, விழுவதில் பாதியை, அதாவது ஐம்பதாயிரத் தைத் தூக்கி இந்தச் சிறுவனுக்குத் தருவான் என்று தோன்றவில்லை.

சொல்லுக்கும் செயலுக்கும் சம்பந்தமே இல்லாதவனிடம் இதை எதிர்பார்ப்பதும் தவறுதான் என்று தோன்றிற்று. ஆனால் என் சகாக்கள் தமிழ் பணம் தராவிட்டால் நோண்டி நொங்கு எடுத்து விடுவது என்கிற தீவிரத்தில் இருந்தார்கள்.

அவர்களுக்கெல்லாம் இது அல்வா போலக் கிடைத்திருக்கும் சந்தர்ப்பம் அல் லவா?

மொத்தத்தில் தமிழ் அன்று எங்கள் பஸ் புறப்படும் வரையில் வரவேயில்லை.

"நீ வேணா பாரு சீனி. பய இனி ஆபீஸ் பக்கமே வர மாட்டான். எவண்டா இனியும் மூணு ஷிப்டை பாத்துகிட்டு மையையும், ஆயிலையும் அப்பிக்கறதுன்னுட்டு நினைச் சிருப்பான்..."

"ஆமாம்ல...?"

கம்பெனியிலேயே சூப்ரவைசரோட மோதல் வரும்போதெல்லாம் லட்ச ரூவாய தரச் சொல்லுங்க; திரும்பிப் பாக்காம போயிடறேன்னு சொல்லிக்கிட்டிருப்பானே. இனி என்னாத்த பண்ணப் போறான்?"

''அவனை மாதிரி ஆளுக்கெல்லாம் லட்ச ருவாங்கறது ஒரு விசயமா பாண்டி.

அமரர் கல்கி நூற்றாண்டு
1899-1999
100

நினைவிருக்கிறதல்லவா!

# அமரர் கல்கி நூற்றாண்டு சிறப்புப் போட்டிகள்!

## நகைச்சுவைப் பயணக் கட்டுரைப் போட்டி : பரிசு ரூ. 10,000

● உள்நாட்டு, வெளிநாட்டு, ஏன் பக்கத்து ஊர்ப் பயணம் குறித்தும் எழுதலாம்.

● இடைவிடாது சிரிக்கும்படி கட்டுரை அமைய வேண்டும்.

● பயணக் கட்டுரைக்கான இதர இலக்கணங்கள் - வரலாறு, பூகோளக் குறிப்புகள், வர்ணனைகள், மக்கள், இயற்கை, பழக்க வழக்கங்கள் யாவும் அமையப் பெற வேண்டும். நகைச்சுவையுடன் தகவல்களைப் பின்னித் தர வேண்டும்.

● இக்கட்டுரை கல்கியில் 5 முதல் ஆறு பக்கங்களுக்குள் (படங்கள் உள்பட) அடங்கும்படி அமைய வேண்டும்.

கடைசி தேதி : ஜூன் 10, 1999.

## வாசகர்களுக்கான போட்டி: பரிசு ரூ. 5,000

கல்கி கலெக்ஷன் பகுதியை உன்னிப்பாகப் படித்து வாருங்கள்.

பொன்னியின் செல்வன் நீங்கலான பகுதியில் இடம்பெறும் கட்டுரை/கவிதைகளுள் உங்களை அதிகம் கவர்ந்தது எது? ஏன்...? என்பதை ஒரு பக்க விமர்சனமாக எழுதி அனுப்புங்கள்.

● இந்த இதழ் வரையிலான கல்கி கலெக்ஷன் பகுதியைத் தொடர்ந்து படித்து, பிறகு சிறந்த ஒன்றைத் தேர்வு செய்து விமர்சனம் எழுதுங்கள்.

● விமர்சிக்கப்படும் கட்டுரை இடம்பெற்றுள்ள இதழ் தேதியைக் குறிப்பிட்டு எழுத வேண்டும்.

● விமர்சனம் கல்கியில் ஒரு பக்கத்திற்குள் அடங்கும்படி அமைய வேண்டும்.

கடைசி தேதி : ஜூன் 20, 1999.

ரூவாய்க்குப் பத்து வட்டின்னு கந்து வட்டில தான் இறங்குவான்னு நினைக்கறேன்."

டாவ் தமிழ்மணி என்ன செய்வான் என்று ஆளாளுக்கு கணக்குப் போட்டபடி இருக்க, நாங்கள் பயணிக்க வேண்டிய பஸ்ஸ௱ம் புறப்பட்டது.

**வ**ழக்கம் போல வவ்வால் ஆகி கம்பியைப் பிடித்தபடி நிற்கத் தொடங்கினோம். உட்கார இடம் இருந்தது. ஆனாலும் உட்காரக் கூடாது.

"கிட்டவழி டிக்கெட்டெல்லாம் நில்லு. தூர டிக்கெட்டுக்குதான் சீட்டு. பெருங்குடியெல்லாம் ஸ்டாப் கிடையாது. யாரும் ஏறியிருந்தா இறங்கிருங்க. அப்பால வண்டில ஏறிக்கிட்டு இரைச்சல் பண்ற வேலை வேணாம். ரை... ரை.."

கண்டக்டர் மாறாத அர்ச்சனை மந்திரம் போல தினமும் சொல்வதை அன்றும் சொல்லி வண்டியைக் கிளப்ப, நான் வெளியே பார்க்க ஆரம்பித்தேன்.

படையப்பா ரஜினியை மகாவிஷ்ணுவாக்கி ஓம் வீராய நமஹ, ஓம் முத்தாயை நமஹ, படையப்பனே நமஹ என்று ஸ்லோகம் சொல்லும் ஒரு போஸ்டர்தான் முதலில் கண்ணில் பட்டது.

பாண்டியர் காலம் தொட்டே கலை வளர்ப்பதில் என் ஊர் நிகரற்றதாயிற்றே? கலைக்காக உடல், பொருள், ஆவியைக் கொடுக்கும் ஜனங்களுக்கு நடுவில் நான் மட்டும் வவ்வாலாகத் தொங்கியபடி வேலைக்குப் போவதும் வருவதும் ஒரு இன்டர்நெட் யுகத்து இளைஞனின் செயலாகவே படவில்லை.

பேசாமல் நானும் லாட்டரி வாங்கியிருக்கலாம். அந்த லட்சம் எனக்கு விழுந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

என்னை நானே தாழ்த்திக் கொண்டு நிற்க, பஸ் நிற்குமிடமெல்லாம் ஆட்கள் ஏறினார்கள். உள் கட்டில் அழுத்தம் ஏற்பட்டு நெறிப்பேற்பட்டது. இதற்கு நடுவில் கண்டக்

டரால் மட்டும் எப்படி திருகிக் கொண்டு ஒரு ஸ்க்ரு டிரைவராகச் செயல்பட முடிகிறதோ என்று எனக்கு ஆச்சரியமேற்பட்டது.

நடுவில் ஒரு ஸ்டாப்பில் ஓடிவந்து தாவி ஏறினான் டாவ் தமிழ்மணி.

பஸ் ஸ்டாண்டில் ஏறினால் அந்தச் சிறுவனை சமாளிக்க வேண்டிவருமே என்று ஏறும் இடத்தை இப்படி மாற்றிக் கொண்டு விட்டானா?

"தமிழ்...!"

"ஏய் டாவ்... என்னய்யா லட்ச ரூவாயா? குபேரனையே கணக்குப் பண்ணிட்டியா?"

"என்னா தமிழ் அதிசயமா இருக்கு. பரிசு விழுந்தப்புறமும் வேலைக்குல்லாம் வரே."

என் சகாக்கள் அவனைப் பார்த்து உதிர்க்கும் கருத்துக்கெல்லாம் ஒரு ஏளனச் சிரிப்பைப் பதிலாக வைக்கிறான் தமிழ்மணி.

"எப்பவும் பழச மறக்கறவன் இல்ல இந்த தமிழ்..." என்று தனக்குத்தானே ஒரு பெரிய தாமரைப் பூவாகப் போட்டுக் கொண்டான்.

எனக்குச் சிரிப்பு வந்தது. அவனும் என்னைப் பார்த்துவிட்டு முண்டியடித்துக் கொண்டு முன்னால் வந்தான்.

அந்தக் கூட்டத்துக்கு நடுவிலும் கைகொடுத்தேன்.

"கங்கிராஜுலேஷன்ஸ்!"

"தேங்க்ஸ் கொமார்.... ஏதோ சாமி கருணை..."

"சீட்ட பேங்கல சப்மிட் பண்ணிட்டியா?"

"எதுக்கு?"

"எதுக்கா.... பணம் வாங்கத்தான்!"

"அது தெரியும்... ஆனா வரி நரி குதிரைன்னு ஏகத்துக்கும் பிடிப்பான். அதனால..."

"அதனால?"

"நமக்குத் தெரிஞ்ச ஒரு பார்ட்டி இருக்கார். அவர்கிட்ட சீட்ட கொடுத்தா அவர் ஃபுல் கேஷை ஒரே கட்டா கொடுத்துடுவாரு. அவருக்கும் பிளாக்கை ஒயிட்டா மாத்திக்க ஒரு வழி கிடைச்ச மாதிரி. எனக்கும் ஃபுல் அமௌண்ட் கிடைச்ச மாதிரி... எப்படி?"

தமிழ் காலரைத் தூக்கி விட்டுக் கொண்டான். எனக்குச் சற்றே கிர்ர்ரடித்தது.

தேவுடா... உலகத்தில் இப்படி எல்லாம் வழிகளா?

"என்னா கொமார் வாயப் பொளந்துட்டே.... நான் சீட்டக் கொடுக்காமலே அந்த பார்ட்டி நான் பணம் கேட்டா தருவார் தெரியுமா?"

தெரியாது என்பது போலப் பார்த்தேன்.

"உனக்கும் ஏதாவது ஹெல்ப் வேணும்னா சொல்லு. செய்றேன்."

ஐயோ... மனத்தில் பதைப்பு பெருக்கெடுத்தாலும் உதட்டில் வேறு மாதிரி காட்ட ஆரம்பித்தேன்.

"ஆமா... என்ன பஸ் ஸ்டாண்டுல ஏறாம வழியில ஏறியிருக்கே?"

"அது வந்துப்பா.... ஒரு வேலையா வில்லாபுரம் வந்தேன். அப்படியே வழில ஏறிட்டேன். ஏன், எந்த நாயாவது நான் இனி பஸ் ஸ்டாண்டு பக்கமே வரமாட்டேன்னாங்களா?"

"இல்ல.. இல்ல... சும்மாத்தான் கேட்டேன்."

"அதான பார்த்தேன். நான் என்னமோ அந்த லாட்டரிப் பையன பாக்கறதுக்கு பயந்துகிட்டு பஸ் ஸ்டாண்ட் பக்கம் வராம இருந்துட்டேன்னும் பேசியிருப்பாங்களே...?"

"இல்லப்பா... நான்தான் கேட்டேன். யாரும் எதுவும் பேசலை."

"பேசட்டுமே... இப்ப யார் அத பெரிசா எடுத்துக்கப் போறா?"

"சரி... நான் நேர்லையே கேக்கறேன். அந்தப் பையனுக்கு என்ன பண்ணப் போறே?"

நான் இப்படிக் கேட்ட நொடி தமிழ்மணியின் முகத்தில் அஷ்டகோணல் உருவகித்தது. மெல்ல என்னை மிக நெருங்கி, காதோரமாக அவன் சொன்னதில் அது இடம் மாறி என் முகத்திற்குத் தாவியும் விட்டது!

(தொடரும்)

---

**"என்னது? காட்டுக்குள்ள கேசட் விற்கப் போறியா?"**

**"ஆமா சார்! வீரப்பன் நம்ம கஸ்டமராச்சே!"**

**– ச. தமிழ்ச் செல்வி**



(10ம் பக்கத் தொடர்ச்சி)

இளமைத் துள்ளலுடன் மேடையேறிய இளம் இயக்குனர் எழில் உரை நிகழ்த்த நேர்ந்தபோது 'புது மணப் பெண்ணின்' நாணம் அவரிடம் குடிகொண்டிருந்தது. நாகை மாவட்டத்துப் புது மாப்பிள்ளைக்கு ஒலி பெருக்கியின் முன்னால் வந்து நின்றதும் வெட்கம் வந்து விட்டது போலும்.

அவர் பங்கையும் தம் பங்கில் சேர்த்துக் கொண்டு 'கலகலப்பு' ஊட்டினார் அடுத்துப் பேச வந்த திரைப்பட இயக்குனர் டி. ராஜேந்தர்.

கும்பகோணத்து வெண்கலப் பாத்திரக் கடைக்குள் செந்தமிழ் யானை ஒன்று புகுந்து கொண்டு அமர்க்களப் படுத்துவது போலிருந்தது அவரது பேச்சு. (கோவிச்சுக் காதீங்க டி.ஆர். சார். உவமைகள்னா உங்களுக்குத்தான் ரொம்பப் பிடிக்குமே!) அடுக்கு மொழித் தொடரை அவிழ்த்துக் கொட்டி அரங்கிலே தொடர்ந்து கரவொலி பெற்றுக் கொண்டிருந்தார் டி.ஆர்.

"விழா எடுத்திருப்பது தஞ்சை-நாகை-திருவாரூர் மாவட்ட எழுத்தாளர் கூட்டமைப்பு. மூன்று நகரையும் ஒரு கோடு வரைந்து ஒன்று சேர்த்தால் கிடைப்பது ஒரு முக்கோணம். அதனுள்ளே இருப்பது கும்பகோணம். இப்படிப் பேசுவதே என் கோணம்'' எனக் குறிப்பிட்ட அவர், "பொன்னியின் செல்வன் நாவலை தொடக்கம் முதல் முடிவு வரை அப்படியே திரைப்படமாய் எடுக்க வேண்டும் என்கிற கனவு-எண்ணம் எனக்கு உண்டு'' என்று சொன்ன போது அனைவரும் கைதட்டி ஆர்ப்பரித்தனர்.

நிகழ்ச்சியின் தொடக்கம் முதல் முடிவு வரைக்கும் சமயோசிதமாகவும் சுச்சிதமாகவும் சுவையான வர்ணனையுடன் நிகழ்ச்சியைத் தொகுத்துத் தந்தார் திருநீலக்குடி மா. உலகநாதன்.

இறுதியாய் ஏற்புரை நிகழ்த்தினார் கல்கி ராஜேந்திரன்.

''சரித்திரக் கதை எழுதிய சரித்திர புருஷர் அவர். ஒருமுறை கல்கியும், எஸ்.எஸ். வாசனும் மைசூர் சுற்றுப் பயணம் சென்றிருந்தார்கள். திப்புசுல்தான் சமாதியைப் பார்த்ததும் வாசன் அவர்கள் கல்கியிடம் கேட்டார்: ''எதைப் பற்றியும் நகைச்சுவையாகப் பேசும் உமக்கு, இந்த திப்புசுல்தான் சமாதியைப் பார்த்ததும் என்ன தோன்றுகிறது?''

உடனே பதில் தந்தாராம் கல்கி, "இவ்வளவு அழகான கலை நயமான சமாதியைப் பார்க்க திப்புசுல்தானுக்குக் கொடுத்து வைக்கவில்லையே'' என்று. இன்று மிகச் சிறப்பாக நடைபெற்றுக் கொண்டிருக்கும் கும்பகோணம் விழாவைப் பார்க்கும்போது எனக்கும் அதுதான் தோன்றுகிறது. இந்த விழாவைக் கண் குளிரக் காண அமரர் கல்கி அவர்கள் நம்மிடையே இல்லையே என்றுதான் எனக்கும் எண்ணத் தோன்றுகிறது.'' நகைச்சுவையுடனும் அதே சமயத்தில் சட்டெனத் தாக்கும் சோகம் கலந்த அடிமனதின் ஆழத்திலிருந்து வெளிவந்த வார்த்தைகளிலும் அனைவரது உள்ளமும் ஒரு கணம் உருகிப் போனது.

**— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

## ஷாலினியின் தியாகம்

அம்மன் வேஷத்தில் நடித்தால், நமது நடிகைகள் அசைவத் தியாகம் செய்வார்கள். பிறகு அதுபற்றி குருவி, காக்கை, சீல், வால் ரைையெல்லாம் கூப்பிட்டு பேட்டி கொடுப்பார்கள்.

'காதலுக்கு மரியாதை' செய்த ஷாலினி சமீபத்தில் செய்திருக்கிற தியாகம் வெயில் காலத்துக்கு ஏற்ற தல்ல!

'அமர்க்களம்' படத்தில் ஷாலினி நடிக்கிற பழைய செய்தியுடன் அவர் அதில் சொந்தக் குரலில் பாடும் புதிய செய்தியைச் சேர்த்துக் கொள்ளுங்கள்.

பாட்டென்றால் சும்மாவா? ஷாலினி தனக்குப் பிரியமான ஐஸ்கிரீமுக்குப் பதினைந்து நாள் பிரியாவிடை கொடுத்துவிட்டுப் பாடியிருக்கிறார்.

''பாடல் பிரமாதம்'' என்கிற இயக்குநர் சரண், ஷாலினிக்கு அளித்த அன்புப் பரிசு – 9 கிலோ ஐஸ்கிரீமாம்!

அம்மணி அப்படியே சாப்பிட்டாரா, அவ்வப் போது சாப்பிட்டாரா என்பதுதான் தெரியவில்லை.

– ரம்யா

உங்க தலைமையிலே
கை சின்னம்
வெற்றி மேல வெற்றி
குவிக்கப் போவுது....

பவார்



1999 மே 30
பிரமாதி வைகாசி 16
மலர் : 57
இதழ் : 44

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## சோனியாவுக்கு எதிராக சதி!

தலைநகரில் மீண்டும் ஒரு நாடகம் அரங்கேறியிருக்கிறது. சூழ்ச்சி, சதி, சோகம், கோபம், தாபம், கண்ணீர் என்று பலவிதமான சுவைகளடங்கிய நாடகம்! கதாநாயகி சோனியா காந்தி, வீராங்கனை போல் போராடாமல் கோழைத்தனமாக ராஜினாமா செய்திருப்பது நாடகத்தின் ஆன்ட்டி-கிளைமேக்ஸ்! ஆனபோதும் திரை இறங்கவில்லை; நாடகம் தொடர்கிறது!

ராஜீவின் மனைவி, இந்திராவின் மருமகள் காங்கிரஸ் தலைவியாவதில் கட்சிக்கு ஏகப்பட்ட அனுகூலம் என்பதை உணர்ந்து, அவரை அரசியலுக்கு இழுத்து, அப்பொறுப்பைத் தலையில் கட்டினார்கள் மூத்த காங்கிரஸ் தலைவர்கள். சோனியாவும் கட்சி நலனை உத்தேசித்து அப்பொறுப்பை ஏற்பதாகக் கூறினார்.

அவர் தலைமையேற்ற பின் நடந்த மாநிலத் தேர்தல்களில் காங்கிரஸ் கணிசமான இடங்களை வென்றது.

அவ்வாறிருக்க, இப்போது சோனியாவின் இத்தாலியக் குடியுரிமையை அவரது கட்சிக்காரர்களே ஒரு பிரச்னையாக்கியிருப்பதற்குக் காரணம் உண்டு: கட்சித் தலைவர் நாளை பிரதமராகி விட்டால் அப்புறம் வாரிசு அரசியல் தழைக்கும்; இவர்கள் தங்கள் வாழ்நாளில் பிரதமராகவே முடியாது. எனவேதான், வரவிருக்கும் தேர்தலில் அயல்நாட்டவரான




சோனியா காந்தியைப் பிரதமராக முன் நிறுத்தக் கூடாது என பவார், சங்மா, தாரிக் அன்வர் அடங்கிய மூவர் அணி ஆட்சேபித்திருக்கிறது.

காங்கிரஸ் தலைவியாகப் பொறுப்பேற்க அழைத்தபோதும், பின்னர் தேர்தல் பிரசாரங் களில் ஒத்துழைத்தபோதும் இந்த இத்தாலியக் குடியுரிமை ஒரு பொருட்டாகத் தெரியவில்லை பவார் அண்ட் கோவுக்கு! ஆனால் சோனியாவே பிரதமராகிவிட வாய்ப்பிருக்கிறது என்னும் போது இந்த ஆட்சேபனையை எழுப்பியிருக்கிறார்கள். இத்தனை நாள் பேசாமலிருந்துவிட்டு இப்போது ஏன் இத்தாலியக் குடியுரிமையைப் பிரச்னையாக்குகிறார்கள் என்றால், இதற்கான திட்டம் அன்றே தீட்டப்பட்டுவிட்டது என்பதுதான் பதில். காத்திருந்து, சோனியாவால் அடையக் கூடிய ஆதாயங்களை அடைந்தபிறகு இப்போது 'அயல்நாட்டுக்காரர் பிரதம ராவதா...?' வசனத்தைப் பேசுகிறார்கள்!

நாட்டின் பிரதமர் பதவி, பொறுப்பும் சவால்களும் நிறைந்தது. அதைச் சமாளிக்கும் அரசியல் சாதுர்யமும் அனுபவமும் ராஜதந்திரமும், ஏன் மொழி வல்லமையும்கூட சோனியா காந்திக்கு இல்லை என்பது கடந்த சில மாதங்களாக நடந்து வரும் நிகழ்ச்சிகளிலிருந்து தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது. ஆனால் பவார் அதைச் சொல்ல மாட்டார்.

ஜெயலலிதாவின் துர்ச்சகாயத்தை நம்பி பி.ஜே.பி. ஆட்சியைக் கவிழ்த்துவிட்டு, பின்னர் மாற்று அரசு அமைக்க இயலாமல் சோனியா மூக்குடைபட்டுப் பின்வாங்க வேண்டியிருந் தது.

அதன் பிறகும் 46 வழக்குகள் பதிவாகியுள்ள ஜெயலலிதாவுடன் அரசியல் ஒப்பந்தம் செய்து கொள்ள சோனியா தயாராக இருந்தார்! காரணம் என்ன...? கூட இருந்து குழி பறிக்கும் கும்பலின் தவறான ஆலோசனைகள்தாம். வேண்டுமென்றே கொடுக்கப்பட்ட இந்த ஆலோசனைகளை ஏற்று சோனியா ஏமாந்து போனார். இதற்குக் காரணம், பரி தாபகரமான அவரது அரசியல் அனுபவமின்மைதான். இதுதான் அவரைப் பிரதமர் பதவிக் குத் தகுதியற்றவராக்குகிறது. அவரது இத்தாலியக் குடியுரிமையைவிட முக்கியமாகக்




கருதப்பட வேண்டியது இந்த ஆற்றலின்மைதான்.

ஆனால், அவருக்குத் தவறாக வழிகாட்டி, அவர் தவறுகள் இழைத்தபோது துணைநின்று ஊக்குவித்து வஞ்சித்த காங்கிரஸ் 'பரிவார தேவதைகள்' இன்று இத்தாலியக் குடியுரிமையைத்தான் துருப்புச் சீட்டாக்கி அதே சோனியாவுக்கு எதிராக விளையாடுகிறார்கள்.

சுற்றியிருப்பவர்களின் சூழ்ச்சியை எதிர்கொள்ளத் தெரியாத, அரசியல் அனுபவமற்ற சோனியா காந்தி, எவ்வாறு ஒரு சிறந்த பிரதமராக இயங்க முடியும்? அப்பதவியில் அமர்த்தப்பட்டால் அவர் தம்மையும் நாட்டையும் சேர்த்து காவுகொடுத்துவிடுவார்- அறியாமை காரணமாக!

இப்போதும் ஒன்றும் தாமதமாகிவிடவில்லை...

'நான் பிரதமராவதற்காக உழைக்கவில்லை; கட்சியின் வெற்றிக்காக உழைக்கிறேன். தேர்தலுக்குப் பிறகு நாடாளுமன்ற உறுப்பினர்கள் கூடி நாடாளுமன்றக் கட்சித் தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள்...' என்று சோனியா காந்தி கூறுவாரேயானால், முரண்டு பிடிக்கும் மூவரும் வாயடைத்துப் போவார்கள்.

ஆனால் சோனியா ராஜினாமா செய்ய; அவரது ஆதரவாளர்கள் அவரைத் தொடர்ந்து மந்தை மந்தையாகப் பதவி துறக்க, இனி நான் காங்கிரஸ் பக்கம் வரவில்லை என சோனியா சூளுரைக்க, ப்ரியங்காவை முன்னிறுத்தலாமா என்று ஒரு சிலர் யோசனை கிளப்ப... சொன்னது சொன்னதுதான் என்று பவார் முரண்டு பிடிக்க... கட்சியிலிருந்து மூவர் அணி வெளியேற்றப்பட, ஆதாயம் அடைந்திருப்பது பி.ஜே.பி!

சோனியா இல்லாத காங்கிரஸ் அடியோடு ஆட்டங்கண்டிருப்பதால், வரவிருக்கும் தேர்தலில் அக்கட்சியால் குறிப்பிடத்தக்க இடங்களைப் பெற முடியாது.

ஒரு வலுவான மாற்றுக் கட்சியில்லாத நிலையில், பி.ஜே.பி. கூட்டணி சுலபமாக நிறைய இடங்களைப் பெற்று வெற்றியடையும். தட்டிக்கேட்க பலமான எதிர்க்கட்சியில்லாது போனால் பி.ஜே.பி.யின் மதவாதப் போக்கு அபாயகரமான எல்லைகளைத் தொடக்கூடும்!

# எண்ணிக்


• சாவி

நான் எழுத்தாளனாகத்தான் வாழ்க்கையை ஆரம்பித்தேன். கதை எழுதி அல்ல; விளம்பர போர்டு எழுதி!

ரோடில் போகிறபோது அண்ணாந்து பார்த்துக் கொண்டே போவேன். எந்தக் கடையிலோ, ஆபீசிலோ, போர்டு சரியில்லை என்றால், உடனே உள்ளே போய் "நான் விளம்பர போர்டு எழுதுபவன்; உங்கள் கடையின் வெளியே வைத்திருக்கும் போர்டு அழிந்திருக்கிறது. என்னிடம் கொடுங்கள்; அழகாக எழுதிக் கொடுக்கிறேன்" என்று சொல்லுவேன். சிலபேர் போர்டு எழுதிக் கொடுக்கச் சொல்வார்கள். அவர்களுக்கு எழுதிக் கொடுத்து சம்பாதிப்பேன்.

அப்படி ஒரு நாள் அரண்மனைக்காரன் தெருவில் நடந்து போய்க் கொண்டிருந்தபோது, 'விசித்திரன்' என்ற பத்திரிகையின் போர்டு கண்ணில் பட்டது. அதில் எழுத்துகள் அழிந்து போயிருந்தன. உள்ளே போய்ப் பத்திரிகை முதலாளியிடம் "போர்டு சரியில்லை! நான் எழுதித் தருகிறேன்" என்றேன். 'என்ன கூலி கேட்பாய்?' என்றார். 'பெயிண்ட் செலவு சேர்த்து ஐந்து ரூபாய்' என்றவுடன் சம்மதித்தார். அட்வான்ஸ் கேட்டேன். "உன் கூலியை விட அதிக மதிப்புள்ள போர்டையே உன்னை நம்பிக் கொடுத்திருக்கிறேனே! அப்புறம் எதற்கு அட்வான்ஸ்?" என்றார். சரி, எழுதிக் கொடுத்துவிட்டு, அந்த ஐந்து ரூபாயை வாங்கிக் கொள்வதாகச் சொல்லிவிட்டு, போர்டுடன் புறப்பட்டேன்.

அழகாக 'விசித்திரன்' என்று எழுதி, போர்டை டெலிவரி செய்தேன். பணம் கேட்ட போது "கையில் பணமில்லை; அப்புறம் வா" என்றார். எப்போது போனாலும் இழுத்தடித்தாரே தவிர, பணம் தரமாட்டார். ஒரு வழியாக, எட்டணா கொடுத்தார். அதன்பின், என்னைப் பார்ப்பதைத் தவிர்க்க ஆரம்பித்தார். நாளடைவில், என்னிடம் அவருக்கு ஒருவித பயமே வந்து விட்டது!

அதை எனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள நினைத்தேன்.

ஒரு நாள் அவரிடம், "பணபாக்கி ஒரு பக்கமிருக்கட்டும்; ரொம்ப நாளாக எனக்குப் பத்திரிகை ஆபீசில் வேலை பார்க்க வேண்டும்; கதை எழுத வேண்டும் என்று ஆசை! எனவே எனக்கு உங்க பத்திரிகையில் ஒரு வேலை கொடுங்கள்" என்றேன்.

"அதுதானே! தாராளமாக. இன்றே வேலைக்குச் சேரலாம்!" என்று சொல்லி, ஒரு நாற்காலியைக் காட்டினார். வேலை கொடுத்து விட்டாரே தவிர, சம்பளம் பற்றி ஒன்றுமே பேசவில்லை.

பத்து நாள் கழித்து, மெதுவாக நான் சம்பளம் பற்றிப் பேசியபோது, "முதலில் இருபத்தைந்து வாங்கிக் கொள். ஐந்தாறு மாதங்களில், உன் வேலையைப் பார்த்துவிட்டு முப்பத்து ஐந்து தருகிறேன்" என்றார்.

எனக்கு சந்தோஷம் தாங்கவில்லை. காரணம், இருபத்தி ஐந்து ரூபாய் என்பது அந்தக் காலத்தில் மிகப் பெரிய தொகை. மாதம் முடிந்தது. சம்பள தினத்தன்று ஆசிரியர் என்னைக் கூப்பிட்டார். வண்ணக் கனவுகளுடன் போய் அவர் முன் நின்றேன்!

"முனுசாமி! இவருக்கு இருபத்தைந்து எண்ணிக் கொடு!" என்றார். முனுசாமி அச்சகத்தில் வேலை செய்பவர் என்ப

# கொடுத்த இருவத்தஞ்சு!

தால், எனக்குக் கொஞ்சம் குழப்பம். அது திருவதற்குள், முனுசாமி அந்த மாதத்து விசித்திரன் இதழின் பிரதிகள் இருபத்தைந்து எண்ணி எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தார்.

இருபத்தைந்து விசித்திரன் இதழ்களை விற்று, நான் காசு சம்பாதித்துக் கொள்ள வேண்டுமாம்! பஸ் ஸ்டாண்டு, ரயில்வே ஸ்டேஷன் என்று சுற்றி, பத்திரிகை விற்க முயன்ற என் முயற்சி பலிக்கவில்லை. அந்த பத்திரிகைக் கட்டை அப்படியே எடுத்துக் கொண்டு போய், பழைய பேப்பர் கடையில் போட்டேன். எட்டணாவோ, ஒரு ரூபாயோ கிடைத்தது. அந்த எட்டணாவில், வயிறார டிபன் சாப்பிட்டது எனக்கு இன்னமும் நன்றாக நினைவிருக்கிறது.

**க**ல்கியிலிருந்து வெளியில் வந்த பின் நான் ரொம்பவும் பணக் கஷ்டம் அனுபவித்தேன்! திடீரென்று ஒருநாள் சின்ன அண்ணாமலை என்னைத் தேடி என் வீட்டுக்கு வந்தார். கிங்காங்–தாரா சிங் இரண்டு பேரையும் வரவழைத்து மல்யுத்தம் நடத்தப் போகிறார்கள். நான் தான் விளம்பரப் பொறுப்புகளை ஏற்றுக் கொண்டிருக்கிறேன். நீங்க எனக்கு உதவியாக இருக்க வேண்டும். லாபத்தில் இரண்டு பேருக்கும் பங்கு உண்டு' என்று சொல்லி, அட்வான்ஸாக நூறு ரூபாய் கொடுத்தார். நூறு ரூபாய் நோட்டைப் பல மாதங்களுக்குப் பிறகு நான் அப்போதுதான் பார்த்தேன். ஆனந்தக் கண்ணீர் வந்து விட்டது!

சென்னை, மதுரை, கோயமுத்தூர், பெங்களூர் என்று கிங்காங்–தாராசிங் மல்யுத்தப் போட்டிகள் பெரிய அளவில் நடந்தன. மக்களிடையே அமோக வரவேற்பு. என் பத்திரிகையாளன் புத்தி அங்கே வேலை செய்தது. மல்யுத்தப் போட்டி நடந்த நாட்களில் எல்லாம், மல்யுத்த மலர் என்று ஒரு பத்திரிகை கொண்டு வந்தேன். ஒரு இதழ் பத்து பைசா. பத்தாயிரம், பத்தாயிரம் பிரதிகளாக அச்சிடுவேன். அத்தனையும் விற்றுத் தீர்ந்து விடும்.

மல்யுத்தப் போட்டிகள் பெங்களூரில் நடந்து முடிந்ததும், எங்களுக்குரிய லாபப் பங்குடன் சென்னைக்குக் காரில் புறப்பட்டோம். டிக்கியில் ஒரு தகரப் பெட்டியில்தான் மொத்தப் பணமும் இருந்தது. சித்தூர் காட்டுப் பகுதியில் நடு இரவு தாண்டிய பின் கார் வந்து கொண்டிருந்தது. ஒரு திருப்பத்தில் ரோட்டின் குறுக்கே கட்டை வண்டி ஒன்று நிறுத்தப்பட்டிருந்தது. அதை ஒட்டி வாட்ட சாட்டமாகப் பத்து, பன்னிரண்டு பேர் நின்று கொண்டிருந்தனர்.

எங்களுக்கு பகீரென்றது. வயிறு சில்லிட்டுப் போனது. வியர்த்து விறுவிறுத்து விட்டது. கிங்காங்கையும், தாராசிங்கையும் அடித்துக் கொள்ள வைத்து, சம்பாதித்த பணம் முழுவதையும், இவர்கள் நம்மை அடித்துப் போட்டு விட்டுக் கொள்ளையடித்துக் கொண்டு போய் விடப் போகிறார்களே என்று மனம் வேதனைப்பட்டது.

இரண்டு பேர், காருக்குள்ளே பார்த்து விட்டு, காரின் டிக்கியைத் திறக்கச் சொன்னார்கள். நாங்கள் துடித்துப் போய் விட்டோம். டிக்கியைத் திறந்தார் டிரைவர். உள்ளே பெட்டியில் என்ன? என்று கேட்க, பயத்துடன் 'பணம்' என்றதும் அதையும் திறந்து காட்டச் சொன்னார்கள். பணம் போனால் போகட்டும், அடி, கிடி இல்லாமல், உயிரோடு ஊர் போய்ச் சேருவதே சந்தேகமாகி விட்டது. சின்ன அண்ணமாலை மட்டும் காருக்குள்ளேயே உட்கார்ந்திருந்தார். மறுபடி டார்ச் லைட் அடித்து, அவரைப் பார்த்த ஒரு ஆள், 'அட! சின்ன அண்ணாமலை!' என்றான். (அப்போது பல கூட்டங்களிலும் பேசி, பிரபலமாக விளங்கினார் சின்ன அண்ணாமலை)

"இந்த நேரத்துல எங்கே போறீங்க?" என்ற அவன் கேள்விக்கு மொத்த கதையையும் படபடப்புடன் சொல்லி விட்டு, அடுத்து அவர்கள் என்ன




**இது என்ன தெரியுமா?**

**'Y2K' பூச்சி! கி.பி. இரண்டாயிரம் வருடத்தில், தேதி குளறுபடி காரணமாக கம்ப்யூட்டர்கள் செய விழக்கும் என்று சொல்கிறார்கள் அல்லவா? இதை 'Y2K Bug'என்கிறார்கள். அண்மையில் அமெரிக்காவில் நடந்த ஒரு கார் ஊர்வலத்தில், கம்ப்யூட்டர் பாகங்களை, ஒரு கார் மீது பொறுத்தி ஒரு பூச்சி போல அலங்கரித்து, இதுதான் Y2K பூச்சி என்று ஊர்வலத்தில் இடம் பெறச் செய்தனர்!**

**— சி.எம்**

செய்வார்களோ என்ற பதைபதைப்புடன் காத்திருந்தபோது, "நாங்கள் கொள்ளைக்காரர்கள் இல்லை. கலால் வரித் துறை அதிகாரிகள். செக்கிங்கிற்காக இங்கே காத்திருக்கிறோம்! இவ்வளவு பணத்துடன், நடு இரவில் இதுபோன்ற காட்டு வழியில் போவது ஆபத்தில்லையா? ஜாக்கிரதை" என்று சொல்லி அனுப்பி வைத்தார்கள். போன உயிர் திரும்பி வந்தது!

மல்யுத்தம் நடத்தியதில், என் பங்குக்கு பதினேழாயிரத்து ஐந்நூறு ரூபாய் கிடைத்தது. அதை வைத்துக் கொண்டு, தி. நகர் மங்கேஷ் தெருவில் 'காபி பேலஸ்' என்ற ஓட்டல் ஆரம்பித்தேன். சாண்டில்யன் ரெகுலராக வருவார். ம.பொ.சி. உட்படப் பல பிரபலங்களும் வந்து சாப்பிட்டுப் பாராட்டி விட்டுப் போவார்கள். ஆனால் நாளடைவில் கடனுக்குச் சாப்பிட்டவர்கள் பணம் கொடுக்காத காரணத்தால், பெருத்த நஷ்டம். ஓட்டலை மூடும்படி ஆனது.

ஜப்பான் என்னை மிகவும் கவர்ந்த நாடு. பிற்காலத்தில், வசதி வந்தவுடன் பல நாடுகளுக்கும் போய் வந்தாலும், ஜப்பானுக்கு அடிக்கடி நான் போவேன். அப்படி ஒரு தடவை போயிருந்தபோது, அங்கே ஓட்டல் நடத்தி வரும் நாயர் ஒருவரைச் சந்தித்தேன். நேதாஜியுடன் நெருங்கிப் பழகியவரான அவரை, மக்கள் நாயர்சான் என்று மரியாதையுடன் குறிப்பிடுவார்கள். அவர் தமது வாழ்க்கை வரலாறைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட விரும்பினார். என்ன செலவாகும் என்று கேட்டார். காகிதவிலை, அச்சக பைண்டிங் செலவுகளைக் கணக்கிட்டு இருபதாயிரம் ரூபாய் ஆகும் என்றேன். உடனே இருபத்தையாயிரம் ரூபாய்க்கு ஒரு செக்கை என்னிடம் கொடுத்து, புத்தகம் வெளியிடப் பச்சைக் கொடி காட்டினார்.

அழகான முறையில், புத்தகத்தைத் தயாரித்து பெரிய விழா எடுத்து அதை வெளியிடவும் ஏற்பாடு செய்தேன். அந்த விழாவில் கலந்து கொண்ட நாயர் சானுக்கு ரொம்ப சந்தோஷம். என் மீது அவருக்கு மதிப்பும், மரியாதையும் அதிகமானது!

பின்னர் சொந்தப் பத்திரிகை நடத்திக் கொண்டிருந்த கால கட்டத்தில் அவசரமாக ஒரு லட்ச ரூபாய் எனக்குத் தேவைப்பட்டது. உடனே ஜப்பானுக்கு விமானம் பிடித்தேன். நாயர்சானிடம் உதவி கேட்டேன். துளியும் தயங்காமல், ஒரு லட்சம் ரூபாய்க்கு ஒரு செக் கொடுத்தது மட்டுமில்லை; வட்டி வேண்டாம் என்றார்!

அடுத்தப் பத்து மாதங்களில், மாதம் பத்தாயிரம் ரூபாய் வீதம் அந்தக் கடனை அடைத்தேன். மறுபடி எனக்கு இரண்டு லட்சம் தேவைப்பட்டபோது, மறுபடி அவரை அணுகினேன். தயக்கமின்றி உதவினார். மறுபடி மாதம் பத்தாயிரம் வீதம் கடனை அடைத்தேன்.

நாயர் சானின் மறைவுக்குப் பின் அவரது மகனிடமிருந்து மூன்று லட்சம் ரூபாய் கடன் பாக்கி இருப்பதாகவும், உடனடியாக அதைக் கொடுக்கும்படியும் ஒரு கடிதம் வந்தது. எனக்கு பயங்கர அதிர்ச்சி.

ஆனால், மூன்று லட்சம் ரூபாய் கடனையும் டிராப்ட் மூலம் திருப்பித் தந்ததற்கான ஆதாரம் என் வசம் இருந்தது. அதை இணைத்து, விவரமாக நாயர் சானின் மகனுக்கு ஒரு கடிதம் எழுதினேன். அப்புறம் அவரிடமிருந்து இன்று வரை பதில் இல்லை!

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**



• கல்கத்தா கிருஷ்ணமூர்த்தி

# இளைய தலைமுறையின் இலட்சிய குரு!

**இன்றைய முன்னணி இசைக் கலைஞர்கள் பலருக்கு குருவாக, வழிகாட்டியாக விளங்கிய கல்கத்தா கே.எஸ். கிருஷ்ணமூர்த்தி தமது எழுபத்தெட்டாவது வயதில் அண்மையில் காலமானார். சில நினைவுகள்:**

சிந்துநாமக்ரியா ராகத்தில் ஒரு பாட்டு. அதற்கு சிட்டஸ்வரம் சேர்த்தால் அழகாக இருக்குமே என்று தோன்றியது. கே.எஸ்.கே. சாரிடம் போன் பண்ணிச் சொன்னேன். மறு நாள் காலை அவரே போன் செய்து 'சிட்டஸ்வரம் தயார்' என்றார். டெலிபோனிலேயே பாடியும் காட்டி விட்டார்! அன்று பிற்பகல் எனக்கு ரெக்கார்டிங். அந்த சிட்டஸ்வரமும் சேர்ந்து பதிவாயிற்று!

டிசம்பரில் நடக்கும் அகடமி கச்சேரிக்கு புரோகிராம் ரொம்ப முன்னதாகவே போட்டுக் கொடுத்துவிட வேண்டும். சாரிடம் வழக்கம் போல் யோசனை கேட்டேனேயொழிய பட்டியல் தயாரிக்காமலே அமெரிக்கா டூருக்குப் போய்விட்டேன். விஜயதசமியன்று அவருடைய ஆசி பெற போன் செய்த சமயம். அவர்தான் எனக்கு நினைவூட்டினார். தாம் தயாரித்த பட்டியலையும் படித்துக் காட்டினார். அதிலிருந்து தேர்வு செய்து அகாடமிக்கு அனுப்பி விடும்படி யோசனை கூறினார். அதே போல் நான் பட்டியல் தயாரித்து என் கணவருக்கு ஃபாக்ஸ் செய்ய, அது அகாடமிக்குப் போய்ச் சேர்ந்தது.

ஓர் ஆசிரியருக்கு மாணவி பேரில் எவ்வளவு அக்கறை இருந்தால் இவ்வளவு தூரம் நினைவு வைத்துக் கொள்வார்!

**– சுதா ரகுநாதன்.**

அவரைப் போல் மனம்விட்டுப் பாராட்டும் குணம் யாருக்காவது வருமா என்று யோசிக்கிறேன்! 'தேஷ் அமர்க்களமாயிருந்தது! ஹம்சாநந்தி ஓஹோ என்றிருந்தது' என்றெல்லாம் உடனுக்குடன் சொல்லுவார். கீழ் ஸ்தாயியில் பயிற்சி செய்தால் குரல் நன்றாக ஒத்துழைக்கும் என்று கற்றுத் தந்தார். பாடல்கள் சுரங்கம் அவர். அவருக்குத் தெரிந்ததைக் கண்டு நாம் பிரமித்தால், 'நிறையக் கற்றுக் கொள்ளலாம்... நீதான் வர மாட்டேன் என்கிறாய்' என்பார்! எளிமை, அர்ப்பணிப்பு உணர்வு அவருடைய விசேஷ குணங்கள். இசை பற்றி சி.டி. ராம் தயாரிக்க சசிகிரணும் நானும் முனைந்தபோது அவர் அளித்த ஒத்துழைப்பு அளவிட முடியாதது.

**– சௌம்யா**

சாத்தூர் கிருஷ்ணய்யங்காரிடம் பயின்றவர். கிருஷ்ணய்யங்கார், உடல் நலம் குன்றியிருந்த போது கூடவே இருந்து உதவினார். பாபநாசம் சிவனுடன் பஜனை உஞ்சவிருத்தி ஊர்வலத்தில் பங்கேற்றவர். சிவனிடம் நேரடியாகக் கற்றுக் கொண்டதும் உண்டு. அப்படிப் பல அரிய உருப்படிகள் அவருக்குப் பாடம்.

குழந்தைகளுக்குக் கர்நாடக சங்கீதம் பயிற்றுவிக்கக் கடைப்பிடிக்கப்படும் முறையை அடியோடு மாற்ற வேண்டும் என்று புரட்சிகரமான யோசனைகள் வைத்திருந்தார். சரளி வரிசையை சங்கராபரணத்தில் கற்றுத் தர வேண்டும்; முதலிலேயே தாளம் கற்றுத் தரக் கூடாது: காலப் பிரமாணம் மனத்துக்குள் இருக்க வேண்டும்... கஷ்டப்படாமல், இசை பயில வேண்டும் என்று சொல்லுவார்....

நிறைய பாடல்கள் இயற்றி இருக்கிறார். இறந்து போவதற்கு ஒரு வாரம் முன்னால் கூட சாஹித்யங்கள் எழுதி வைத்திருக்கிறார். மருந்து பாட்டில்கள் வாங்கிய உறைகளின் மீது!

**– மகன் ராஜி சுரேஷ்.**

தொகுப்பு : **சாருகேசி**

'அன்னியர் சோனியா' கோஷத்தை பா.ஜ.கவிடமிருந்து காங்கிரஸே இரவல் வாங்கிக் கொண்டு விட்டது. சாதாரண கோமா நிலையிலிருந்த காங்கிரஸ், இப்போது ஆழ்நிலை கோமாவுக்குப் போகிறவிதமாக சோனியா, கட்சித் தலைவர் பொறுப்பிலிருந்து ராஜினாமா செய்திருக்கிறார். இந்நிலையில் தேர்தலில் தீர்ப்பளிக்கப் போகிற மக்கள் மத்தியில் 'இத்தாலியர் சோனியா பிரதமராகலாமா?' என்கிற கேள்வியைக் கொண்டு போவது தவிர சரியான செயல் வேறு இருக்க முடியாது. தில்லி, மும்பை, சென்னை, கோவை, மதுரை, திருச்சி நகரங்களில் பலதரப்பட்ட மக்களைச் சந்தித்தோம். பேசியவர்களுள் சிலரது கருத்துகள் மட்டும் இங்கே.


• ரமன் ஸ்வாமி






• வி.ஆர். சுவாமிநாதன்



தில்லி

## தில்லி

ரமன் ஸ்வாமி (ஆசிரியர், 'ராஷ்ட்ர தூத்'): முதலிலிருந்தே எனக்கு இந்தப் பிரச்னையில் தெளிவான அபிப்பிராயம் இருக்கிறது. சர்வதேச அரசியல் சூழ் நிலைகளில் எஸ்பியோ

# பிரதமராகலாமா

னஜ் என்பது அதி நவீன உளவுத் தொழிலாக மலர்ந் திருக்கிறது. அந்நியப் பெண் ஒருவரை ஒரு தேசத்தின் தலைவராக உருவாக சந்தர்ப்பம் உள்ள ஒருவருடன் பழக வைத்து அவரை "plant" செய்வது, "Honey trap" என்றழைக்கப் படும் விஷக் கன்னிகைகள் போன்ற சாணக்கியத் தனம் செய்வது போன்றவை யெல்லாம் நடக்கிற நிகழ்ச்சிகள்தான். எனவே சோனியா இன்னும் சில நாட்கள் வாயை மூடிக் கொண்டிருந்திருந்தால் அவரின் மௌனத்தைச் சந்தேகிக்க வேண் டிய கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டிருப் போம். பி.ஜே.பி. அணியினர் இந்த விஷயத்தைக் கிளப்பத் தங்களுக்கு உரிமை இருப்பதாக நினைக்கலாம். ஆனால் என் னால் அதை ஒப்புக் கொள்ள இயலாது. மதமோ, மொழியோ இந்த தேசத்தின் குடியுரிமை யைப் பொறுத்தவரையில் ஒரு பிரச்னை யாகவே இருக்காது. ஏனெனில், இந்தியாவே பல மத மொழிக் கூட்டங்களின் தாயகம். இதில் வெளியிலிருந்து வந்தோரும் ஒன்றே. இங்கேயே மதம் மாறியவர்களும் ஒன்றே. ஆனால் தன்னுடைய இரட்டைக் குடி யுரிமை பற்றிய சந்தேகங்களைத் தீர்த்து வைப்பது சோனியாவின் கடமை. அதை அவர் செய்த பிறகு, அதாவது அவர் இத்தாலியக் குடியுரிமையை நான் தாரை வார்த்து விட்டேன். இந்தியக் குடியுரி மையை என்றோ பெற்று விட்டேன் என்று ஆவணங்களுடன் நிருபித்த பிறகு விஷயம் முற்றுப் பெறும். ஆனால் இன்னும் இத்தாலியக் குடியுரிமையை அவர் வைத் திருந்தால் அவருடைய உள்நோக்கத்தைச் சந்தேகிக்க வேண்டியிருந்திருக்கும்.

**ரேணு மித்தல் (பத்திரிகையாளர்) :** அமெரிக்க சாசனத்திலோ, பிற ஐரோப்பிய சாசனங்களிலோ அயல்நாட்டார் முக்கியப் பதவி எதுவும் வகிக்க இயலாதென்றிருக்கலாம். ஆனால் இந்திய சாசனப்படி இந்தியக் குடியுரிமை பெற்ற எவருமே எல்லா உரிமைகளையும் பெறுகின்றனர். இதில் பிரதமர் பதவியும் அடக்கம். நிர்ணய சாசனத்தில் எந்த நிபந்



தனைகளும் இல்லாதபோது, நம் மக்கள் சோனியாவை ஒப்புக் கொள்ளும்போது, இதில் எந்த மாற்றுக் கருத்துக்கும் இடம் கிடையாது.

**ஷாந்தா ராவ் :** பிறப்பினால் அயல்நாட்டைச் சேர்ந்த ஒருவர் நமது தேசக் குடியுரிமை பெற்றாலும் அவர் எந்த உயர் பதவிக்கும், Public officeக்கும் வரக் கூடாது. அமெரிக்கா போன்ற மிகவும் லிபரல் சமுதாயத்திலேயே, அயல்நாட்டவர்களாலேயே உருவாக்கப்பட்ட ஒரு தேசத்திலே கூட, நிர்ணய சாசனத்தில் தெளிவாக அவர்கள் சொல்லி விட்டனர். எவரெல்லாம் இயற்கையாகவே அமெரிக்கக் குடிமக்களோ (natural citizens not naturalised citizens) அவர்களே அமெரிக்க ஜனாதிபதியாகவோ, செனட் உறுப்பினர்களாகவோ இருக்கலாம். அப்படியிருக்க, இந்திய நிர்ணயம் சாசனம் போன்ற ஒன்றில் இந்தச் சட்டம் இல்லாவிட்டால் அதை நாம் கொண்டு வர வேண்டும். இரண்டாவது, எந்த அனுபவமும், படிப்பும் இல்லாத ஒருவர் பிரதமர் பதவிக்கு வருவதென்பது கூடவே கூடாது. இது நாட்டின் இறையாண்மைக்கும், பாதுகாப்புக்கும் வரும் ஆபத்தாகவே முடியும். இன்றைய நிலையில் வாஜ்பேயியைத் தவிர, நீண்ட பொது வாழ்வு அனுபவமும் நிர்வாகத் திறமையும் கொண்ட வேறொருவர் தேசத்தில் கிடையாது.

**வி.ஆர். சுவாமிநாதன் :** உங்களையும் என்னையும் போல் சோனியாவும் இந்தியரே. கணவர், மாமியார் எனப் பலரை இழந்து, சிறு குழந்தைகளுடன் தன்னந்தனியே இவ்வளவு வருடங்கள் இங்கு போராடிய ஒரு பெண்மணி. அவர் நினைத்திருந்தால் கணவர் இறந்தவுடனேயே


• எஸ். ராமச்சந்திரன்


• கே.எம். நாகூர்


• வி. ஸ்ரீநிவாச பெருமாள்


• பாண்டே


• வி.எம். துரை


• எம்.ஆர். ராய்

மும்பை


• திருமதி பாலசிவம்


• உஷா


• அனுஷா


• கே.என். சீனிவாசன்


• கனகவல்லி


• ராமானுஜம்


• டி.வி.எல். மூர்த்தி

சென்னை

• படங்கள்: ஸ்ரீஹரி

குழந்தைகளுடன் இத்தாலி சென்றிருக்கலாம். அந்த வகையில் பார்க்கப் போனால் பல இந்தியர்களை விட சோனியா மேல் என்பேன் நான். இந்த பி.ஜே.பியின் கொச்சையான பிரசாரம் முறியடிக்கப்பட வேண்டும். சோனியா பிரதமராக வேண்டும்.

**ஹேமந்த் ஸயால்** : சோனியா பிறப்பினால் இத்தாலியர் என்பதால் மட்டுமல்ல... அனுபவத்தால் ஒன்றுமறியாதவர் என்ற காரணத்தாலும் அவரைப் பிரதமராக்குவது இந்திய அரசியலின் முதிர்ச்சியின்மையைக் காட்டும். சோனியா தம் பங்கிற்குத் தம்முடைய முதிர்ச்சியின்மையை வாஜ்பேயி அரசு கவிழ்ந்தவுடன் காட்டி விட்டார். தான்தான் பிரதமர் என்ற ஆசையில் அவர் அரசியல் கடலில் பல முதலைகளைப் புரிந்து கொள்ளாமல் காலைவிட்டு, விழுந்தது, பிரதமரான பிறகு எப்படிப் பலரையும், தேசத்தின் பல பிரச்னைகளையும் சமாளிக்கப் போகிறார் என்ற பெரிய கேள்விக் குறியை எழுப்பியிருக்கிறது. இப்போதே பாருங்கள், தன் கட்சியினரையே புரிந்து கொள்ளவில்லையே, இல்லையென்றால் இதே பிரச்னைக்காக பவாரும், சங்மாவும், தாரிக்கும் போர்க்கொடி உயர்த்துவார்களா. இந்திரா காந்தியிடம் இது நடக்குமா...?

## சென்னை

**அனுஷா** : சோனியா அயல்நாட்டில் பிறந்தார் என்பது ஒரு பிரச்னையே அல்ல. என்று அவர் ராஜீவ் காந்தியின் கரம் பிடித்து இந்தியக் குடியுரிமை பெற்றாரோ, அன்றிலிருந்தே அவர் இந்தியர் தான். இப்போதைய நிலையில் நமக்குத் தேவை, நிலையான அரசு. சோனியா தலைமையில் காங்கிரஸ் அதைக் கொடுக்க முடியும் என்று மக்கள் தீர்ப்பளித்தால் யாராவது தடுக்க முடியுமா? எல்லாவற்றுக்கும் மேலாக, அரசியலில் உயர்ந்த இடங்களில் பெண்கள் வருவதற்கு வாய்ப்புக் குறைவாக இருக்கும் நமது நாட்டில் சோனியாவுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தால், அந்த ஒரு காரணத்திற்காகவே நான் சோனியாவை ஆதரிப்பேன்!

**கே. என். சீனிவாசன்** : கிட்டத்தட்ட செத்த பாம்பாக இருந்த காங்கிரஸ் கட்சிக்குக் கடந்த முறை நடந்த நான்கு மாநில இடைத் தேர்தல்களில், வெற்றி கிடைக்கச் செய்து கட்சிக்கு உயிர்கொடுத்தது சோனியாதானே! 'மக்களுக்கு நல்லது செய்ய வேண்டும்' என்ற அடிப்படைக் கருத்தில் அவர் உறுதியாக இருந்தால் போதும்! இந்தச் சமயத்திலே ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஜெயலலிதாவுடன் சோனியா கூட்டணி வைத்துக் கொள்ளக் கூடாது. அப்படி வைத்தால் காங்கிரஸுக்குத்தான் இழப்பு.

**கனகவல்லி** : வாஜ்பேயின் அனுபவத்துக்கும் அறிவுக்கும் முன்பு சோனியா எம்மாத்திரம்? இந்தியாவில் பிறந்த நீங்களோ நானோ ஒரு வெளிநாட்டில் பிரதமராக முடியுமா? வெளிநாட்டில் பிறந்தாலும் ராஜீவ் காந்தியை மணந்து கொண்டதால், இந்திரா காந்தி குடும்பத்தில் அவரும் ஒருவர் - அவ்வளவுதான். தனிப்பட்ட குடும்ப வாழ்க்கையை நடத்திக் கொண்டு போக வேண்டியதுதான். அதில் எந்தக் குறுக்கீடும் யாரும் செய்ய முடியாது. ஆனால் அந்தக் குடும்பச் செல்வாக்கைப் பயன்படுத்தி பிரதமர் பதவியைக் கைப்பற்ற முயற்சி செய்வது 90 கோடி மக்களைப் பார்த்து விடப்படும் சவால்!' 'பெண்' என்றெல்லாம் பார்த்துப் பரிசிலிக்கவே முடியாது. நமக்குத் தேவை நல்ல தலைவர்தானே தவிர, 'பாப்புலர்' தலைவர் அல்ல. ஏன்... காங்கிரஸிலேயே மன்மோகன் சிங் போன்ற நல்லவர்கள், வல்லவர்கள் இருக்கிறார்களே? சோனியா பிரதமராவதற்கு காங்கிரஸிலேயே எல்லோரும் ஏற்றுக் கொள்கிறார்களா என்று பாருங்கள்.

**ராமானுஜம்**: 'நிலையான ஆட்சி;

திறமையான பிரதமர்' இந்தக் கோஷத்துக்கு முற்றிலும் தகுதியானவர் சோனியா காந்தி தான்! நாட்டில் எந்தப் பகுதியிலிருந்து வேண்டுமானாலும் சோனியாவால் தேர்தலில் போட்டியிட முடியும். ஆனால், வாஜ்பாய் தமிழ்நாட்டிலிருந்தோ, கேரளாவில் இருந்தோ தைரியமாகப் போட்டியிடுவாரா?

**டி.வி.எஸ். மூர்த்தி:** ராஜீவ் காந்தியை திருமணம் செய்து கொண்டவுடன் சோனியா இந்தியக் குடியுரிமை பெற்றுவிடவில்லை. பல வருடங்கள் கழித்தே இந்தியக் குடியுரிமை பெற்றார். அதே சமயத்தில் இத்தாலியக் குடியுரிமையையும் விடாமல் இரட்டைக் குடியுரிமையுடன் இருக்கிறார் என்கிறார்கள். இப்படிப்பட்ட ஒருவரை நம்பி நமது பிரதமர் பதவியைக் கொடுக்க முடியுமா? காங்கிரஸிலேயே பல நல்ல தலைவர்கள் இருக்கிறார்கள். மாநிலத் தேர்தல்களில் காங்கிரஸ் வென்றதற்குக் காரணம் சோனியா அல்ல! வெங்காயம் தான்!

## மும்பை

**எஸ். ராமச்சந்திரன்:** இத்தாலியர் என்பதால் அப் பதவிக்குத் தகுதியற்றவர் எனக் கூறுவது பொருந்தாது. ஏனென்றால், நம் காங்கிரஸுக்கு வித்திட்டதே அன்னி பெசண்ட் அம்மையார் போன்ற ஆங்கிலேயர்கள்தாம்! ஆனால், நிர்வாகத் திறமையே இல்லாத சோனியாவிடம் பிரதமர் பதவியைத் தருவது முட்டாள்தனம். சோனியா ஒரு சாதாரண ஹவுஸ்வைஃப்! அவரை அங்கேயே விட்டு விடுங்கள்.

**கே.எம். நாகூர்:** ஒரு நாட்டில் பிரதமராவதற்கு அரசியல் அனுபவமும், நோக்கும் போக்கும் மக்கள் பிரச்னைகளைப் புரிந்து கொள்ளும் பக்குவமும் அவசியம். அதற்கு அந்நாட்டின் கலாசாரமும் பண்பாடும் ரத்தத்திலேயே ஊறியிருக்க வேண்டும். இத்தாலியில் பிறந்து, வளர்ந்து, நேற்று வரை அரசியலில் அசிரத்தை காட்டிய சோனியாவால் இந்தப் பொறுப்பை சுமக்கவே முடியாது!

**வி. ஸ்ரீநிவாச பெருமாள்:** நேதாஜியின் பேரன் கட்டாக்கில் பேங்க் அக்கௌண்டன்ட்; மகாத்மாவின் பேரன் டைம்ஸ் ஆஃப் இந்தியாவில் பணிபுரிகிறார். இவர்களுக்கெல்லாம் இல்லாத சிறப்பு, நேருவின் பேரனுக்கு மட்டும் ஏனாம்? ராஜீவுக்கு இத்தாலிய மங்கையிடம் காதல்; நாளை ராகுல் ஒரு அமெரிக்காக்காரியை மணமுடித்தால், அவரையும் பிரதமராக்குவீர்களா? என்னய்யா வேடிக்கை காட்டுகிறீர்கள்? சோனியா 14 வருடம் கழித்து, நிதானமாக இந்தியக் குடியுரிமை பெற்றிருப்பது எதற்காக? பிரதமராகி நாட்டுக்குச் சேவை செய்யவா? ஊஹூம்... போஃபர்ஸ் ஊழலை அமுக்கத்தான்! எல்லாம் தெரிந்துதான், இந்தியா சுதந்திரம் அடைந்த உடனேயே காங்கிரஸைக் கலைத்து விட வேண்டும் என மகாத்மா அடித்துக் கொண்டார். கேட்டீர்களா?

## திருச்சி

**எம்.ஆர். ராய்:** போதிய திறமையும் அனுபவமும் இல்லாத சோனியாவைப் பிரதமராக்கினால், மக்கள் மத்தியில் அவருக்குக் கெட்ட பெயர் கிடைக்கும். அப்புறம் தலைமைப் பதவிக்கு நம்மை விட்டால் கதியில்லை என்று மனப்பால் குடிக்கிறார்கள் காங்கிரஸ்காரர்கள்!

**வி.எம். துரை:** லவ் மேரேஜ் செய்யும் போது குடும்பத்தில் தகராறுகள் ஏற்படும். லேசில்


• எம்.ஆர். கண்ணபிரான்


• டெய்சி ஸ்டீபன்


• ஹெச். ராணி ஹேமநாதன்


• எஸ். அலெக்ஸாண்டர்


• கே. நூர்முகம்மது


• எஸ். எம். பாண்டியன்


• என் சங்கரன்

ஏற்க மாட்டார்கள்; போகப் போக எல்லாம் சரியாகிவிடும். அதே போல்தான் இதுவும்! கொஞ்ச காலத்தில் அவர் இத்தாலியர் என்பதையே மறந்து விடுவார்கள்!

**பாண்டே:** பார்க்கப் போனால் பி.ஜே. பிகாரர்கள் வழிபடும் பிரதான தெய்வத்தின் (ராமர்) மனைவியே ஒரு 'நேபாலி'தான்! அவரை தெய்வமாக ஏற்றுக் கும்பிடும் போது, ஒரு இத்தாலியரைப் பிரதமராக ஏற்பது ஒன்றும் பெரிய விஷயமில்லை! ஆனால் அவருக்குப் பிரதமராவதற்குரிய தகுதிகள் எதுவுமில்லையே?

**உஷா:** ஒரு பொருளை விளம்பரம் செய்ய மாடல் தேடுவார்களே, அது போல காங்கிரஸ்காரர்களுக்குத் தங்கள் கட்சியை மார்க்கெட் செய்ய ஒரு 'மார்கெடபிள் ஃபேஸ்' தேவையாயிருந்தது! அந்த முகம் தான் சோனியா! மற்றபடி பெப்ஸிக்கும் சச்சினுக்கும்முள்ள சம்பந்தம்தான், அரசியலுக்கும் சோனியாவுக்கும். இன்றைய நிலையில் நமக்குத் தேவை சேஷன் போன்ற செயல் வீரர்கள். சோனியா போன்ற மெழுகு பொம்மைகள் அல்ல!

**திருமதி பரமசிவம் :** நூறு கோடி இந்தியர் இருக்கையில், ஒரு அன்னியர் நாட்டை ஆள்வதென்பது ஏற்கமுடியாத தலைகுனிவு!

## கோவை

**ஜி. சுப்பிரமணியம் :** கட்சி ரீதியிலேயே ஆதரவு ஏதும் இருப்பதாகக் காணோம். டீ.வி.யில் கூட யாரோ எழுதிக் கொடுத்ததைத்தானே வாசிக்கிறார்? சுயமாக சிந்தித்துச் செயல்பட முடியாத ஒருவரால், ஒரு பெரிய தேசத்தை எப்படி வழிநடத்திச் செல்ல முடியும்?

**கவிதா :** அரசியலில் ஆழ்ந்த அனுபவம் வேண்டும், சுய அறிவு வேண்டும் என்பதெல்லாம் வெறும் பிரசாரம். தடாலடியாய் ராஜீவ் காந்தி எப்படி அரசியலுக்கு வந்தார்? சாதிக்கவில்லை? இங்கே தேவை அபார துணிச்சல். அது போதும். இவரை இத்தாலிக்காரர் எனப் பேசும் பி.ஜே.பியினர், 'வாஜ்பாய் வம்சா வழி கைபர் கணவாய் வழியாக வந்த வெளிநாட்டவர்' எனப் பத்திரிகைகள் எழுதுகின்றன; புள்ளி விவரங்கள் கொடுக்கின்றன. அதற்குப் பதில் சொல்லட்டுமே!

**ஆர். செல்வம்:** 'அம்மா' பேச்சைக் கேட்டு ஓர் அரசைக் கவிழ்த்தார். சந்தோஷம். அடுத்ததாக, இவருக்கு மற்றக் கட்சிகள் ஆதரவு தராத நிலையில், மூன்றாவது அணி ஒன்று அமைய உதவியிருக்க வேண்டும். அதுவும் செய்யவில்லை. பிறகு இவர்கள் நோக்கம்தான் என்ன? அரசியலுக்கு வந்த ஓரிரு வருடங்களிலேயே குழப்ப அரசியல் நடத்தியவர், பிரதமரானால் என்ன கதியாகும்!

**அமீர் அல்தாப்:** இவ்வளவு பெரிய தேசத்தில், மக்கள் பேராதரவு பெற்ற ஒருவரை – அந்நிய தேசத்தவர் எனக் காரணம் காட்டி உதறுவது சரியல்ல. பங்களாதேஷ், பாகிஸ்தான், சீனா, ஸ்ரீலங்கா போன்ற நம் அண்டை நாடுகளில் ஏற்கெனவே பெரும்பாலும் பகைமை உணர்ச்சியே வளர்த்து வந்துள்ளோம். இப்படியே போனால் மற்ற வெளிநாடுகளில் உள்ள பெரும்பான்மை இந்தியர்களின் கதி என்னாவது? உள்நாட்டுக்குள்ளும் பிரச்னைகள் வெடித்தால் நாம் தாங்குவோமா? இருந்த போதிலும் காங்கிரஸ் இவ்வளவு தூரம் ஒரு சப்-ஜூனியரைத் தலைவராக்கி வேடிக்கை காட்டுவதும் வருத்தமாகவே உள்ளது.

**அமரா :** சோனியாவுக்குத் தகுதியில்லை என்றுதான்

### கோவை


• ஜி. சுப்பிரமணியம்


• கவிதா


• ஆர். செல்வம்


• அமீர் அல்தாப்


• அமரா


• ஜான்போஸ்கோ

சொல்வேன். இக்கட்டான ஒரு சூழ்நிலையில் பொதுத் தேர்தல் வரும் அளவுக்கு நாட்டைக் கொண்டு போனார். பி.ஜே.பி. அரசு தானாகக் கவிழும். கவிழ்ந்த சில மணி நேரத்தில் பெரும்பான்மை பலத்துடன் ஆட்சி நடத்துவோம் எனப் பரபரப்பு பேட்டி கொடுத்தார். கூறுரைத்தபடி ஆட்சி அமைக்க முடிந்ததா? இதுவே அரசியல் முதிர்ச்சியின்மையை அடையாளம் காட்டி விடுகிறது. சுற்றியிருப்போர் பேச்சைக் கேட்டுக் கொண்டு செயலாற்றி, நாட்டையே கேலிக்கூத்தாக்கி விடுவார் என்பதற்கு வேறு சான்று வேண்டுமா?

**ஜான்போஸ்கோ :** இந்தியன் என்ற முறையில் அவர் பிரதமர் ஆவதை ஜீரணிக்கவே முடியலை. ஜெயலலிதா போன்ற தினம் ஒரு புத்தி இருக்கும் அரசியல்வாதியிடம் தொடர்பு வைத்து, அரசைக் கவிழ்த்தவர் எப்படி சிறந்த அரசியல் மதியூகியாக இருக்க முடியும்? உண்மையிலேயே அரசியல் தெளிவு உள்ளவராக இருந்தால் பிரதமர் பதவிக்கு ஓர் இந்தியரை 'நாமினேட்' பண்ணிவிட்டு, கட்சித் தலைவராக மட்டுமே இருக்கப் பார்க்கட்டுமே!

## மதுரை


• பி.சேகர்


• வி. குமார்


• எல். ஜேம்ஸ்


• எஸ். ராஜி சுந்தர்


• ஜே. ஆரோக்கிய தாஸ்


• எம்.எல். சுந்தரம்

**பி. சேகர் :** சோனியாவை அண்ணியாகப் பார்க்க வேண்டுமே தவிர, அன்னியராகப் பார்க்கக் கூடாது. ராஜீவ் என்ற நமது சகோதரனின் மனைவியல்லவா அவர்?!

**வி. குமார் :** சோனியா – இந்த மண்ணுக்காக மாமியாரையும் கணவரையும் பறிகொடுத்து விட்டு, தனி மரமாய் நின்றபோதும் உறவுகளைத் தேடி ஊருக்கு ஓடாமல், இந்தியாவையே உறவாகக் கருதி உயிர் வாழ்பவர். அவரை அன்னியர் என்பது அபாண்டம்! எங்கோ பிறந்த அன்னை தெரசா இங்கு இறந்தபோது அவருக்கு நாம் ராணுவ மரியாதை அளிக்கவில்லையா? சோனியா இம் மண்ணின் நிஜப் பிரஜை! இதை ஒரு பிரச்னையாக்குவது தவறு.

**எஸ். ஜேம்ஸ் :** ஒரு மைனாரிட்டி மதத்தைச் சேர்ந்தவர் பிரதமராவதா என்ற பொருமலில் இந்துத்வா பி.ஜே.பி. கிளப்பிவிடும் வீண் பழிதான் இந்த அன்னியர் பிரச்னை. சோனியா – ஹைஹீல்ஸும், கவுனுமாய்த் திரியும் பாப் கூந்தல் நாயகி அல்ல! அழகுப் புடைவையுடன் இம் மண்ணில் கலந்து விட்ட நம் சகோதரி. அவரே அடுத்த பிரதமராக அமர வேண்டும். பல ஜாதி, பல மொழி, பல மதங்களைச் சமமாக பாவிக்கும் நாடு என்ற பெயரோடு, பல தேசத்துப் பிரஜைகளையும் சமமாக மதிக்கும் நாடு என்ற பெயரையும் உலக அரங்கில் இந்தியா பெற வேண்டும். 'மனிதம்' பற்றி மட்டுமே சிந்திக்கும் நாடு என்ற முத்திரை நம் மீது விழ வேண்டும்.

**எஸ். ராஜி சுந்தர் :** இந்திய தேசத்தின் வடகிழக்கு மாநிலங்களின் பல பகுதிகளில், பாதுகாப்பு நலன் கருதி இந்தியப் பிரஜைகள் தவிர வேறு யாரும் அனுமதிக்கப்படுவதில்லை என்று படித்திருக்கிறேன். வெளிநாட்டுக்காரர் என்பதால் அன்னை தெரஸாவே தம் பயணத்தின்போது சில இடங்களில் தடுக்கப்பட்டதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படியிருக்கையில், மொத்த தேசத்தையும் ஒரு வெளிநாட்டவரின் கையில் ஒப்படைப்பது எப்படிச் சரி?

**ஜே. ஆரோக்கிய தாஸ் :** நூறு கோடி இந்தியர்களில் ஒருவர் கூடத் தலைமைக்குத் தகுதியில்லை என்று உலகுக்குத் தம்பட்டம் அடிக்கும் முயற்சிதான் சோனியாவைப் பிரதமராக்குவது!

**எம்.எல். சுந்தரம் :** காங்கிரஸைத் தோற்றுவித்த ஏ.ஓ. ஹ்யூமும், அதன் பின்

தலைமையேற்ற அன்னிபெசன்ட்டும் இந்தியரா? சட்டப்படி குடியுரிமை பெற்ற ஒருவர் பிரதமராவதை மறுக்க அரசியல் வாதிகளுக்கு அதிகாரமில்லை. அதை இந்நாட்டு மக்கள்தான் முடிவு செய்ய வேண்டும். மீறி மறுப்பது அநாகரிகம் மட்டுமல்ல; மனித உரிமை மீறலும் கூட!

## திருச்சி

**எம். ஆர். கண்ணபிரான்** : இத்தாலியர் - இந்தியர் என்று பாகுபடுத்திப் பார்க்கத் தேவையில்லை. அவர் இந்த தேசத்துக்கும், தேச மக்கள் நலனுக்கும் பாடுபடுபவரா என்றுதான் பார்க்க வேண்டும். இந்தியப் பிரஜை என்று சட்டபூர்வமாய் வாழ்ந்து வருபவரை, பிறப்பின் மூலத்தை எடுத்துப் பார்த்து இத்தாலியர் என்று வேறுபடுத்துவது அபாண்டமானது.

**டெய்சி ஸ்டீபன்** : சோனியாவுக்கு அரசியல் அனுபவம் போதாது. அவர் காங்கிரஸ் கட்சியைக் காப்பாற்ற வந்தவர் அல்ல. 'போஃபர்ஸ்' ஊழலை மறைக்கத் துடிக்கிறவர். தேசநலன் மீது அக்கறை கொண்டவர் அல்ல!

**ஹெச். ராணி ஹேமநாதன்** : ஒரு பெண்ணோட பிறந்த ஊர் எதுவாக இருந்தாலும் புகுந்த ஊரைத்தானே அந்தப்பெண் தன்னுடைய ஆயுட் காலம் முழுவதும் சொல்லியாக வேண்டும்? இந்தியக் கலாசாரமே அதைத்தானே சொல்கிறது? சோனியா காந்தி விஷயத்தில் மட்டும் அதை ஒதுக்கி விட்டுப் பார்ப்பது முரண்பாடானது. முறைப்படி தேர்தலில் நின்று வெற்றி பெற்று ஒருவர் பதவியை அடையலாம் என்று சட்டம் இருக்கும் போது சோனியா காந்திக்கும் தேர்தல் மூலமாகப் பிரதமர் ஆகும் தகுதி உண்டு என்பதே என் கருத்து.

**எஸ். அலெக்ஸாண்டர்** : காங்கிரஸ் தவிர எந்தக் கட்சியாவது அஞ்சு வருஷம் நிலையா இந்தியாவை ஆண்டு இருக்காங்களா சார்? சோனியாவைப் பொறுத்தவரை இத்தாலியப் பெண் அப்பிடிங்கற வாதமே எடுபடாது. தேசிய வாதம் - மதவாதம் - ஊழல்வாதம் அப்பபடிங்கற மாதிரி 'இத்தாலியப் பெண்' சோனியா காந்தின்னு சொல்றது இப்ப மத்த அரசியல் கட்சிகளைப் பிடிச்சிருக்கற பக்கவாதம் சார்!

**கே. நூர்முகம்மது** : நாட்டுக்காக யார் சேவை செய்ய வர்றாங்கன்னுதாங்க பாக்கணும்! அவுங்க எந்த நாட்லேந்து வர்றாங்கன்னு பார்க்கத் தேவையில்லைங்க. சோனியா பிரதமராவறதுல எனக்கு ஆட்சேபணை இல்லை!

**எஸ். எம். பாண்டியன்** : சோனியா காந்தியை 'இத்தாலியர்' என்று கூறுபவர்கள், வரட்டு வாதம் செய்கிறார்கள்! அரசியல் ரீதியாக அணுக முடியாத வர்களே வெளிநாட்டவர் என்று பிதற்றுகிறார்கள்.

**என். சங்கரன்** : ராஜீவ் காந்தியின் மனைவி என்பதைத் தவிர, அவருக்கு வேறு எந்தத் தகுதியும் கிடையாது. அரசியலில் அவர் ஒரு எல்.கே.ஜி. பீகார் விவகாரத்தில் சறுக்கியது அவரது அரசியல் அனுபவமின்மையைத்தான் காட்டுகிறது. ஜனநாயகத்தைக் கொண்டு வந்ததே பழைய மன்னர் காலப் பரம்பரை ஆட்சி முறையை மாற்றி அமைக்கத்தான். திறமைக்கு இடம்தர வேண்டும் என்பதற்குத்தான். நாம் மீண்டும் அந்தப் பரம்பரை ஆட்சி முறைக்கேதான் மாறுவோம் என அடம்பிடிப்பது எவ்வகையில் புத்திசாலித்தனம்?

தில்லியிலிருந்து : **வெங்கட்**
மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ**
கோவை : **வேலாயுதம்**
மதுரை : **கிரண்நியூஸ்**
சென்னை : **ப்ரியன்**
திருச்சி : **திருநாவுக்கரசு**

---

**பி**ரிட்டிஷ்காரர்களின் ஆதிக்கத்திலிருந்து இந்தியாவை விடுவிக்க நம் நாட்டு மக்கள் போராடிக் கொண்டிருந்தபோது ஒரு பத்திரிகை விளம்பரம் வெளியிட்டது.

''பிரிட்டிஷ் அரசாங்கத்தை எதிர்த்துப் போராட தைரியம் மிகுந்த போர் வீரர்கள் தேவை.

ஊதியம் – மரணம்
விலை – உயிர்த்தியாகம்
ஓய்வூதியம் – சுதந்தரம்
போர்க்களம் – இந்தியா''

பிரமிப்பூட்டும் அரிய தகவல்கள் நூலிலிருந்து: கே. ஏ. காளிமுத்து

# ஓர் இரவு இன்னொரு இரவு...

"மகா பெரியவாள்" என்று நாம் இன்று நினைக்கும்போதெல்லாம் மனம் கனியச் செய்யும் ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள், காமகோடி பீடத்தின் அறுபத்து எட்டாவது பீடாதிபதியாக விளங்கி பாரத நாட்டில் ஆன்மீகம் தழைக்கச் செய்த மகான். *(29.5.99 வைகாசி விசாகம் அவரது ஜயந்தி தினம்)*

மகா பெரியவாள் செய்திருக்கும் நற்பணிகளைக் கணக்கிட முடியாது. நேபாளம் முதல் ஸேது வரை அவர்கள் பாதம் படாத புனிதத் தலமே கிடையாது என்று சொல்லலாம்.

ஒவ்வொரு கணமும் லோகக்ஷேமத்துக்காகவே வாழ்ந்தவர். தம்முடைய தவத்தைக் கூடத் தன் அன்பர்களுக்காகத் துறந்தவர், வேதங்களைக் காக்க அளவற்ற முயற்சிகள் எடுத்துக் கொண்டவர். மற்ற மதத்தினரையும், அவர்கள் ஆசாரத்தையும் மதித்தவர். தீனபந்துவாக, வைத்தியநாதனாக, ஆறுதல் கூறும் அன்னையாக, பக்திக்குரியவராக சகல கலைகளின் நுட்பங்களையும் புரிந்து அறிந்த மகானுக்கு ஒரு நினைவாலயம் எழுப்ப வேண்டும் என்று பக்தர்கள் ஆசைப்படுவது இயல்புதானே?

தர்மத்துக்காகவே வாழ்ந்த பெரியாருக்கு ஒரு மணிமண்டபம் கட்டி வருங்கால மக்களுக்கு ஒரு பிரார்த்தனை மண்டபமாக விளங்கவும், ஆன்மீகத் தேடலை நினைவூட்டவும் ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. ஓரிக்கை என்ற கிராமத்தின் அருகில் பாலாற்றங்கரையில் சில கொட்டகைகளைப் பார்க்கிறோம். "கல் கல்" என்று கல்லை உளியால் செதுக்கும் நாதம் கேட்கிறது. பாறாங்கற்களை உளிகளால் செதுக்கிக் கொண்டிருக்கிறார்கள். பளபளவென்று தேய்த்து, கண்ணாடி போல மழமழப்பாக இருக்கும் இரண்டொரு தூண்கள். தூண்களை நிமிர்த்தி நட்ட பிறகு அவற்றின் மேலே அமரப் போகும் தாமரை மலர் செதுக்கப்பட்ட கற்கள். ஒரு பக்கம் யானையாகவும் ஒரு பக்கம் பாறையாகவும் காணப்படும் கற்கள்.

பல சிற்பிகள் ஒரே சமயத்தில் வேலை செய்வதைப் பார்க்கும்போது உற்சாகமே ஏற்பட்டு விடுகிறது.

"கணபதி ஸ்தபதி தான் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறார். அவருடைய மகன் இவர். பெயர் ஜயேந்திரன்" என்று அறிமுகம் செய்து வைக்கிறார்கள்.

ஓரிரவிருக்கை என்ற இந்த ஊரின் பெயர் ஓரிக்கையாகக் குறுகி விட்டது.

இதைப் பற்றி ஒரு சுவாரஸ்யமான கதை உண்டு. திருமழிசை ஆழ்வார் காஞ்சிபுரத்தில் தன் சீடனுடன் பெருமான் தரிசனம் செய்து கொண்டு தங்கியிருந்தார். ஒரு கிழவியைப் பார்த்து இரக்கப்பட்டு பகவானை வேண்டினார். அந்தக் குரூபியான கிழவி பேரழகியாக மாறி விட்டாள்! காஞ்சிபுரத்து அரசன் அவளைப் பார்த்து மோகித்து மணந்து கொண்டான்.

எப்படி






யாவது இந்த ஆழ்வாரைத் தன் மீது ஒரு பாட்டுப் பாடும்படி செய்து விட ஆசைப்பட்டான் மன்னன். ஆழ்வாருடைய சீடன் கணிகண்ணனிடம் தன் ஆசையைக் கூறினார். "என் குருநாதர் மனிதர்களைப் பாட மாட்டார்" என்று மறுத்தான் கணிகண்ணன். "நீயாவது பாடல் இயற்று" என்றான் மன்னன். கணிகண்ணன் மறுக்கவே "நீ என் நாட்டில் தங்கக் கூடாது" என்று துரத்தி விட்டான் மன்னன். கணிகண்ணன் குருவிடம் நடந்ததைச் சொல்லி விட்டுக் கிளம்பினான். குருவுக்குத் தன் சீடனிடம் மிகுந்த கனிவு. கோவிலில் அரவணை மேல் படுத்துக் கிடந்த பெருமானைப் பார்த்து,

"நீயும் உன் பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்" என்று உத்தரவு போட்டார்.

சீடனுக்குப் பின்னால் குருவான ஆழ்வாரும், ஆழ்வாருக்குப் பின்னால் நாக அணையைச் சுருட்டித் தூக்கிக் கொண்டு பகவானும் காஞ்சியை விட்டு வெளியேறினார்கள். பாலாற்றங்கரையில் வந்து தங்கினார்கள்.

அன்று காஞ்சியே களை இழந்து இருள் சூழ்ந்து விட்டது. உற்சாகமில்லாமல் எல்லோரும் தவித்தார்கள். யாருக்கும் எதுவும் பிடிக்கவில்லை. அரசனுக்குத் தான் செய்த தவறு புரிந்தது. பொழுது விடிந்ததும் ஆழ்வாரையும் சீடனையும் தேடிக் கொண்டு கிளம்பினான். பாலாற்றங்கரையில் பார்த்துவிட்டான். திருமழிசை ஆழ்வாரிடம் போய் நமஸ்காரம் செய்து "ஸ்வாமி! பகவானையும் அழைத்துக் கொண்டு கிளம்பி விட்டீரே. நான் செய்த தவறை மன்னித்துத் திரும்ப வேண்டும்" என்று வேண்டினான். "கணிகண்ணனும் என்னுடன் தான் இருப்பான்" என்றார் ஆழ்வார். காஞ்சிக்குத் திரும்பினார். கணிகண்ணனும் பெருமாளும் கூடத் திரும்பி வந்தார்கள். கோவிலருகே வந்ததும் "நீயும் உன் பைந்நாகப் பாய் விரித்துக் கொள்" என்று சொன்னார் ஆழ்வார்! உடனே பெருமாளும் பாம்பணையை விரித்துப் படுத்துக் கொண்டு தூங்கிப் போய் விட்டார்!

இதற்கும் ஓரிக்கைக்கும் ஒரு தொடர்பு இருக்கிறது. ஆழ்வார், சீடன், பெருமாள் மூவரும் ஓரிரவு அங்கே தங்கியதால்தான் ஓரிரவிருக்கை என்ற பெயர் வந்தது என்கிறார்கள்.

பெருமாள் தங்கிய இடத்தில் இந்த மணி மண்டபம் கட்டப்படுவது எவ்வளவு பொருத்தம்! கட்டி முடிக்க ஆறு வருஷம் ஆகும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

ஆறு வருடத் திட்டம் என்றால் அதற்கேற்ப செலவும் ஆகுமல்லவா! பெரியவாளின் பக்தர்கள் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மஹாலக்ஷ்மி மாத்ருபூதேசுவரர் அறக்கட்டளை நிறுவி உழைத்துக் கொண்டிருக்கிறார்கள். நன்கொடைகள் வருகின்றன. ஓரிரவு இருக்கையில் எழும் இம்மண்டபத்துக்கு ஓர் இரவு நடந்த அபூர்வ இசை நிகழ்ச்சி மூலம் நிதி சேர்கிறது!

1967இல் ஒரு நாள், பின் மாலை நேரம். தொழிலதிபர் கே.ஆர். சுந்தரம் அய்யர் இல்லத்தில் கூடியிருக்கும் குடும்ப நண்பர்கள் முன்னிலையில் செம்மங்குடி சில பாடல்கள் பாடுகிறார். எம்.எஸ். சுப்புலட்சுமியைத் தம்முடன் சேர்ந்து பாடும்படிப் பணிக்கிறார். தயங்கியபடியே ஆரம்பிக்கிறார் எம்.எஸ்...ஆலாபனை, நிரவல், ஸ்வரம் என்று உற்சாகப் பெருக்கில் முழு நீளக் கச்சேரியாகவே அது மாறி விடுகிறது!

செம்மங்குடியின் சிம்மக் குரலை வினயம் கலந்த இனிமையுடன் பின்பற்றி இழைகிறது எம்.எஸ்.ஸின் குரல். சமயோசிதத்துடன் ஒலிப் பதிவு செய்கிறார்கள் சுந்தரம் அய்யர் குடும்பத்தினர்.

இந்த சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஒலிப்பதிவை பொதுமக்கள் கேட்டனுபவிக்கும் விதமாகச் செய்துள்ளார்கள். ஸ்ரீ ராம்குமார், கே.வி. பிரசாத் வாசிப்பில் வயலின், மிருதங்கம் சேர்க்கப்பட்டு, எச்.எம்.வி நிறுவனம் மூலமாக இரட்டை காஸெட் ஆல்பம் சமீபத்தில் தயாராகி வெளியிடப்பட்டுள்ளது. 'டிவைன் யூனிஸன்' என்ற பொருத்தமான பெயருடன் விற்பனையாகும் இந்த ஒலிப்பேழையின் வருமானத்தை ஓரிருக்கை மணி மண்டபத் திருப்பணிக்குக் காணிக்கையாக்கியுள்ளார் எம்.எஸ். சுப்புலட்சுமி. சதாசிவம் – எம்.எஸ். தம்பதியின் ஆசி, ஆதரவுடன் தொடங்கப்பட்ட மணிமண்டபத் திட்டம் இன்று வேகமாக முன்னேறுகிறது.

சில ஆண்டுகளில் காஞ்சியைப் போலவே ஓரிரவிருக்கையும் பாரத நாட்டு வரைபடத்தில் முக்கிய இடம் பெறும் என்பதில் சந்தேகமில்லை.

— ஆனந்தி

மாதா,

பிதா,

மாணவன் - 14

# மாட்டுக்கு அடி; மனசிலே பொறி!



ஒரு அமெரிக்கப் பள்ளியின் கிண்டர் கார்டன் வகுப்பில் கண்ட ஒரு சிறு நாடகம், என்னை இலேசான அதிர்ச்சிக்குள்ளாக்கியது. ஆனால், மறுநிமிடமே எவ்வளவு பெரிய, சிக்கலான விஷயமான இதை, இத்தனை சுலபமாக சின்னக் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறார்களே என்று ஆச்சரியம் ஏற்பட்டது!

குழந்தைகளே நடித்துக் காட்டிய நாடகம் அது. காட்டில் ஒரு பார்ட்டி நடக்கிறது. எல்லா மிருகங்களும் ஆடிப்பாடி சந்தோஷமாக இருக்கின்றன. எல்லா மிருகங்களுமே மது அருந்துகின்றன. என்றாலும், ஒரே ஒரு யானை மட்டும் அளவுக்கு அதிகமாகக் குடிக்கிறது. அதனால், நேராக நிற்க முடியாமல் தள்ளாட்டம் போடுகிறது. பார்ட்டி முடிந்து எல்லா மிருகங்களும் புறப்படுகின்றன. குடித்து விட்டுத் தள்ளாடும் யானையும் காரில் புறப்படுகிறது. வழியில் ஒரு ஆக்ஸிடெண்ட்டில் பயங்கரமாக அடி பட்டுக் கொள்கிறது.

மிருகங்கள் பார்ட்டி நடத்துவது என்பது சாதாரண சப்ஜெக்ட். ஆனால், குடித்து விட்டு கார் ஓட்டுவது எவ்வளவு ஆபத்தானது என்பதைப் பளீரென்று எடுத்துச் சொல்லும் மெஸேஜ் இதில் இருக்கிறது. குடித்துவிட்டு கார் ஓட்டுவது ஆபத்தானது என்பதை சிறு வயதிலேயே மனத்தில் பதிய வைத்து விடுகிறது இந்தச் சிறு நாடகம்!

இதைப் பார்த்துவிட்டு வந்தபின், பத்மா சேஷாத்ரி பள்ளியிலும் சுத்தம், நல்ல பழக்க வழக்கங்கள், சாலை விதிமுறைகள் போன்ற மெசேஜ்களைக் குழந்தைகளுக்கு எடுத்துச் சொல்லும் சிறு நாடகங்களை, குழந்தைகளையும் மிருகங்களையும் கதாபாத்திரங்களாக்கி நடத்தியிருக்கிறோம். இவற்றைக் குழந்தைகள் விரும்பிப் பார்த்து, அதில் சொல்லியிருக்கும் மெசேஜையும் புரிந்து கொண்டிருக்கிறார்கள்.

அங்கே வகுப்பறைகளை மிகவும் சுத்தமாக வைத்திருந்ததும் என்னை மிகவும் கவர்ந்தது. நம் பள்ளிக்கூடங்களில் கூட, தினமும் வகுப்புகள் ஆரம்பிப்பதற்கு முன்னால், ஆயாக்கள் பெருக்கி சுத்தம் செய்வது வழக்கம்தான். குப்பைக் காகிதங்களைப் போட, ஒவ்வொரு வகுப்பிலும் ஒரு குப்பைக் கூடை இருக்கும். ஆனால், அமெரிக்கப் பள்ளிக்கூடங்களில் இதில்கூட எனக்கு ஆச்சரியம் காத்திருந்தது. ஒவ்வொரு கிளாசிலும் ஒரு பீரியட் முடிந்து டீச்சர் மாணவர்களிடம், ''இடதுபுறம் கீழே பாருங்கள்; காகிதம் கிடந்தால் எடுத்துக் கொள்ளுங்கள்; வலதுபுறம் கீழே பாருங்கள்; காகிதம் கிடந்தால் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லுகிறார். கீழே கிடக்கும் காகிதங்களை எடுத்துக்கொண்டு, மாணவர்கள் ஒவ்வொருவராக வரிசையில் எழுந்து சென்று, வகுப்பில் வைக்கப்பட்டிருக்கும் குப்பைத் தொட்டியில் போட்டு விட்டுத்

திருமதி ஒய்.ஜி.பி

தங்கள் இருக்கைக்குத் திரும்பி வருகிறார்கள்.

அங்கே, ஒரு பாடத்தை ஆசிரியரே நேரடியாக எடுத்துக் கொண்டு, சொல்லிக் கொடுக்கிற முறையைப் பின்பற்றுவதில்லை! 'Look, say and write' முறையைப் பின்பற்றுகிறார்கள். வழக்கமான பாட விளக்கம் முடிந்தவுடன், முதலில் அமைதியாக, மனசுக்குள்ளேயே படிக்கிறார்கள்; அப்புறம் இரண்டிரண்டு பேராக அந்தப் பாடத்தில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்று விவாதிக்கிறார்கள். இந்த விவாதத்தின்போது வகுப்பறையில் சலசலவென்று சப்தம் இருக்கவே செய்கிறது. இந்தச் சலசலப்பை அங்கே 'purposeful noise' என்று குறிப்பிடுகிறார்கள். 'சப்தம் போடாதே! பாடத்தைக் கவனி' என்று சொல்லியே பாடம் நடத்திப் பழகிவிட்ட எனக்கு, இது புதுமையாக இருந்தது. அதேபோல சிறு வயதுக் குழந்தைகளுக்குக்கூட ஆய்வுக் கூடங்கள் வைத்திருக்கிறார்கள்.

அமெரிக்கப் பாட முறைகளின் தாக்கத்தில், இங்கே நான் செயல்படுத்திய இன்னொரு விஷயம்தான் 'லாங்குவேஜ் லேபாரடரி'. இங்கே, ஆங்கில மொழியை முறையாக எப்படி உச்சரிப்பது, ஸ்பெல்லிங் ஸ்கில் போன்ற விஷயங்கள் சொல்லித் தரப்படுகின்றன. குழந்தைகள், ஹெட்போன் பொருத்திக்கொண்டு டேப்பில் சொல்லித் தரப்படும் உச்சரிப்பு, ஸ்பெல்லிங் போன்ற விஷயங்களைக் கற்றுக் கொள்வார்கள். இது சிறு வயதிலே ஆங்கில உச்சரிப்பு மேம்படுவதற்கு மிகவும் உதவியாக இருக்கிறது.

உயிரியல் பாடம் நடத்த வேண்டுமென்றால், அவர்கள் பள்ளிக்கூடத்தின் பெரிய, பசுமையான தோட்டத்துக்கே போய் விடுகிறார்கள்.

என்னைக் கவர்ந்த இன்னும் ஒரு விஷயம் ஃபீல்டு டிரிப். மாணவர்களை, இன்ன இடத்துக்குத்தான் என்று குறுகிய வட்டம் எதுவும் போட்டுக் கொள்ளாமல், இந்த ஃபீல்டு டிரிப்புக்கு ஏற்பாடு செய்து அழைத்துக்கொண்டு போகிறார்கள். நான் சென்றபோது, அவர்கள் போனது ஒரு போலீஸ் ஸ்டேஷனுக்கு! நானும் கூடவே போனேன்.

சிறு மாணவ, மாணவிகள் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனவுடன், இது என்ன? அது என்ன? இது ஏன் இப்படி? அது ஏன் அப்படி? இவர் யார்? இவரை ஏன் அறைக்குள்ளே அடைத்து வைத்திருக்கிறீர்கள்? என்று கேள்விக் கணைகளால் துளைத்து எடுத்து விட்டார்கள். என்ன காரணத்துக்காக ஒரு மனிதரை லாக் அப்பில் வைத்திருக்கிறோம் என்று சொன்னால், அவரிடம் போய் நீ ஏன் அந்தத் தவறைச் செய்தாய்? என்று கேட்டார்கள்.

ஃபீல்டு டிரிப் முடிந்து வந்தவுடன், தாம் கண்டவற்றை, அது பற்றிய தமது கருத்துக்களையெல்லாம் ஒரு ரிப்போர்ட் ஆக எழுதித் தருகிறார்கள்.

விடுமுறை என்றால் போதும், மியூசியங்களுக்குப் போய்ப் பார்த்து, விவரங்கள் சேகரித்து மறுபடியும் ஸ்கூல் திறக்கும்போது, அது பற்றி புராஜக்ட் ரிப்போர்ட் சமர்பிக்கும் முறை அங்கு பின்பற்றப்படுகிறது.

மியூசியங்களுக்குப் போகிற மாணவர்கள், அங்கே பார்க்கும் பல்வேறு ஐட்டங்கள் பற்றிய விவரங்களையும் கேட்டு, நோட்டுப் புத்தகத்தில் குறிப்பெடுத்துக் கொள்கிறார்கள். டேப் ரெக்கார்டர் எடுத்துக்கொண்டு போய், மியூசிய அதிகாரிகள் சொல்லுவதை அப்படியே பதிவு பண்ணிக் கொண்டு விடுகிறார்கள். சில ஐட்டங்களின் அருகே உட்கார்ந்து, சித்திரமாக வரைந்து விடுகிறார்கள்; போட்டோ எடுத்துக் கொள்ளவும் அங்கு அனுமதி தரப்படுகிறது. இப்படிப் பலவிதமாகவும் சேகரிக்கப்படும் தகவல்களை ஒழுங்குபடுத்தி, புராஜக்ட் ரிப்போர்ட் தயாரித்து மறுபடியும் வகுப்பறையில் சக மாணவர்களுடன் தமது அனுபவங்களை, கருத்

**''குறிப்பிட்ட நேரத்தில் நான் பீச்சுக்கு வராட்டா துடிச்சுப் போயிடுவார்டீ...''**

**''பின்னே, காதலர்னா சும்மாவா...''**

**''சே! சுண்டல் விற்பவரைச் சொல்றேன்...!''**

**– எஸ். மோகன்**



துக்களை, சேகரித்த தகவல்களைப் பகிர்ந்து கொண்டு பலனடைகிறார்கள்! இந்த அடிப்படையில்தான், எங்கள் பள்ளிக்கூட விடுமுறை சமயத்தில், வெறுமனே விளையாடிப் பொழுதைக் கழிக்காமல் உருப்படியாக ஏதாவது கற்றுக் கொள்ள வழி செய்யும்படி 'விடுமுறை ஹோம் வொர்க்' கொடுக்கப்படுகிறது. ஆனால், நம் ஊரில் குழந்தைகளைத் தனியாகப் பல்வேறு இடங்களுக்கும் பெற்றோர்கள் அனுப்பத் தயங்குவார்கள்! அதேசமயம், குழந்தைகளை அழைத்துக்கொண்டு போகவும் நேரமிருப்பதில்லை. எனவே, வீட்டிலே இருந்தபடி செய்வதற்கேற்ப நாங்கள் ஹோம் வொர்க் அளிப்பதை வழக்கமாகக் கொண்டிருக்கிறோம்.

பள்ளிக்கூடத்தின் சார்பில் ஒரு கருத்தை எடுத்துக்கொண்டு அதைப் பல்வேறு சப்ஜெக்ட்கள் மூலம் எடுத்துச் சொல்லும் பாணியையும் நான் அங்குதான் பார்த்தேன். உதாரணமாக 'இசை நாட்டியமும், கல்வியும்' என்று ஒரு தீம் எங்களால் எடுத்துக் கொள்ளப்பட்டது. அந்த புராஜக்டில் இலக்கியம் என்றால், அதில் இசை, நாட்டியம் பற்றி என்ன சொல்லியிருக்கிறது? கணிதம் என்றால் மேடையின் நீள அகலம் என்று ஆரம்பித்து ராகம், தாளத்தில் உள்ள பெர்முடேஷன், காம்பினேஷன் வரை அனைத்தும் இடம் பெறும். சரித்திரம் என்றால் இசை, நடன சாஸ்திர சரித்திரங்களில் தொடங்கி, எல்லா விவரங்களும் இடம் பெறும். புவியியலுக்கு எப்படித் தெரியுமா? நம் நாட்டின் எந்தெந்தப் பகுதியில் என்னென்னவிதமான இசை, நடனங்கள் தோன்றி, வேரூன்றியுள்ளன என்று விவரிக்கப்படும். ஒலி, ஒளி சாதனங்களுக்குக் கல்வியில் முக்கியத்துவம் உண்டல்லவா? இசை, ஆடியோவில் ஒலிக்கும்; நடன டெமான்ஸ்டிரேஷனும் உண்டு. பயாலஜியை எடுத்துக் கொண்டால், நடனம் ஆடுகிறபோது உடலின் ஒவ்வொரு அங்கமும் எப்படி அசைகிறது என்று விளக்கப்படும். குரல் எப்படி இனிய இசையாய் ஒலிக்கிறது என்பதும் புரியும்படி சொல்லப்படும்.

இப்படியெல்லாம் நாங்கள் எங்கள் பள்ளியில் செய்து பார்த்ததற்கு இன்ஸ்பிரேஷன் என்னுடைய அமெரிக்க விஜயம்தான்.

ஒருநாள் எங்கள் பள்ளிக்கூடத்துக்கு வெளியில் ஒருவன், வண்டி இழுக்கத் திணறிய ஒரு மாட்டைப் போட்டு அடி அடியென்று அடித்துக் கொண்டிருந்ததை சில மாணவர்கள் பார்த்திருக்கிறார்கள். இரண்டு பேர் என்னிடம் வந்து புகார் பண்ண, நான் இதுபோல பிராணிகளுக்குத் துன்பம் விளைவிக்கப்படும்போது, உடனே புளூகிராஸ் அமைப்புக்குத் தகவல் கொடுக்க வேண்டும் என்றேன். அதற்குள், இன்னும் சில மாணவர்கள், நேரே அந்த ஆளிடம் போய் 'அடிக்கக் கூடாது' என்று சொல்லியிருக்கிறார்கள். அவன் 'என் மாடு; நான் அடிப்பேன்' என்று தர்க்கம் பண்ண, மாணவர்கள் 'நீ அடிப்பது தவறு' என்று கோரசாகக் கத்தியிருக்கிறார்கள். மாடு சோர்ந்து போய்ப் படுத்து விட்டது. அரை மணியில் புளூகிராஸ்காரர்கள் வந்து மாணவர்களைப் பாராட்டிவிட்டு, அடிபட்ட மாட்டைக் கொண்டு போய் விட்டார்கள்.

இந்தச் சம்பவம்தான் நாங்கள் இன்னொரு புராஜக்ட் நடத்த அடித்தளம் அமைத்துக் கொடுத்தது. தலைப்பு: 'நம் வாயில்லா நண்பர்கள்.'

அந்த புராஜக்ட்டில், பல்வேறு வீட்டுப் பிராணிகள், காட்டு மிருகங்கள் பற்றிய விவரங்களில் தொடங்கி, நம் கடவுள்களுக்கு வாகனமாய் விளங்கும் விலங்குகள் வரை அனைத்தும் இடம் பெற்றன. ஒரு சில மாணவர்கள், தாங்கள் வளர்க்கும் செல்லப் பிராணிகளைக்கூட அழைத்துக் கொண்டு வந்து காட்சிக்கு வைத்தார்கள்!

(அடுத்த வாரம் சொல்கிறேன்)



மாதிரி அந்தப் பெண்தான் படபடத்துப் பொழிந்து கொண்டிருந்தாளே தவிர, அவன் ஒரு சொல் கூடச் சிந்தவில்லை. அவள் பேசுகிறாளா, நிறுத்துகிறாளா என்பதைக் கூட கவனிக்காமல், ஆமோதிக்கும் விதமாக அவன் தலை ஓயாமல் ஆடிக் கொண்டே இருந்தது. அப்படியே உச்சந் தலையில் ஒரு கையும் முகவாயில் ஒரு கையும் கொடுத்து, அவன் எதிர்பாராத கணத்தில் தலையாட்டத்தைத் தடுத்து நிறுத்தினால் எப்படியிருக்கும் என்று அவள் எண்ணிப் பார்த்தாள். அவன் பேய் விழி

# கத்தி முனையில் துளி விஷம்

திகுதிகுவென்று பற்றியெரியும் கொள்ளிக் கட்டையை உருவி நீரில் இட்டாற்போலிருந்தாள் அந்தப் பெண். வளர்மதியால் தன் பார்வையை மீட்டெடுக்க முடியவில்லை. முப்பது வயதிருக்குமா? மொச்சைக் கொட்டை அளவில் முகத்துக்குச் சற்றும் பொருந்தாத மூக்குத்தி தனியே ஒளிர்ந்தது. ஒரு வகையில் அச்சமூட்டுவதாகக் கூட இருந்தது. நல்ல கம்பீரமான ஆம்பளைக் குரலில், தெற்குத் தமிழில், திரி கிள்ளிப் பற்றவைத்த சரவெடி போலப் பேசிக் கொண்டே இருந்தாள்.

மாமா, மாமா என்கிற விளியைத் தவிர, பேச்சின் சாரம் ஓர் அட்சரம் கூட மற்றவருக்குப் புரிந்து விடக் கூடாது என்கிற கவனமுடனே அவள் பேசியதாகப்பட்டது வளர்மதிக்கு. ஒரு கட்டத்தில், அந்தப் பெண்ணை விட அவளது மாமா மிகவும் ரசிக்கத்தக்கவனாக இருந்தான். ரயிலில் ஏறி அமர்ந்த விநாடியிலிருந்து, பம்ப்செட் விழிக்கிற காட்சி கண்முன் தோன்றி, புன்னகை உண்டானது.

வாழ்க்கைதான் அவர்களுக்கு எத்தனை அழகும் கவித்துவமும் மிக்கதாகக் காட்சியளிக்கிறது. ஒரு கொக்குச் சிறகடிப்பு போல! சம்பாஷணையில் உற்சாகம். புன்சிரிப்பில் உதிரும் சில நட்சத்திரங்கள். ஆ, தலையாட்டலில் கூடத் தாளலயம். ரயில் பெட்டியின் விளக்குகளுக்கு அவர்கள் இருவரும்தான் ஒளியேற்றியிருந்ததாகப்பட்டது வளர்மதிக்கு.

'மூஞ்சியப் பாரு, கொரங்கு!'

சட்டென்று தன் கணவனின் எரிச்சல் மிகுந்த குரலும் வழக்கமான வசவும் நினைவைக் கவ்வ, அவள் நத்தையாகத் தனக்குள் ஒடுங்கிக் கொண்டாள். கையில் ஒரு பால் கவர் போலத் துணி போர்த்திச் சுருண்டு கிடந்த குழந்தையைத் தன் உடலுக்குள் மறுபடி ஒளித்து வைப்பவளாக ஒட்டிக் கொண்டாள்.

ஒன்றரை வருடத் திருமண வாழ்வில் சுமார் ஒரு கோடி முறை அவன் தன்னைக் குரங்கு என்று முகத்தை வலித்துக் கொண்டு,

அருவருப்புடன் அழைத்திருப்பான் என்று அவள் நினைத்தாள். தனித்திருந்த வேளைகளில், உறக்கத்தில், முதுகுப் பக்கம் கிளர்ந்து தனக்கொரு வால் முளைக்க ஆரம்பித்திருக்கிறதோ என்று அவள் அஞ்சத் தொடங்கியிருந்தாள். சட்டென்று ஒருநாள் உண்டாகியிருப்பது தெரிய வரவே, தாற்காலிகமாகக் கவலை மறந்தாள்.

முகத்தில் பிரத்தியேகமான களையொன்று பூத்திருப்பதாகவும் அவள் ஒரு தேவதை போலாகி விட்டாள்; நிச்சயம் பெண் குழந்தைதான் பிறக்கும் என்றும் தெரிந்தவர்கள் உச்சிமோந்து, ஆசி கூறிக் கொண்டிருந்த காலத்திலுங்கூட அவன், 'மூஞ்சியப் பாரு, கொரங்கு!' என்கிற தன் வழக்கமான வெளிப்பாட்டை மாற்றிக் கொள்ளவில்லை.

காரணங்கள். அவை எப்படியோ ஒளிந்திருந்து, அவனிடம் மட்டும் அகப்பட்டு விடுகின்றன. அவளையறியாமல் இட்டிலி மாவு சிந்தி விடுகிறது. துவைக்கும் துணியில் கறை போகாமல் இருந்து விடுகிறது. அவசர நேரத்தில் காஸ் தீர்ந்து போய், அடுத்த சிலிண்டர் வரத் தாமதமாகி விடுகிறது. மின்சாரக் கட்டணத்தைச் செலுத்த வேண்டிய நாட்கள் எங்கோ ஓடி ஒளிந்து கொண்டு விட, அந்தச் சனியன், கடைசி நாள் மட்டும் பூதம் போல எதிரே வந்து விடுகிறது. உடனே அவன் கமண்டல நீரைக் கையில் ஏந்தி, உக்கிரமான ஒரு ரிஷியாகி விடுகிறான். மறுவிநாடி அவள் முதுகும் கன்னங்களும் சிலிர்த்துக் கிளர்ந்தெழ ஆரம்பித்து விடுகின்றன.

செயலின் பிழைக்கு உருவைப் பழிப்பது எப்படிச் சரியாகும்? தவிர, தான் பிழையாக மட்டுமே நடந்து கொண்டிருக்கிறோமா என்று அவள் எண்ணிப் பார்த்தாள். அப்படியொன்றும் இல்லை என்று தோன்றியது. பிழையான தருணங்கள் மிகைப்படுத்தப்பட்டு விடுகின்றன. பல்லைக் கடித்து, கண்களைச் சுருக்கி, நெற்றி நரம்புகள் நகர அவன் கமண்டல நீர் தெளிக்கும்போது,



குறைந்தபட்சமாகத் தான் ஒரு கொலை பாதகம் பண்ணியிருக்க வேண்டும் என்று தோன்றிவிடும். அவனது அவ்வப்போதைய மனநிலையைப் பொறுத்து சோம்பேறிக் குரங்கு, குருட்டுக் குரங்கு, பொறுப்பற்றக் குரங்கு, தடிக் குரங்கு எனப் பல அடைமொழிகள் கூடும்.

அன்றொரு நாள் வீட்டுக்கு அவனது அப்பா வந்திருந்தார், ஊரிலிருந்து. பொங்கலோ, தீபாவளியோ – சீர் சுமந்து இருநூறு மைல் பயணம்.

தொலைக்காட்சியில் பட்டிமன்றம். மாப்பிள்ளையும் மாமனாரும் மூழ்கிப் போயிருந்தார்கள். கிரைகளா பெண்கள் கிள்ளி எறிவதற்கு? என்று ஆவேசமாக ஒரு பெண்மணி கேட்டுக் கொண்டிருந்தாள். பிரமாதம் என்று அவன் சொன்னான். வாயில் குதப்பிக் கொண்டிருந்த முறுக்குத் துகள் தெறித்து, அவள் அப்பாவின் மேல் பட்டது.

நாலு எட்டில் அவனை நெருங்கி, சட்டையைப் பற்றி இழுத்து, 'கொரங்கு!' என்று கூவ வேண்டும் போலிருந்தது அவளுக்கு. எப்போதும் போல் அடக்கிக் கொண்டாள்.

இரவு, அபூர்வமாக அவன் சாந்தமான மனநிலையில் இருப்பதாகப்பட்டது. அப்பாவை வண்டி ஏற்றி விடப் போய் வரும் போது, அதிசயமாக் ஒரு முழம் பூ வாங்கி வந்திருந்தான். அடடே, அவ்வப்போது மனுஷனாகவும் இருக்கிறானே என்று அவள் சந்தோஷப்பட்டாள். என்றால், சற்றுப் பகிர்ந்து கொள்ளலாமே?

சாதாரணமாகக் கேட்டாள்: "பிடிச்சிருந்ததா பட்டிமன்றம்?"

'ஆமாண்டி செல்லக் குரங்கே' என்று மேலே விழுந்தவன், இறக்க முடியாத சுமையாகப்பட்டான்.

உண்டானபோது அவளுக்கு ஒரே சந்தோஷம், ஊருக்குப் போகலாம் என்பதாக இருந்தது.

கொண்டாடும் குடும்பத்தில் அவள் ஒரு குட்டி ராணி. அண்ணன்கள் அன்பைப் புதுச் சேலையில் மூடி வந்து விரித்துக் கொடுத்தார்கள். பாட்டிக் கிழவிக்கென்ன அப்படியொரு குஷி? விஷயத்தை ஊர் முழுக்கத் தமுக்கடித்துச் சொல்லிவிட்டு, அவளை உள் அறையில் உட்காரவைத்து வேளைக்கொருதரம் திருஷ்டி கழித்தாள். ஐயோ அம்மா, நானென்ன குழந்தையா? சீ போடி. என்னிக்கும் என் குழந்தை

"நீங்க பிரபலமான ஜோக் எழுத்தாளராயிருக்கலாம்; அதுக்காக நீங்க எழுதற ஜோக்குகளைப் படிச்சுட்டு சிரிக்க மாட்டேங்கிறாங்கங்கிற காரணத்துக்காக மனைவிகிட்டேயிருந்து டைவர்ஸ் பெற முடியாது..."

– ராஜிராதா

தானேடி நீ? பார்த்துப் பார்த்துப் பூரித்து, நெற்றியில் முத்தமிட்ட ஈரம் வெகு நாட்கள் உலரவில்லை.

நிலைக்கண்ணாடியில் அவள் முகம் பொலிவடைந்திருந்தது. ஓர் இளவரசி ஆகிவிட்டிருந்தாள் அவள். ஆரோக்கியமான உணவு. அன்பான உறவு. இணக்கமான சூழல். உதிக்கப் போகிற புதிய ஜீவன் பற்றிய கற்பனையைத் தின்று கொண்டிருந்தாள்.

நடுவில் ஓரிருதரம் அவன் வந்து போன போது திமுர் திமுரென்று முதுகுப் பக்கம் நமைச்சலெடுக்கத் தொடங்கி விடும் அவளுக்கு. அவனும் அவன் முகமும் மீசையும்.

முதன் முதலில் அவள், அவனைக் 'குரங்கே' என்று அடி மனத்து வெறுப்புடன் அழைப்பதற்கு முந்தைய விநாடி வரை அவன் முகம் அவளுக்கு மிகவும் பிடித்த மானதாகத்தான் இருந்தது.

'ஆம்பளைக்கு அழகென்ன?' என்று திருமணத்துக்கு முன்பு பாட்டிக் கிழவியும் அப்பாவும் அம்மாவும் ஒருசேரக் கேட்டிருந்தார்கள். அதானே, அழகென்ன பெரிய அழகு? குணம்தானே முக்கியம் என்று நினைத்திருந்தாள். ஆனாலும் அவன் கவர்ச்சியாகத்தான் தெரிந்தான்.

வாழ்க்கை விசித்திரங்களைப் பொத்தி வைத்து, பூச்சாண்டி காட்டுகிறது. எதிர்பார்ப்புகள் பொய்த்துப் போவதைச் சமாளித்து விடலாம், பிரமாதமில்லை. எதிர்பாராத அதிர்ச்சிகள்தாம் தாங்கமுடியாமல் வந்து கழுத்தை நெரிக்கின்றன.

அந்தக் குரலும் மிதமிஞ்சிய வெறுப்பில் பொசுங்கி உதிரும் வசவும் சகிக்க முடியாத உணர்வுகளை உசுப்பி விட்டு, "கொரங்கு! கொரங்கு! நீதான் கொரங்கு! சிம்பன்ஸிக் கொரங்கு! மனுஷக் கொரங்கு! கறுப்புக் கொரங்கு! பீடைக் கொரங்கு!" என்று மனத்துக்குள் அலற வைக்கின்றன. அவள், மனம் மரத்துப் போனாள். பிரசவத்துக்குப் போன போது, அவனைப் பிரிந்து போவது



பற்றிய வருத்தமொன்றும் நெஞ்சையடைக்க வில்லை. ரயிலடியில் அவன் வேகமாக நடந்து வராததற்கும் அவன் குரங்கு என்று தான் திட்டியிருந்தான்.

ஆஹா, ஆறு மாதங்கள். அம்மா வீடு எங்கே? இனிமே ரொம்ப தூரம். ரயிலில் குழந்தையை' விட்டுக் கொண்டு படுத்துக் கொள்வது ரொம்பக் கஷ்டம் என்று அவளுக்குத் தோன்றியது.

"நீ கொஞ்ச நேரம் படுத்துக்கம்மா. குழந்தையை நான் வெச்சுக்கறேன்" என்று அம்மா பலமுறை கேட்டுப் பார்த்தும் அவளுக்கு மனமில்லை. தூங்க விருப்பமில்லை என்பதுதான் உண்மையாக இருந்தது. அவள் நிறைய யோசிக்க விரும்பினாள். தன்னைப் பற்றி. தன் கணவனைப் பற்றி. தொட்டதற்கெல்லாம் சிடுசிடுக்கும் அவன் குணம் பற்றி.

இதுவரை அவனைப் பற்றிக் குறையாக ஒரு வார்த்தை அவள் தன் வீட்டாரிடம் சொல்லியிருக்கவில்லை. அவர்கள் அளவில் வளர்மதி என்னும் குட்டிராணி, கணவன் வீட்டிலும் குட்டிராணியாகவே இருக்கிறாள். குரங்காக அல்ல. இப்போது குட்டி ராணிக்கொரு குஞ்சு ராணி பிறந்திருக்கிறாள். ஆஹா, குழந்தைதான் எத்தனை மிருது, கையில் குழைத்த சோப்பு போல! அட, அந்த சிரிப்பைப் பாரேன். பட்டுக் குட்டி.

கண் பட்டு விடும், ரயிலில் போனால் என்று அம்மா அதன் கன்னத்திலும் நெற்றியிலும் அகல அகலமான கருப்புப் பொட்டுகள் வைத்திருக்கிறாள். அப்படியும் பிதுங்கி வழியத்தான் செய்கிறது அதன் அழகு.

சட்டென்று அவளுக்குத் தன் கணவனின் குரூர முகமும் அந்தக் குரலும் வசவும் ஞாபகம் வந்து, ஒரு கணம் உடல் குலுங்கியது.

விஷயம், ரசனை சம்பந்தப்பட்டது: குரங்கைக் கூடத் தன்னால் அழகான ஜீவராசி என்று ரசிக்க முடியும் என்று அவளுக்குத் தோன்றியது. ஆனால், அவன் குழந்தையைக் கூடக் குரங்கே என்று திட்டக்கூடும்.

நள்ளிரவில் விழித்துக் கொண்டு அழும் குழந்தை. வேட்டியை நனைக்கிற குழந்தை. கையில் பட்டதைப் போட்டுடைக்கிற குழந்தை.

"குரங்கே! குரங்கே! குரங்கே!" அடிவயிற்றுக் குரலெடுத்து அவன் அலறக்கூடும்.

அவள் சிலிர்த்துக் கொண்டாள்.

எதிர் இருக்கை ஜோடி சுற்றி இருப்போர் பற்றிய பிரக்ஞை ஏதுமற்று ஒருவருக்கொருவர் சீண்டியும் சிரித்தும் உணவைப் பகிர்ந்து உண்டும் பயணத்தை அர்த்தமுள்ளதாக்கிக் கொண்டிருந்தனர்.

தானென்ன, பொறாமைப்படுகிறோமா என்று அவள் தன்னையே கேட்டுக் கொண்டாள். எதற்காக யாரையோ பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறோம் என்றும் தோன்றியது. அந்தளவுக்குத் தன் கணவனைப் பற்றி எண்ணாமலிருப்பது பற்றிய உறுத்தலுமிருந்தது. சிந்தனையில்தான் எனினும், தவிர்க்கக்கூடியவனா அவன்?

செவியில் ஒலிக்கிற வானர உறுமல்.

அதிகாலை ரயில் நிலையத்துக்கு அவன் வந்திருந்தான். அலுவலகத்துக்கு விடுமுறை சொல்வதற்கில்லை. பர்மிஷன் சாத்தியமுமில்லை. எல்லோரும் நலமா? எங்கே என் குழந்தை? ங்கா சொல்லு?

பெட்டிகளை எண்ணி இறக்கிக் கொண்டிருந்தபோது அவன் சட்டென்று அவள் காதோரம் கேட்டான் :

"யாருடீ அது கருங்கொரங்கு?"

வளர்மதிக்கு, அவனை அப்படியே நகக்கி, ரயில் சக்கரங்களிடையே தள்ளிவிட வேண்டும்போன்ற வெறி உண்டானது.

இனி என்றென்றைக்கும் அவனுக்குக் குரங்கு ஞாபகம் வரக்கூடாதபடிக்கு ஏதாவது செய்ய மிகவும் விரும்பினாள். வீடு திரும்பும் வழியில் சொன்னாள் :

"ஐயோ, அவ புருஷனை நீங்க பார்க்கலையே! ப்பா, என்ன ஹாண்ட்ஸம் தெரியுமா? அந்த உயரமும் கம்பீரமும் சிரிப்பும்..."

அவன் முகம் இருண்டு போவதை அனுபவித்து ரசித்தாள். ●




### பதினான்காம் அத்தியாயம்

## பறக்கும் குதிரை

நந்தினி ஒளி வீசிய அந்த வாளை எடுத்து ஆசையுடன் தன் மார்போடு அணைத்துக்கொண்டாள். பிறகு முகத்துடன் சேர்த்து வைத்துக் கொண்டு தன் செவ்விதழ்களினால் முத்தமிட்டாள். ஒரு கணம் அக்கினிக் கொழுந்தைச் செந்தாமரை மலர் முத்தமிடுவது போலிருந்தது. அடுத்த கணத்தில் இரத்த வர்ண மேகம் பூரண சந்திரனைக் குறுக்கே நின்று தடுக்கப் பார்ப்பது போலிருந்தது. நந்தினியின் முகம் அப்போது காபாலிகர்கள் பூஜித்த இரத்த பலி கேட்கும் காளியின் கோர சௌந்தரிய முகம் போலாயிற்று. கத்தியை எடுத்து முன் போல் பக்கத்தில் வைத்ததும் அவளுடைய முகம் பழைய வசீகரத்தை அடைந்தது.

"ஆம்; தெய்வம் எனக்கு அளித்திருக்கும் சூசகம் இந்த வாள். ஆனால், அந்த சூசகத்தின் பொருள் இன்னதென்பதை நான் இன்னும் அறியவில்லை. இந்த வாளை நான் அடிக்கடி கொல்லன் உலைக்கு அனுப்பித் துரு நீக்கிப் பதப்படுத்திக் கூராக்கி வைத்துக்கொண்டு வருகிறேன். தாய்ப்புலி தான் பெற்ற குட்

அமரர் **கல்கி**



டிப்புலியைப் பாதுகாப்பது போல் இதை நான் பாதுகாத்து வருகிறேன். உரிய பிராயம் வருவதற்குள் புலிக்குட்டி நீளக்கொம்பு படைத்த காட்டு மாடுகளிடம் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது அல்லவா? அராபிய நாட்டார் தங்கள் குதிரையை எவ்வளவு அன்புடன் பேணுகிறார்களோ, அப்படி இதை நான் பாதுகாத்து வருகிறேன். நோய்ப்பட்ட சுந்தர சோழ சக்கர வர்த்திக்கு வானமாதேவி பணி விடை செய்வதுபோல் நானும் இந்த வாளுக்குச் செய்து வருகிறேன். இதைக் கொண்டு நான் என்ன செய்ய வேண்டும் என்பதைத் தெய்வம் இன்னும் எனக்கு அறிவிக்கவில்லை. மலர் மாலை தொடுத்துப் பழகிய இந்தக் கைகளினால் இந்த வாளை எந்தக் கொடியவனுடைய விஷ நெஞ்சத்திலாவது செலுத்த வேண்டு மென்பது தெய்வத்தின் ஆக்ஞையோ, அல்லது என்னுடைய மார்பில் என்னு டைய கையினாலேயே இதைச் செலுத்திக் குபுகுபுவென்று பெருகும் இரத்தத்தை ஆடை ஆபரணங்களால் அலங்கரித்து இந்த உடம்பில் பூசிக் கொண்டு நான் சாக வேண்டும் என்பது தெய்வத்தின் சித்தமோ, இன்னும் அது எனக்குத் தெரியவில்லை. இந்த வாளை எனக்கு அளித்திருக்கும் தெய்வம் சமயம் வரும்போது அதையும் எனக்குத் தெரியப்படுத்தும். அந்தச் சமயம் எப் போது வரும் என்று தெரியாதபடியால் இரவும் பகலும் எந்த நேரத்திலும் ஆயத்தமாயிருக்கிறேன். ஆம்; அழ கிற்குப் பெயர் போன பழுவூர் இளைய ராணிக்கு ஆடை ஆபரண அலங் காரங்களில் மிக்க பிரியம் என்பது நாடறிந்த செய்தி. இரவு பகல் அறுபது நாழிகையும் நான் இந்த மேனியை அலங்கரித்து அழகுபடுத்தி வைத்துக் கொண்டிருந்தேன். பாவம்! பழுவேட் டரையர் அவருக்காகவும் அவருடைய கௌரவத்தை முன்னிட்டும் நான் இப்படி சதா சர்வகாலமும் சர்வாலங் காரத்துடன் விளங்குவதாக நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறார்! என் நெஞ்சகத்தில் கொழுந்துவிட் டெரியும் தீயை அவர் அறியார்!"

இதையெல்லாம் பிரமை பிடித்தவன் போலக் கேட்டுக் கொண்டிருந்த வல்லவரையன் சுய உணர்ச்சியை வருவித்துக்கொண்டு, "அம்மணி! பெரிய பழுவேட்டரையர் எங்கே?" என்று கேட்டான்.

"ஏன்? அந்தக் கிழவரைப் பார்ப் பதற்கு உமக்குப் பயமாயிருக்கிறதா?" என்றாள் நந்தினி.

"இல்லை, அம்மணி! தங்களைப் பார்க்கவே நான் பயப்படவில்லையே! பழுவேட்டரையரிடம் எனக்கு என்ன பயம்?" என்றான் வந்தியத்தேவன்.

"ஆகா! உம்மை எனக்குப் பிடித் திருப்பதின் காரணம் அதுதான். எத னாலோ என்னைக் கண்டு எல்லாரும் பயப்படுகிறார்கள். வீராதி வீரரும் எத்தனையோ போர்க்களங்களில் போரிட்டு உடம்பில் அறுபத்து நாலு புண் சுமந்தவருமான பெரிய பழுவேட் டரையர் என்னைக் கண்டு பயப்படு கிறார். சின்னப் பழுவேட்டரையர், - காலனையும் கதி கலங்க அடிக்கக் கூடிய காலாந்தக கண்டர், - என்னிடம் வரும்போது பயந்து நடுங்குகிறார். இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை ஏக சக்ராதிபதியாக ஆள விரும்பும் மது ராந்தகத் தேவர் என்னிடம் வரும்போது பயபக்தியுடன் வருகிறார். யம லோகத்தை எட்டிப் பார்த்துக் கொண் டிருக்கும் சுந்தர சோழச் சக்கரவர்த்தி கூட நான் அருகில் சென்றால் நடுங்குகிறார். ஒவ்வொரு தடவை அவர் என்னைக் கண்டு மூர்ச்சையே அடைந்து விடுகிறார். இன்றைக்கு வந்தானே பார்த்திபேந்திர பல்லவன்? அவனுடைய அஞ்சா நெஞ்சத்தையும் வீரத்தைப் பற்றியும் வெகுவாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆதித்த கரிகாலரின் உயிர்த்தோழர் என்றும்



அறிந்திருக்கிறேன். ஆனால் என் அருகில் வந்த அரை நாழிகைக்கெல்லாம் அவன் எப்படி அடங்கி ஒடுங்கிப் போய் விட்டான்? ஆதித்த கரிகாலரிடம் உடனே போக வேண்டிய கடமையையும் மறந்து என்னைத் தொடர்ந்து வருகிறான். நான் காலால் இட்ட பணியைத் தலையால் நிறைவேற்றி வைக்க ஆயத்தமாயிருக்கிறான். அதைப் பார்க்கும்போது எனக்கு ஒன்று நினைவுக்கு வருகிறது. சிறு குழந்தையாயிருந்தபோது எரியும் நெருப்பைக் காண எனக்கு ஆசையாயிருக்கும். நெருப்பின் அருகில் செல்வேன். தீயின் கொழுந்தைத்



தொடுவதற்கு ஆசையுடன் கைவிரலை நீட்டுவேன். ஆனால் அதற்குத் தைரியம் வராது. சட்டென்று விரலை எடுத்துக் கொண்டு விடுவேன். இம்மாதிரி எத்தனையோ தடவை செய்திருக்கிறேன். பார்த்திபேந்திரன் என் பக்கத்தில் நெருங்கி வருவதையும் பயந்து விலகுவதையும் பார்க்கும்போது அந்தப் பழைய ஞாபகம் எனக்கு வந்தது. பல்லவன் மட்டும் என்ன? நீர் யாருடைய தூதராக ஓலை எடுத்துக்கொண்டு காஞ்சியை விட்டுக் கிளம்பினீரோ, அந்த ஆதித்த கரிகாலரும் அப்படித்தான். நாங்கள் குழந்தைகளாயிருந்த நாளிலிருந்தே அவருக்கு என் பேரில் அளவில்லாத வாஞ்சை; கூடவே ஒரு பயம். அதனால் என் வாழ்க்கை எப்படியெல்லாம் மாறி விட்டது? ஐயா! உமது எஜமானரை நீர் மறுபடியும் சந்திக்கும்போது எனக்காக ஒரு செய்தி சொல்வீரா? 'சென்றதையெல்லாம் நான் மறந்துவிட்டேன். நான் இப்போது அவருக்குப் பாட்டி உறவு பூண்ட பழுவூர் ராணி. என்னைப் பார்ப்பதற்குச் சிறிதும் பயப்பட வேண்டாம். அவரை நான் கடித்துத் தின்று விழுங்கி விட மாட்டேன்!'' என்று சொல்லுவீரா?''

''தேவி! நான் உயிரோடு திரும்பிப் போய் ஆதித்த கரிகாலரைப் பார்ப்பேன் என்பது நிச்சயமில்லை. அப்படிப் பார்த்தால் அவரிடம் நான் சொல்லுவதற்கு எத்தனையோ செய்திகள் இருக்கின்றன. தங்களுடைய செய்தியைச் சொல்லுவதாக என்னால் உறுதி கூற முடியாது. தயவு செய்து மன்னிக்க வேணும்!''

''ஆம்; நான் பார்த்திருப்பவர்களுக்குள்ளே நீர் ஒருவர்தான் தைரியசாலி: மனத்தில் உள்ளதை ஒளியாமல் பேசுகிறவர். ஆகையால்தான் உம்மை எனக்குப் பிடித்திருக்கிறது. வாணர் குல வீரரே! நான் அதிகம் பேரைப் பார்ப்பது கிடையாது. பழையாறை இளைய பிராட்டியைப் போல் ரதத்தில் ஏறிப் பிரயாணம் செய்வதில்லை. எங்கேயாவது போக வேண்டி நேர்ந்தால் மூடு பல்லக்கில் போகிறேன். எனக்கு யார் மூலமாகவாவது ஏதேனும் காரியம் ஆக வேண்டியிருந்தால் அவர்களை மட்டுந்தான் பார்க்கிறேன். அவர்கள் பெரும்பாலும் கோழைகளாயிருக்கிறார்கள். மனத்தில் உள்ளதைச் சொல்லுவதற்குத் துணிவதில்லை. நீர் மனத்தில் தோன்றுவதை ஒளிக்காமல் சொல்கிறீர்...''

''ஒளிப்பதில் பயனில்லை என்று நான் அறிந்திருக்கிறேன். ராணி தங்களுடைய கண்கள் ஊடுருவிச்

சென்று அறிய முடியாத இரகசியம் எந்த மனிதனுடைய நெஞ்சிலும் இருக்க முடியாது."

"அது உண்மையாக இருக்கலாம். ஆனால் உம்முடைய நெஞ்சில் உள்ளதைத்தான் நான் இன்னும் அறிந்து கொள்ள முடியவில்லை. போனால் போகட்டும். பழுவேட்டரையரைப் பற்றிக் கேட்டீர். என் கணவரும்

பார்த்திபேந்திரனும் பரிவாரங்களுடன் பக்கத்துக் கிராமத்துக்குச் சென்றிருக்கிறார்கள். அங்கே கண்ணகிக் கூத்தும், வேலனாட்டமும் நடைபெறுகின்றன. சின்ன இளவரசரைப் பற்றி வெறியாட்டக்காரனிடம் ஏதாவது தெரிந்து கொள்ள முடியுமா என்று பார்ப்பதற்காகப் போயிருக்கிறார்கள், பைத்தியக்காரர்கள்! யாரைக் கேட்க வேண்டுமோ அவரைப் பிடித்துக் கேட்காமல் ஜோசியக்காரனிடம் சென்றிருக்கிறார்கள். திரும்பி வருவதற்கு வெகு நேரம் ஆகும். ஆகையால்தான் உம்மை நான் அழைத்து வரச் செய்தேன். ஐயா! மறுபடியும் கேட்கிறேன். இளவரசரைப் பற்றிய உண்மை உமக்குத் தெரியும் அல்லவா? அதை நீர் எனக்குச் சொல்ல மாட்டீர் அல்லவா?''

''இல்லை, தேவி! சொல்லுவதற்கில்லை! இனிமேல் எந்தக் காரியத்திற்கும் புனைந்துரைப்பதில்லையென்றும், உண்மையே சொல்லுவதென்றும் இன்றைக்குத்தான் தீர்மானம் செய்து கொண்டேன். ஆகையால் இளவரசரைப் பற்றிச் சொல்ல முடியாது. சற்று முன்னால்கூட என் தீர்மானத்தை மறந்து விட்டேன். மன்னிக்க வேணும்!'' என்று சொல்லிக்கொண்டே வந்தியத்தேவன் தன்னுடைய இடைக்கச்சின் சுருளை அவிழ்த்து அதற்குள்ளேயிருந்த பனை இலச்சினை மோதிரத்தை எடுத்தான்.

''அம்மணி! இதோ தாங்கள் அளித்த பனை முத்திரை மோதிரம். இலங்கையில் பூதிவிக்கிரமகேசரியின் ஆட்கள் இதை என்னிடமிருந்து பலவந்தமாகக் கவர்ந்து கொண்டது உண்மைதான். ஆனால் சேநாதிபதி திருப்பிக் கொடுத்து விட்டார். இதோ தங்களிடம் சேர்ப்பித்து விடுகிறேன்; பெற்றுக் கொண்டு அருள்புரிய வேணும்!'' என்று கூறி முத்திரை மோதிரத்தை நீட்டினான்.

நந்தினி அதை உற்றுப் பார்த்துத் தான் கொடுத்த முத்திரை மோதிரம் அதுதான் என்று தெரிந்துகொண்டாள்.

''ஐயா! நான் கொடுத்ததைத் திரும்பி வாங்கிக் கொள்ளும் வழக்கமில்லை. உம்முடைய உண்மையைச் சோதித்து அறிவதற்காகவே கேட்டேன். சோதனையில் நீர் தேறி விட்டீர். என்னுடைய ஆட்களைக் கொண்டு உம்மைச் சோதனை போடும்படியான அவசியத்தை எனக்கு ஏற்படுத்தவில்லை. மோதிரத்தை என்னுடைய ஞாபகத்துக்காக நீரே வைத்துக் கொள்ளலாம்!'' என்றாள்.

''அம்மணி! யோசித்துச் சொல்லுங்கள். இது என்னிடமிருந்தால் மீண்டும் அவசியம் நேரும்போது உபயோகப்படுத்த வேண்டியிருக்கும்...''

''அதைப் பற்றிக் கவலை இல்லை. எப்படி வேணுமானாலும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். உம்மை இப்போது மறுபடியும் கண்ணைக் கட்டிப் பல்லக்கிலே ஏற்றிக்கொண்டு போகச் சொல்லப் போகிறேன். உம்மைப் பிடித்த இடத்திலேயே திரும்ப விட்டு விடுவார்கள்...''

''நான் அதற்கு மறுத்தால்...?''

''இந்தப் பாழடைந்த அரண்மனையிலிருந்தும் கோட்டையிலிருந்தும் உம்மால் திரும்பிப் போக முடியாது. திரும்பத் திரும்பப் புறப்பட்ட இடத்துக்குத்தான் வந்து கொண்டிருப்பீர்...''

''தேவி! இந்தக் கோட்டை? இந்தப் பாழடைந்த அரண்மனை...?''

''ஆம்; ஒரு காலத்தில் இந்தச் சோழ நாடு பல்லவர் ஆட்சியில் இருந்தது. வெகு காலம் இருந்தது. அப்போது பல்லவ சக்கரவர்த்திகள் இங்கே கோட்டையும் அரண்மனையும் கட்டியிருந்தார்கள். பிறகு சோழ நாடு

பாண்டியர்கள் வசப்பட்டது. பாண்டிய மன்னர்கள் சில சமயம் இந்த அரண்மனையில் வசித்தார்கள். விஜயாலய சோழர் காலத்தில் இங்கே ஒரு பெரிய யுத்தம் நடந்தது. கோட்டை இடிந்து தகர்ந்தது. அரண்மனையிலும் பாதி அழிந்தது. மிச்சம் அழியாமலிருந்த பகுதியில் இப்போதும் நாம் இருக்கிறோம். இந்தக் கோட்டையைச் சிலர் பல்லவராயன் கோட்டை என்றும் இன்னும் சிலர் பாண்டியராயன் கோட்டை என்றும் சொல்வார்கள். இரண்டிலும் உண்மை உண்டு. ஆனால் நன்றாக வழி தெரிந்தவர்களாலேதான் இதற்குள்ளே வந்துவிட்டு வெளியேற முடியும்! என்ன சொல்கிறீர்? என் ஆட்களை அழைத்துக் கொண்டு போய் விடச் சொல்லட்டுமா? அல்லது நீரே வழி கண்டுபிடித்து...''

''இல்லை, தேவி! வழி கண்டுபிடித்துச் செல்ல எனக்கு நேரமில்லை. என்னை அழைத்து வந்தவர்களே திரும்ப அழைத்துச் செல்லட்டும். ஆனால்... நான் போவதற்கு முன்னால்... என்னைத் தாங்கள் அழைத்து வரும்படி சொன்ன காரணம் வேறொன்றும் இல்லையா? நான் தங்களுக்குச் செய்யக் கூடிய உதவி வேறொன்றும் இல்லையா? அப்படி ஏதாவது இருந்தால், சொல்லுங்கள்!''

''நல்லது; நீர் கேட்கிறபடியால் சொல்கிறேன். பறக்கும் குதிரை ஒன்று எனக்கு வேண்டும். உம்மால் முடிந்தால் சம்பாதித்து வந்து கொடுக்கலாம்.''

''என்ன? பறக்கும் குதிரை என்றா சொன்னீர்கள்?''

''ஆம்; பறக்கும் குதிரைதான்!''

''பறப்பதுபோல் அதிவேகமாய் ஓடக் கூடிய அரபு நாட்டுக் குதிரையைச் சொல்கிறீர்களா?''

''இல்லை; இல்லை! என்னால் அத்தகைய குதிரை மேல் ஏறவே முடியாது. பூமியில் கால் வைத்து ஓடும் குதிரையை நான் சொல்லவில்லை. பறவைகளைப் போல் இறகுகளை விரித்து வானத்தில் பறந்து செல்லும் குதிரையைச் சொல்கிறேன். அம்மாதிரி அதிசயக் குதிரைகள் இந்தப் பூவுலகில் எங்கேயோ இருப்பதாகக் கதைகளில் கேட்டிருக்கிறேன். அத்தகைய இறகுள்ள பறக்கும் குதிரைதான் எனக்கு வேண்டும்!''

''எதற்காக? சொர்க்க லோகத்துக்குப் பறந்து போவதற்காகவா?''

''என்னைப் பார்த்தால் சொர்க்கத்துக்குப் போகக் கூடியவளாகத் தோன்றுகிறதா? அத்தகைய புண்ணியம் செய்தவள் அல்ல நான். கொடிய பாவங்கள் பல செய்தவள்.''

''சொர்க்கத்தில் உள்ளவர்கள் புண்ணியம் மட்டும்தானா செய்கிறார்கள்? அங்கேயும் பாவங்கள் செய்கிறார்கள். அதற்குப் பரிகாரம் தேடப் பூவுலகத்திற்கு வருகிறார்கள். வந்த காரியம் ஆனதும் சொர்க்கத்துக்குப் போகிறார்கள்.''

''இல்லை; எனக்குச் சொர்க்கத்துக்குப் போக விருப்பம் இல்லை. பாண்டிய நாட்டில் ஒரு பாலைவனம் இருக்கிறது. அதன் நடுவில் சில மொட்டைப் பாறைகள் இருக்கின்றன. புல் பூண்டு முளைக்காத பாறைகள். அவற்றில் சில முழைகள் இருக்கின்றன. ஒரு காலத்தில் அந்த முழைகளில் திகம்பர ஜைனர்கள் இருந்து தவம் செய்தார்கள். இப்போது பாம்புகளும் நரிகளும் அவற்றில் வசிக்கின்றன. தேவலோகத்து அமராவதி நகரைக் காட்டிலும் அந்தப் பாண்டிய நாட்டுப் பாலைவனப் பாறைகளே எனக்கு அதிகம் பிடித்தமானவை.''

''தேவி! தங்களுடைய ஆசை அதிசயமானதுதான்.''

''பறக்கும் குதிரை கிடைத்தால் நான் அந்தப் பாலைவனத்துக்குப் போவேன். பிறகு அங்கிருந்து இலங்கைத் தீவுக்குப் பறந்து செல்வேன். இலங்கையில் வானை முட்டும் மலைகளும் அம்மலைகளை மறைக்கும்படி உயர்ந்த மரங்கள் அடர்ந்த காடுகளும் இருக்கின்றனவாம்.



இந்தச் சோழ நாட்டில் காணப்படும் எருமை மந்தைகளைப்போல் இலங்கைக் காடுகளில் யானை மந்தைகள் திரியுமாம். அவற்றையெல்லாம் பார்ப்பேன். இன்னும் இந்தப் பூவுலகத்தின் மத்தியில் உலகம் தோன்றின

நாள் தொட்டுப் பனிக்கட்டியால் மூடப்பட்ட சிகரங்களையுடைய மலைகள் இருக்கின்றனவாம். சூரியன் உதயமாகும் சமயத்தில் அவை வெள்ளி மலைகளைப் போல ஜொலிக்குமாம். பறக்கும் குதிரைமேல் ஏறிச் சென்று அம்மலைச் சிகரங்களைப் பார்க்க விரும்புகிறேன். இன்னும் அப்பால் பாண்டிய நாட்டுப் பாலைவனத்தைப்போல் பதினாயிரம் மடங்கு விஸ்தாரமான பாலைவனங்கள் ஒரே வெண்மணல் காடாக இருக்குமாம். பகல்வேளையில் அங்கே எரியும் தீயின் மத்தியில் இருப்பது போலவே தோன்றுமாம். அங்கேயெல்லாம் போக விரும்புகிறேன். இன்னும் அப்பால் போனால் கடுங்குளிர் காரணமாகக் கடல்நீர் உறைந்து கெட்டிப்பட்டு மனிதர்களும் மிருகங்களும் நடந்து போகும்படியிருக்குமாம். பறக்கும் குதிரைமேல் ஏறிச் சென்று அந்த இடங்களைப் பார்க்க விரும்புகிறேன்..."

''தேவி! என்னால் அத்தகைய பறக்கும் குதிரையைத் தங்களுக்குக் கொண்டு வந்து தர முடியாது. ஆனால் தாங்கள் கூறிய சில இடங்களுக்குப் போகச் சுலபமான வழி இருக்கிறது. ஒரு நல்ல படகிலே ஏறினால் அரை நாளில் இலங்கைக்குப் போகலாம். கப்பல் ஏறிச் சென்றால்..."

"ஐயா! அந்த வழி எனக்குத் தெரியாத வழி அல்ல. ஆனால் எனக்குக் கடலைக் கண்டால் பயம். கப்பலில் ஏறுவதென்றால் பயம். நதியைப் படகில் ஏறிக் கடக்கும்போது படகு அசைந்தால் கூடப் பயம். ஆகையால் உம்முடைய யோசனை எனக்குச் சிறிதும் பயன்படாது. நீர் போய் வரலாம்!" என்று கூறி நந்தினி எழுந்தாள்.

''தேவி! வேறொன்றும் தாங்கள் என்னிடம் சொல்வதற்கு இல்லையா?"

''இல்லை! நீர் ஏதோ சொல்ல விரும்புவதுபோலக் காண்கிறது."

"ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். அதற்கு மட்டும் விடை சொல்ல வேண்டும். சில நாளைக்கு முன்பு தாங்கள் இலங்கைக்கு வந்திருக்கவில்லையா? அநுராதபுரத்தின் வீதிகளில் இருண்ட நிழலில் தனியாக நின்றிருக்கவில்லையா?"

''இல்லவே இல்லை. பழுவேட்டரையரின் அரண்மனையையும் காவலையும் தாண்டி நான் ஒரு பொழுதும் அப்பால் சென்றதே இல்லை. உமக்கு ஏன் அத்தகைய சந்தேகம் உதித்தது?"

''அம்மணி! இலங்கையில் சில தினங்களுக்கு முன்பு தங்களைப் பார்த்தேன். அல்லது தங்களைப் போன்ற மாய உருவம் ஒன்றைப் பார்த்தேன். 'பறக்கும் குதிரை' என்றெல்லாம் சொல்லுகிறீர்களே? ஒருவேளை உண்மையில் அத்தகைய குதிரை தங்களிடம் இருக்கிறதோ, அதில் ஏறி அங்கு வந்தீர்களோ என்று நினைத்தேன். ஆனால் இப்போது போல் ஆடை ஆபரணங்கள் புனைந்து அலங்காரமாக இருக்கவில்லை. சாதாரண சேலை ஒன்று உடுத்தி ஒருவித ஆபரணமும் புனையாமல் கூந்தலை விரித்துப் போட்டுக் கொண்டு நின்றீர்கள், அந்த ஸ்திரீ தாங்கள் அல்லவா?"

"இல்லை, நான் இல்லை, ஐயா! நீர் கூறும் அந்த ஸ்திரீ வாய் திறந்து ஏதாவது பேசினாளா?"

''இல்லை; ஜாடையினாலேதான் பேசினாள். ஆனால் தங்களுக்கு மந்திரவாதிகளுடன் பழக்கம் இருக்கிறது. ஒருவேளை அத்தகைய மந்திர சக்தியினால் தங்களுடைய சூக்ஷ்ம வடிவம் அங்கே வந்திருக்கலாம் அல்லவா?"

''நானோ, என்னுடைய சூக்ஷ்ம சரீரமோ இல்லை என்றால்...?"

"தங்களை வடிவத்தில் மிகவும் ஒத்த வாய் பேச முடியாத ஊமை ஸ்திரீயாக



அவள் இருக்க வேண்டும்."

நந்தினியின் பார்வை எங்கேயோ வெகு தூரத்தில் சென்றிருந்தது. ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள்.

''ஐயா! சற்று முன்னால் எனக்கு ஏதேனும் உதவி செய்ய விரும்புவதாகச் சொன்னீர் அல்லவா?''

''ஆம்!''

''அது தாங்கள் உண்மையாகச் சொன்ன வார்த்தைதானே?''

''சந்தேகமில்லை.''

''அப்படியானால் இதைக் கேளும். எப்போதாவது ஒருசமயம் மறுபடியும் அந்த ஸ்திரீயைப் பார்க்க நேர்ந்தால் அவளை எப்படியாவது பிடித்துக் கொண்டு வந்து என்னிடம் சேர்ப்பியும். அது முடியாவிட்டால் என்னையாவது அவளிடம் அழைத்துக் கொண்டு செல்லும்!'' என்றாள் நந்தினி.



ரை நாழிகைக்கெல்லாம் வந்தியத்தேவன் மறுபடியும் முல்லையாற்றங் கரையில் நின்றான். அவனுடைய குதிரையும் பக்கத்தில் நின்றது.* அவனை அங்கே அழைத்து வந்தவர்கள் ஒரு நொடியில் மறைந்து விட்டார்கள். தேவராளனைக் கூடக் காணவே இல்லை.

முல்லையாற்றங்கரையோரமாகக் குதிரையை மெதுவாகவே செலுத்திக் கொண்டு வந்தியத்தேவன் இரவெல்லாம் பிரயாணம் செய்தான். மூன்றாம் ஜாமத்தில் வால் நட்சத்திரம் அதன் பூரண வளர்ச்சியை அடைந்து வானத்தில் ஒரு நெடிய பகுதியை அடைத்துக் கொண்டு காணப்பட்டது. மக்கள் உள்ளத்தில் பீதியை விளைவித்த அந்தத் தூமகேதுவின் காரணமாக உண்மையிலேயே ஏதேனும் விபரீதம் ஏற்படப் போகிறதா, அல்லது இதெல்லாம் வெறும் குருட்டு நம்பிக்கைதானா என்று அடிக்கடி அவன் சிந்தனை செய்தான். நந்தினியின் நினைவும் இடையிடையே வந்து கொண்டிருந்தது. அவள் கூறிய வார்த்தைகள் எல்லாம் அவன் மனத்தில் நன்கு பதிந்திருந்தன. முதல் தடவை தஞ்சை அரண்மனையில் அவளைப் பார்த்தபோது ஏற்பட்ட அருவருப்பு உணர்ச்சி இப்போது மறைந்துவிட்டது. ஏதோ பயங்கரமான துன்பங்களில் அடிபட்டவள் இவள் என்ற எண்ணத்தினால் ஒருவித அனுதாபமே உண்டாகியிருந்தது. ஆயினும் அவளுடைய நோக்கம் என்ன, அவள் செய்ய விரும்பும் காரியம் என்ன, அவளுடைய உண்மையான வாழ்க்கை வரலாறு என்ன, என்பவை மர்மமாக இருந்தபடியால் ஒரு பக்கத்தில் கோபமும் இருந்தது. ஒப்பில்லாத சௌந்தரியத்தோடு ஏதோ ஒருவித மாயா சக்தி உடையவள் அவள் என்றும் தோன்றியது. ஆதலின் அவளுடன் இனி எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்ளாமலிருப்பதே நல்லது. பனை இலச்சினை உள்ள மோதிரத்தை அவள் திரும்பி வாங்கிக் கொண்டிருந்தால் எவ்வளவோ நன்றாயிருக்கும். அதை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டாளே? நதியிலே எறிந்து விடலாம் என்றால், அதற்கும் மனம் வரவில்லை. இந்த அபாயகரமான காலத்தில் அது மீண்டும் சமயத்துக்கு உபயோகப்படலாம். எதற்காக எறிய வேண்டும்?

பழையாறைக்குச் சென்று இளைய பிராட்டியைப் பார்த்துச் சொல்ல வேண்டிய செய்தியையும் சொல்லி விட்டால், அப்புறம் அதை எறிந்தே விடலாம். இம்மாதிரி தொல்லையான காரியங்களில் பின்னர் பிரவேசிக்கவே கூடாது.

இரவு நாலாம் ஜாமத்தில் கிழக்குத் திசையில் வெள்ளி முளைத்தது. சுக்கிரனை எதிரிட்டுக் கொண்டு போகக் கூடாது என்று வந்தியத்தேவன் கேள்விப்பட்டிருந்தான். குதிரையை நிறுத்தி ஒரு மரத்தில் கட்டிவிட்டுத் தானும் தரையில் படுத்துச் சிறிது உறங்கினான்.

*(தொடரும்)*

# அரசிகள் வருகிறார்கள்!



• சர்தார் வேதரத்தினம்

"பல நண்பர்களும் விரோதிகளும் தெரிந்தவர்களும் தெரியாதவர்களும் மிக மிக என்னை வற்புறுத்துகிறபடியால் சென்னை காங்கிரஸ் கட்சியின் தலைமைப் பதவிக்கு போட்டியிடத் தீர்மானித்து விட்டேன். இனி முன் வைத்த காலைப் பின் வாங்கப் போவதில்லை. பத்து வந்தாலும் சரிதான்; இரண்டு போனாலும் சரிதான்!" என்ற தோரணையில் சில அறிக்கைகளைப் பத்திரிகைகளில் படிக்கிறோம்.

சென்ற பொதுத் தேர்தலுக்கு முன்னால் இப்படிப் பல தேசபக்தர்களையும் அரசியல்வாதிகளையும் அவர்களுடைய நண்பர்களும் விரோதிகளும் வெகுவாக வற்புறுத்தினார்கள். "சென்னைச் சட்டசபைக்கு நில்லுங்கள்; இல்லாவிட்டால் இந்திய பார்லிமெண்டுக்காவது நில்லுங்கள்; அதுவும் இஷ்டமில்லாவிட்டால் ஜனாதிபதி ஸ்தானத்துக்காவது நில்லுங்கள்; அதெல்லாம் ஒன்றும் இயலாவிட்டால், சற்றே சந்நிதியிலாவது நில்லுங்கள்!" என்று தூண்டித் துளைத்து வற்புறுத்தினார்கள்.

அத்தகைய வற்புறுத்தலுக்கு இணங்கி, அநேகர் காங்கிரஸ் அபேட்சகர்களாவதற்கு ஐந்நூறு ரூபாய் அல்லது ஆயிரம் ரூபாய் கட்டணப் பணத்துடன் விண்ணப்பம் போட்டார்கள். இவர்களிலே பலருக்குக் காங்கிரஸ் பொறுக்குக் கமிட்டியார் நாமம் போட்டு விட்டார்கள். மற்றும் சிலருக்கு வோட்டர்கள் பட்டை நாமத்தைச் சாத்தி விட்டார்கள்.

இந்தத் தொல்லைகளிலெல்லாம் அகப்பட்டுக் கொள்ளாத தமிழ்நாட்டுத் தேசபக்தர்களில் ஒருவர் சர்தார் ஏ. வேதரத்தினம் பிள்ளை அவர்கள், பழைய சென்னைச் சட்டசபையில் அங்கத்தினராயிருப்பவர். கூட்டத்துக்கே வராத தண்டச் சம்பள அங்கத்தினர் அல்ல; பேசாமடந்தை அங்கத்தினருமல்ல; தூங்குமூஞ்சி அங்கத்தினருமல்ல. மிக மிக விழிப்புடனிருந்து முக்கியமான விவாதங்களிலெல்லாம் கலந்து கொண்டு மக்களின் தேவைகளை எடுத்துச் சொன்னவர். சென்ற ஐந்து வருஷத்துச் சென்னைச் சட்டசபையின் வரலாற்றை எடுத்துப் பார்த்தால் தெரியும். ஒரு சட்டசபைக் கூட்டத்துக்காவது சர்தார் ஏ. வேதரத்தினம் ஆஜராகாமலிருந்தது கிடையாது. எந்த முக்கியமான விவாதத்திலும் கலந்து கொள்ளாமலிருந்தது கிடையாது. வடநாட்டுச் சர்வோதயக் கூட்டம் முதலிய முக்கிய காரியங்களுக்குப் போயிருந்த நாட்களைத் தவிர, மற்றப்படி சட்டசபை கூடிய எல்லாத் தினங்களிலும் அவர் ஆஜராயிருந்தவர். சர்க்காரைக் கண்ணை மூடிக் கொண்டு அவர் ஆதரித்ததுமில்லை; அகாரணமாக எதிர்த்துத் தாக்கியதுமில்லை. சென்னை மாகாண மக்களின் மொத்தமான நலங்களுக்காக ஓயாது போராடியிருக்கிறார். அவர் எந்த ஜில்லாத் தொகுதியிலிருந்து வந்தாரோ, அந்த ஜில்லாப் பொதுமக்களின் கட்சியைச் சமயம் நேர்ந்த போதெல்லாம் எடுத்துச் சொல்லி வந்திருக்கிறார்.

சர்தார் வேதரத்தினம் தேசத் தொண்டுக்கே தம்மை அர்ப்பணம் செய்தவர்; சென்னைச் சட்டசபை அங்கத்தினராயிருக்கப் பரிபூரணத் தகுதி வாய்ந்தவர்; ஹிந்தி நன்கு பயின்றவரானபடியால் இந்தியப் பார்லிமெண்டு அங்கத்தினராவதற்கும் யோக்கியதை உடையவர்.

அத்தகையவரை இந்தப் பொதுத் தேர்தலில் அபேட்சகராக நிற்கும்படி

பல நண்பர்கள் உண்மையிலேயே வற்புறுத்தத்தான் செய்தார்கள். ஜில்லாப் பிரமுகர்கள் வற்புறுத்தினார்கள். மாகாணத் தலைவர்களும் கேட்டுக் கொண்டார்கள்.

ஆயினும் சர்தார் ஏ. வேதரத்தினம் மறுத்து விட்டார். அவர் இப்படி மறுத்ததற்கு இரண்டு காரணங்கள். ஒன்று சென்னை மாகாண காங்கிரஸ் நிர்வாகத்தில் கோஷ்டிப் பூசல்கள் வளர்ந்து விட்டதைக் கண்டு அவருக்கு ஏற்பட்டிருந்த வருத்தம்.

மற்றொரு முக்கியமான காரணம், காந்தி மகானின் நிர்மாணத் திட்டங்களில் ஈடுபட்டு அதனால் ஏற்படும் உள்ள மகிழ்ச்சியை அவர் பூரணமாய் அறிந்திருந்ததேயாகும். ஸ்ரீ விநோபா பாவே ஏன் தேர்தலுக்கு நிற்கவில்லை? அதே காரணத்தினால் ஸ்ரீ வேதரத்தினமும் தேர்தலுக்கு நிற்கவில்லையென்று சொல்லுவது மிகையாகாது.

"தில்லை வெளியிலே கலந்துவிட்டால் அவர்
திரும்பவும் வருவாரோ?"

என்ற பாடலில் குறிப்பிட்ட ஆத்மானந்த அநுபவத்தை அவர் காந்தி மகானின் நிர்மாண வேலைகளில் அடைந்து விட்டார். அதனால் திரும்பவும் அரசியல் சேற்றில் காலை வைக்க விரும்பவில்லை.

சில மாதங்களுக்கு முன்னாலென்றால், மேற்கூறிய இரண்டாவது காரணத்தை என்னால் அறிந்திருக்க முடியாது; யாராவது சொல்லியிருந்தாலும் நம்பியிருக்க முடியாது.

ஆனால் பொதுத் தேர்தலுக்குக் கொஞ்ச காலத்துக்கு முன்புதான் வேதாரண்யம் போய் வந்தபடியால் அதை அறிந்து கொள்ளவும் பாராட்டவும் இயலுவதாயிற்று.

**வே**தாரண்யத்துக்கு மிக அருகில் மகாராஜபுரம் என்று ஒரு சிறிய கிராமம் இருக்கிறது. அதில் அன்னை கஸ்தூரிபாயின் புனிதமான திருநாமத்துடன் விளங்கும் கன்யா குருகுலம் சென்ற ஆறு ஆண்டுகளாக நடந்து வருகின்றது. கவர்னர் பவநகர் மகாராஜா முதல், மந்திரிமார்கள், காங்கிரஸ் பிரமுகர்கள், நிர்மாணத் தொண்டர்கள் பலர் அந்த அருமையான ஸ்தாபனத்துக்குச் சென்று பார்வையிட்டுத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்திருக்கிறார்கள்.

சென்ற வருஷத்திலேதான் எனக்கு அந்தப் பாக்கியம் கிடைத்தது. கிடைத்த போது ஒரு தடவைக்கு இரண்டு தடவையாகக் கிடைத்தது. ஒருமுறை திடும் பிரவேசமாகக் கோடிக்கரை பார்க்கப் போன இடத்தில் கன்யா குருகுலத்தையும் பார்த்து விட்டு வந்தேன். இன்னொரு முறை கன்யா குருகுலத்தின் ஆண்டு விழா நடந்த சந்தர்ப்பத்தில் போயிருந்தேன்.

குருகுலத்தில் பிரவேசிக்கும்போதே ஒரு புதிய, புனிதமான உலகத்தில் பிரவேசிக்கிறோம் என்னும் உணர்ச்சி உண்டாகிறது. குருகுலத்தின் பிரதான வாசலுக்குப் பசுங்கொடிகள் படர்ந்த இயற்கைப் பந்தல் அழகு தருகிறது. அதன் அடியில் ஒரே விதமான உடை அணிந்த பெண் குழந்தைகள் வரிசையாக நின்று வரவேற்பு அளிக்கின்றனர்.

உள்ளே சென்றால், பத்து ஏக்கரா நிலத்தில் இனிய இயற்கைக் காட்சிகளிடையே அமைந்திருக்கும் பல்வேறு ஆசிரமக் கட்டடங்கள், பழைய பாரத நாட்டில் கண்வ ரிஷி ஆசிரமம், சரபங்கரின் ஆசிரமம், பரத்வாஜர் ஆசிரமம் முதலியவை குறித்து இதிகாசங்களில் படிக்கிறோமே, அவற்றை ஞாபகப்படுத்துகின்றன.

விருந்தினருக்கென்று ஒரு கூரைக் கட்டடம் குருகுலத்தின் முகப்பிலேயே இருக்கிறது. அதைப் பார்த்தால் கூரைக் கட்டடம் இவ்வளவு கலை அழகு பொருந்தியதாய் அமைக்கலாம். இவ்வளவு தூய்மையாக வைத்திருக்கலாம் என்பதற்கு உதாரணம் இது என்று தோன்றும்.

அதன் சுத்தமான தரையில் போட்டிருக்கும் விதவிதமான கோலங்கள் அழகுக்கு அழகு செய்வதாயிருக்கும்.

வேதாரண்யப் பிரதேசம் தஞ்சை ஜில்லாவில் அவ்வளவு இயற்கை வளம் பொருந்திய பிரதேசமன்று. ஆயினும் குருகுலத்தின் தோற்றம் சோழ நாட்டின் இயற்கை வளத்தை நினைவூட்டுகிறது. தென்னை, வாழை, சோளம், காய்கறிகள், மலர் தரும் மரங்கள் முதலியனவ் பரவலாகக் காணப்படுகின்றன. இவ்வளவுடன் சிறிய தாமரைக்குளம் ஒன்று இருக்கிறது. அதில் தாமரை மலர்களும் இருக்கின்றன. குருகுலத்துக்கும் ஆசிரமத்துக்கும் தகுந்த சூழ்நிலை இதைக் காட்டிலும் வேறு என்ன இருக்க முடியும்?

மூன்று வயது முதல் பன்னிரண்டு வயது வரையில் உள்ள சுமார் 150 பெண் குழந்தைகள் இந்தக் குருகுலத்தில் காந்தி மகானுக்கு உகந்த ஆதாரக் கல்வி முறையில் படித்து வருகிறார்கள். இவர்களில் பலர் அநாதைக் குழந்தைகள். நூறு குழந்தைகளுக்கு மேலே ஆசிரமத்திலேயே உணவும் உடையும் பெற்று அங்கேயே வசித்து வருகிறார்கள். இவர்களைக் கண்ணும் கருத்துமாய்ப் பார்த்துக் கொள்ள ஏழெட்டு ஆசிரியைமார்கள் குருகுலத்திலேயே இருக்கிறார்கள்.

இவர்கள் குழந்தைகளுக்கு அளிக்கும் ஆதாரக் கல்வி வெறும் போலிப் பேச்சு அல்லவென்பதற்கு ஓர் அத்தாட்சியை நேரில் கண்டோம். ஆண்டு விழாவுக்காக வெளியூர்களிலிருந்து சுமார் நூறு பேர் வந்திருந்தார்கள். அவ்வளவு பேருக்கும் ஆசிரியைமார்களே சமையல் செய்து பரிமாறும் தொண்டும் செய்தார்கள். வெளியிலிருந்து பரிசாரகர்கள் தருவிக்கப் படவில்லை.

குருகுலத்துக்குத் தேவையான காய் கறிகள் எல்லாம் அங்கேயே பயிராகின்றன. குழந்தைகளின் குஞ்சுக் கைகளே பயிர் களுக்குத் தண்ணீர் ஊற்றி வளர்க்கின்றன. மற்றும் நூற்றல், நெசவு முதலிய தொழில் களும் வயதுக் கிரமப்படி பயில்கிறார்கள். தொழில்களின் மூலமாகவே கல்வியறிவும் பெறுகிறார்கள்.

முதல் தடவை குருகுலத்துக்கு நான் சென்றிருந்தபோது, குழந்தைகள் என்னைத் திணறித் திண்டாடும்படி செய்துவிட்டதை இங்கே குறிப்பிட வேண்டும். குழந்தை களையெல்லாம் ஓரிடத்தில் சேர்த்து வைத்துவிட்டு என்னை அங்கே அழைத்துச் சென்றார்கள். வழக்கம்போல் என்னை அவர்களுக்குப் பிரசங்கம் செய்யச் சொல்லு வார்கள் என்று எண்ணினேன். இந்தச் சிறிய குழந்தைகளுக்கு என்ன விஷயத்தைப் பற்றிச் சொல்வது, என்னத்தைச் சொன்னால் இவர்களுக்குப் புரியப் போகிறது என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். அந்தக் கவலை ஆரம்பத்திலேயே தீர்ந்துவிட்டது. ஏனெனில், என்னைப் பிரசங்கம் செய் யும்படி யாரும் சொல்லவில்லை. அதற்குப் பதிலாகக் குழந்தைகளைப் பார்த்து, "இவர் தான் கல்கி ஆசிரியர்; உங்களுக்கு ஏதாவது கேள்வி கேட்க வேண்டுமென்றால் கேட் கலாம்" என்று சொன்னார்கள். ஒரு சின்னஞ்சிறு குழந்தை எழுந்து "அண்ணா! உங்கள் பத்திரிகையில் நீங்கள் ஏன் ஆதாரக் கல்வியை எதிர்த்து எழுதுகிறீர்கள்?" என்று கேட்டதும், எனக்கு எப்படி தூக்கி வாரிப் போட்டிருக்கும் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

உண்மையில் நான் காந்தி மகானுடைய முக்கிய திட்டங்களில் ஒன்றான ஆதாரக் கல்வியை எதிர்க்கவில்லை. வெறும் ஏட்டுக் கல்வியினால் நமது நாடு அடைந்து வரும் நஷ்டத்தைப் பற்றிப் பல காலமாக எழுதி வந்திருக்கிறேன். கைத் தொழில்களை ஆதாரமாகக் கொண்ட கல்வி முறை யினாலேயே இத்தேச மக்கள் முன்னேற்ற மடைய முடியும் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை.

எதை நான் எதிர்த்து எழுதினேன் என்றால், ஆதாரக் கல்வியின் பெயரால் சென்னை சர்க்கார் லட்சக்கணக்கான பணத்தை விரயமாக்கத் தொடங்கிய பயனற்ற திட்டத்தை எதிர்த்தேன். ஆதாரக் கல்வி முறையை அமுலில் நடத்துவதற்கு அம்முறையில் பரிபூரண நம்பிக்கை கொண்டவர்களும், அதற்கென்று பல வருஷம் பயிற்சி பெற்றவர்களும் வேண்டும். பழைய ஏட்டுக் கல்வி முறையில் பயிற்சி பெற்ற ஆசிரியர்மார்களுக்கு ஆதாரக்கல்வி ஆறு மாதம் பயிற்சி அளித்துவிட்டு இம் மாகாணத்திலுள்ள எல்லாப் பள்ளிக்கூடங் களையும் ஆதாரக் கல்விமுறைப் பள்ளிக்கூடங்களாக்கி விடுகிறோம் என்று ஆரம்பித்தனர் சென்னை அரசாங்கத்தினர். அது பயனற்ற காரியம் என்றும் வீண் பண விரயத்தைத் தவிர வேறு பலன் விளையாது என்றும் வற்புறுத்தினேன். சர்தார் வேதரத்தினம் போல் காந்தீயத்தில் முழுக்க முழுக்க முழுகித் திளைத்தவருடைய மேற் பார்வையில் ஆதாரக் கல்வி ஸ்தாபனங்கள் ஆரம்பத்தில் நடக்க வேண்டும். அவற்றின் அநுபவத்தைக் கொண்டு மற்ற இடங்களில் சிறிது சிறிதாக அம்முறை பரவ வேண்டும். அப்படிக்கின்றி, நம்பிக்கையில்லாதவர் களுக்கு ஆறு மாதப் பயிற்சி அளித்துவிட்டு, ஆதாரக் கல்வி போதியுங்கள் என்று குழந்தைகளை அவர்களிடம் ஒப்புவிப்பது ஆதாரக் கல்வி முறையையே நகைப்புக்கு இடம் ஆக்குவதாகும்.

இவ்வளவு விஷயங்களையும் அந்தச் சிறிய குழந்தைகளுக்கு விளக்கிச் சொல்ல முடியுமா? முடியாது. ஆகவே, "அம்மா! குழந்தை! ஆதாரக் கல்வி முறையை நான் எதிர்க்கும் பட்சத்தில் இதோ இந்தக் கணத்திலேயே வாபஸ் பெற்றுக் கொள் கிறேன்" என்று வெற்றிகரமாகப் பின் வாங் கினேன். அவர்கள் இந்தப் புண்ணிய பாரத நாட்டை வருங்காலத்தில் ஆளப் போகும் அரசிகள் அல்லவா? அவர்களிடம் பின் வாங்காமல் வேறு என்ன செய்வது?

பிறகு குழந்தைகளை நான் சில கேள் விகள் கேட்டு, அவர்கள் எவ்வளவு அறிவு விசாலம் பெற்றிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

• • •

குருகுலம் அமைந்திருக்கும் இடமாகிய பத்து ஏக்கரா நிலமும் சர்தார் வேத ரத்தினத்தின் நன்கொடை என்று அறிந்

தேன். அது மட்டுமல்ல. குருகுலம் ஆரம்பித்து இப்போது ஆறு வருஷங்கள் ஆகின்றன. அரசாங்கத்தாரிடம் உதவி பெறுவது இலேசில் ஆகிற காரியமாயில்லை. குழந்தைகளோ, மளமளவென்று வந்து சேர்ந்து கொண்டிருந்தார்கள். ''அதிகக் குழந்தைகளைச் சேர்க்க வேண்டாம்; ஐம்பதுடன் நிறுத்தவும்; அறுபதுடன் நிறுத்தவும்'' என்று நண்பர்கள் யோசனை சொன்னார்கள். சர்தாரால் அப்படி நிறுத்த இயலவில்லை. நண்பர்கள் பலர் உதவியும் செய்தார்கள்; போதவில்லை. எனவே, சர்தார் வேதரத்தினம் தம் சொந்தப் பொருளிலிருந்து மாதம் ஆயிரம் ரூபாய் வரையில் சில காலம் செலவு செய்ய வேண்டி நேர்ந்தது. அப்படி அவர் பெரிய செல்வர் அல்ல. சொற்ப சொத்து உடையவர். உப்பு வியாபாரத்தில் சிறிது வருவாய் உண்டு. அவ்வளவையும் குருகுலத்துக்குச் செலவழித்து வந்தார்.

குருகுலத்தில் பொருட்காட்சி ஒன்று வைத்திருக்கிறது. அதில் அபூர்வமான சித்திர சிற்பங்கள், செப்புப் பட்டயங்கள், கல்வெட்டுக்கள், பற்பல தானியங்கள், பல ரக மண்கள், கடலில் கிடைக்கும் பல்வேறு பொருள்கள், அபூர்வமான பிராணிகளின் எலும்புகள் முதலியவை வைக்கப்பட்டிருக்கின்றன.

எல்லாவற்றிற்கும் மத்தியில் ஒரு பெரிய, பிரம்மாண்டமான பூமி உருண்டையும் இருக்கிறது. அது சுற்றினால் சுழல்கிறது. பூமியின் இயற்கை அமைப்பையும் பல்வேறு கண்டங்கள் – தேசங்களையும் அதன் மூலம் குழந்தைகள் தெரிந்து கொள்ளலாம். இதைச் செய்தவர் வேதரத்தினத்தின் புதல்வரான ஸ்ரீ அப்பாக்குட்டி. உலகத்தைப் பற்றிய பூகோள அறிவு பூரணமாக இருப்பினும், உண்மையில் அவருடைய உலகம் கன்யா குருகுலமும் அதையொட்டிய மற்ற நிர்மாண வேலைகளுந்தான் என்று தெரிந்து கொண்டேன். ஆம்; வேதாரண்யத்தில் இந்தக் கன்யா குருகுலமும் ஆதாரக் கல்வி முறையும் மட்டும் நடக்கவில்லை. நிர்மாணத் திட்டத்தைச் சேர்ந்த பல்வேறு வேலைகளும் நடைபெறுகின்றன. கதர் சுயதேவைப் பூர்த்தி அவற்றில் ஒன்று. வேதாரண்யத்தில் பலர் நூல் நூற்கிறார்கள். அவர்களுக்குப் பஞ்சு பட்டை போட்டு அளிக்கப்படுகிறது. நூற்ற நூலைத் துணியாக நெய்து கொடுக்கப்படுகிறது.

இன்னும் முக்கியமான வேலை ஒன்று நடைபெறுகிறது. வேதாரண்யத்திலும் சுற்றுப்புறத்திலும் நெல் குத்தும் ஆலை கிடையாது. கைக்குத்து அரிசிதான் எல்லாரும் சாப்பிட்டாக வேண்டும். வீட்டிலே நெல் குத்திக் கொள்கிறவர்களைத் தவிர, அரிசியாக வாங்க விரும்புகிறவர்களுக்கென்று கூட்டுறவுப் பண்டகசாலை ஒன்று இருக்கிறது. மாலை நேரத்தில் இந்தப் பண்டகசாலைக்கருகில் பல ஸ்திரீகள் கூடைகளுடனும் சிறிய கோணிப் பைகளுடனும் கூட்டம் கூட்டமாக வந்து போய்க் கொண்டிருந்தார்கள். இதைப் பற்றி விசாரித்தபோது, நெல் எடுத்துக் கொண்டு போய் அவரவர்கள் வீட்டில் குத்தி அரிசியாகக் கொண்டு வருகிறார்கள் என்று அறிந்தேன். இப்போது நெல்லும் அரிசியும் விற்கும் விலையில் அந்த ஸ்திரீகளுக்கு நல்ல கூலி கிடைக்கிறது. உரலிலே தான் குத்த வேண்டும் என்பதில்லை. அதற்கென்று தயாரிக்கப்படும் மர இயந்திரங்களிலும் அரைத்துக் கொண்டு வருகிறார்கள்.

• • •

இவ்விதமாக, காந்தி மகாத்மா போதித்த நிர்மாண வேலைகள் எல்லாம் வேதாரண்யத்தில் நடைபெறுவதைக் கண்டு என் உள்ளம் பூரித்தது. தமிழ்நாட்டில் உப்பு சத்தியாக்கிரஹம் நடந்த ஊரில் இம்மாதிரி காந்திஜியின் ஞாபகார்த்தமான திருப்பணி நடந்து வருவது மேலும் மகிழ்ச்சி தந்தது. இத்தகைய திருத்தொண்டில் சர்தார் வேதரத்தினம் ஈடுபட்டு மகிழ்ச்சி கண்டிருக்கிறார். மற்ற அரசியல் துறையில் அவருக்கு ஆர்வம் இல்லாமற் போனதில் வியப்பில்லை அல்லவா?

ஆனாலும் எனது அபிப்பிராயம், சர்தார் வேதரத்தினம் போன்ற சிலர் கட்டாயம் நம் சட்டசபைகளிலும் பார்லிமெண்டிலும் இருக்க வேண்டும் என்பதுதான். இப்படிப்பட்ட இரண்டொருவராவது இருந்தால் காந்தி மகானுடைய இலட்சியங்களையும் திட்டங்களையும் அரசியலாருக்கு ஞாபகப் படுத்திக் கொண்டிருக்கலாம். காந்திஜியின் அடிச்சுவட்டிலிருந்து அரசாங்கத்தார் அடியோடு அகன்று போய்விடாமல் அடிக்கடி அவர்களை இழுத்துப் பிடிக்கலாம்.

**(வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ள 'கண்கொள்ளாக் காட்சி' தொகுதியிலிருந்து)**

"கான்ஸரைக் குணப்படுத்த முடியும்; எய்ட்ஸுக்கு சிகிச்சை உண்டு; சர்க்கரை நோயா, சஞ்சலம் வேண்டாம்" எனப் பல விளம்பரங்களைப் பத்திரிகைகளில் அடிக்கடி பார்க்கிறோம். இவற்றில் எவ்வளவு தூரம் உண்மை அல்லது கப்ஸா என்பது அந்த விளம்பரங்களை நம்பி சிகிச்சைக்குச் சென்றவர்களுக்குத்தான் தெரியும். ஆனால் மிகவும் பிஸியாக சித்த மருத்துவத்தில் கொடிகட்டிப் பறந்து கொண்டிருக்கும் ஒரு மருத்துவர், "இது போன்ற விளம்பரங்களை நம்ப வேண்டாம்" என்று விழிப்புணர்வு விளம்பரங்களை அவ்வப்போது பத்திரிகைகளில் கொடுக்கிறார்! சன் தொலைக்காட்சியில் வாரம் ஒருமுறை 'நலந்தானா' என்று விசாரிக்கும் டாக்டர் ஜமுனாதான் அவர்.

"நமது நாட்டு மருத்துவத்தில் நிறைய அற்புதங்கள் உண்டு. ஆனால் நாம் சாப்பிடும் உணவுப் பழக்கங்களுக்கு ஏற்ப அந்தக் காலத்தில் மருந்துகள் நிர்ணயிக்கப்பட்டன. எந்த ஒரு வியாதிக்கான மருந்தையும் 'generalise' பண்ணக் கூடாது. சர்க்கரை நோயாளிக்கு மருத்துவர் ஒருவர், 'என்ன வேண்டுமானாலும் சாப்பிடுங்க' என்று சொல்லி விட்டார். மனிதர் எல்லாவற்றையும் சகட்டுமேனிக்கு சாப்பிட, சர்க்கரை ஏறி, கோமா ஸ்டேஜுக்குப் போய் விட்டார்!

அதே போல் எல்லா வகைக் கீரைகளிலும் இரும்புச் சத்து உண்டு; குறிப்பிட்ட கீரை, தலைவலியிலிருந்து சிறுநீரகப் பிரச்னை வரை குணப்படுத்தும் என்று விளம்பரப்படுத்துகிறார்கள். இந்தச் சூழ்நிலை இங்கு இருப்பதன் காரணமாகத்தான் அடிக்கடி மருத்துவ விழிப்புணர்வு விளம்பரங்களைக் கொடுக்கிறேன்" என்கிறார் ஜமுனா.

குழந்தைப்பேறு இல்லாத தம்பதிகள் இவரை முற்றுகையிடுகிறார்கள். இதுவரை 3500க்கும் மேற்பட்ட தம்பதிகளுக்கு இவர் சிகிச்சை பலன் அளித்து இருக்கிறதாம். இதில் பிரபல அலோபதி டாக்டர்களும் அடக்கம். அனைத்துலக மகளிர் தினத்தன்று பல தினசரிகளில் 'பெண்மணி அவள் கண்மணி' 'பெண்கள் நாட்டின் கண்கள்', என்று பெண்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டும் வாசகங்களைக் கொண்ட விளம்பரங்களையும் வெளியிட்டிருந்தார் டாக்டர் ஜமுனா.

"இதுபோன்ற விளம்பரங்கள் மருத்துவத் தொழிலில் உங்களுக்கு வாய்ப்பை அதிகரிக்கும் என்றுதான் வெளியிடுகிறீர்களா?"

"தவறான கண்ணோட்டம். மருத்துவரீதியாகவே என்னைப் பற்றிய விளம்பரங்களை நான் வெளியிட்டுக் கொள்ள முடியும். பல சித்த மருத்துவர்கள் செய்து கொண்டுதான் இருக்கிறார்கள். என் சிகிச்சையால் பலன் பெற்றவர்களிடம் சொன்னால் 365 நாட்களும் விளம்பரம் வெளியிடுவார்கள்! இங்கே, பெண்களைச் சமமாக, கௌரவமாக நடத்த வேண்டும் என்ற கோஷம்தான் உரக்க இருக்கிறதே தவிர, யதார்த்தத்தில் பெண்களின் நிலை முற்றிலும் வேறாக இருப்பதை என்னிடம் வரும் பெண்கள் சொல்லும் கண்ணீர்க் கதைகளிலிருந்து உணர்ந்து கொண்டிருக்கிறேன். குறைகளைத் தன் பக்கம் வைத்துக் கொண்டு மனைவியைக் கொடுமைப்படுத்தும் கணவர்கள்; தவிர, மனைவியைத் தள்ளி வைத்து விட்டு மற்றொருத்தியைத் திருமணம் செய்து கொண்டு அவள் வாழ்வையும் பாழடிக்கும் ஆண்கள்... இப்படிச் சொல்லிக் கொண்டே போகலாம்."

எனவேதான் விளம்பரத்தில் 'திருமணம் ஆன



• டாக்டர் ஜமுனா

ஆண்களைத் திருமணம் செய்து கொள்ளாதீர்கள்' என்று சொல்லும் டாக்டர் ஜமுனா, 'மூலிகைக் குழந்தைகள்' என்ற புத்தகத்தையும் எழுதியிருக்கிறார்.

"குழந்தைப் பேறு இல்லை என்ற குறைபாட்டை சரிசெய்வதற்காக உங்களிடம் வரும் எல்லோருக்கும் சிகிச்சையின் மூலம் பலன் உறுதியாகக் கிடைக்கும் என்று சொல்ல முடியாது. இந்த நிலையில், சிகிச்சைக்காக வரும் தம்பதிகளுக்குக் குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ளும்படி ஆலோசனை சொல்வதுண்டா?"

"முதலில், என்னிடம் சிகிச்சைக்கு வரும் எல்லோருக்குமே நான் சிகிச்சை அளிப்பதில்லை. என்னிடம் சிகிச்சை மேற்கொள்பவர்களுக்குக் கடுமையான கட்டுப்பாடுகள் உண்டு. இயற்கையிலேயே கருப்பை இல்லாதவர்களுக்கும், கருக்குழாய் இல்லாதவர்களுக்கும் எப்படிச் சிகிச்சை அளிக்க முடியும்? மாதவிலக்கு நின்றவர்கள், 'குழந்தை வேண்டும்' என்று வந்தால் எப்படி சிகிச்சை செய்ய முடியும்? இவற்றைத் தவிர குணப்படுத்தவே முடியாத வேறு பல குறைபாடுகளும் உண்டு. எனவே, அது போன்ற தம்பதிகள் வந்தால், 'நீங்கள் ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ளலாமே' என்று ஆலோசனை சொல்வதுண்டு. தத்து எடுப்பது சம்பந்தப்பட்ட விவரங்களைக் கூறும் தொண்டு நிறுவனங்களின் முகவரிகள் என்னிடம் உண்டு. நிறைய தம்பதிகளுக்குச் சொல்லியும் அனுப்பியிருக்கிறேன். என்னிடம் வரும் தம்பதிகள் முழு நம்பிக்கையோடு வருகிறார்கள். என் மருத்துவத்திலும் எனக்கு முழு நம்பிக்கை உண்டு. நான் சொல்வது போன்ற உணவு முறைகளையும், பழக்க வழக்கங்களையும் கடைப்பிடிப்பவர்களுக்குச் சிகிச்சையில் வெற்றி கிடைக்கலாம்!"

"நிவர்த்தி செய்ய முடியாத குறைகளுடையவர்களுக்குத் தத்து எடுக்க சிபாரிசு செய்வேன் என்று சொல்கிறீர்கள். அதேபோல், குறைவான சான்ஸ் இருப்பவர்களுக்கும் தத்து எடுக்க சிபாரிசு செய்யலாமே?"

"பொதுவான பார்வையிலிருந்து உங்கள் கேள்வி சரிதான். ஆனால் குழந்தையில்லா தம்பதிகளின் பார்வையிலிருந்து உங்கள் கேள்வியைப் பொருத்திப் பாருங்கள். என்னிடம் வருபவர்கள் நம்பிக்கையுடன் வருகிறார்கள். தங்கள் ரத்தமும் சதையுமாக ஒரு உயிர் ஜனிக்காதா என்றுதான் அவர்கள் முதலில் ஏங்குகிறார்கள். 'ஃபிப்டி பர்சண்ட் சான்ஸ் தான். முயற்சி பண்ண வேண்டாமே' என்று நான் சொன்னால், "டாக்டர் பாஸிடிவாகப் பாருங்களேன். ஐம்பது சதவீதம் வாய்ப்பு இருக்கிறதல்லவா" என்று சொல்வார்கள். ஒரு உதாரணம் சொல்கிறேன். விஜயா ஆஸ்பத்திரியில் வேலை செய்யும் அலோபதி பெண் டாக்டர் ஒருவருக்கு முதலில் சோதனை செய்து பார்த்ததில் முப்பது சதவீதம் வாய்ப்பு கூட இருப்பதாகத் தெரியவில்லை. நானே கொஞ்சம் தயங்கிய போது 'முயன்று பார்த்து விடலாமே' என்றார் அவர். சிகிச்சை பலனளித்து விட்டது! எனவே என்னுடைய சமூகப் பொறுப்பை நிறைவேற்றும் அதே சமயத்தில் நோயாளிகள் மேல் என் விருப்பத்தைத் திணிப்பது சரிதானா? அவர்களின் முழு சம்மதத்தின்பேரில் தத்து எடுப்பதற்குச் சிபாரிசு செய்தால்தான் தத்தெடுக்கப்படும் குழந்தையின் எதிர்காலமும் நலமாக இருக்கும்."

சந்திப்பு : **ப்ரியன்**

# ஒரு காதல் டைரி 12

வைக்கம் முகம்மது பஷீர்

தமிழில் : வையவன்

**நா**ன் அங்கே ஓர் இளம் பெண்ணோடு நட்பு கொண்டேன். என்றால் அவளை ஆராதித்தேன். எங்கள் மனங்களைப் பரஸ்பரம் பகிர்ந்தும் நுகர்ந்தும் நாங்கள் வாழ்ந்தோம்.

அவளுடைய சகோதரன் ஒருவன் காசியில் இருந்தான். ஒரு சனிக்கிழமை. அதற்கு முந்திய புதன் கிழமை அனுப்பிய ஒரு கடிதத்தைத் தொடர்ந்து கொண்டு ஒரு தந்தி அவளுக்குக் கிடைத்தது.

கடிதம் சுபச்சேதிகளைச் சுமந்து வந்தது. தந்தி அந்த நபரின் மரணச் சேதியைச் சொன்னது.

அந்த வீடு ஒரு மயானமாக உருவெடுத்தது. அழுகின்ற நானும் அழுகின்ற வீட்டுக்காரர்களும்.

அதற்கிடையே ஒரு கல்யாண யோசனை கேட்டு ஒரு கடிதம். நான் எந்த ஒரு சங்கோஜமும் இன்றி முன் பின் அறியாத அந்த நபருக்குக் கடிதம் அனுப்பினேன். என் சிநேகிதியைத் திருமணம் செய்து கொள்ளவும் என்று.

என் அப்பாவும் அதற்குச் சம்மதித்தார்.

அவரை இன்றும் நான் சங்கரண்ணா என்றுதான் அழைக்கிறேன். சங்கரண்ணாவின் மாலையோடு கூட மணப்பந்தலில் ஒரு தங்க ஹாரமும் சேர்த்து அணிவித்தேன்.

நான் சிரித்தேன். ஓர் ஆவலை தெய்வம் நிறைவேற்றி வைத்தது.

ஏதேனும் ஓர் அவசியமான நேரத்தில் என்னை நினையுங்கள். அப்போதுதான் தேவியின் செளஜன்யத்தின் எழில் – பெருமை உங்களுக்குப் புரியும்.

**நா**ன் காங்கிரஸ் வேலை நிறுத்தத்தில் பங்கேற்றேன். கல்லூரியில் இருந்து வெளியேற்றப்பட்டேன். இந்தக் காலங்களில் எல்லாம் அப்பாவும் அம்மாவும் ஒன்றாய் வாழ்ந்து வந்தார்கள்.

இருந்தாலும் ஒட்டுப் போட்ட ஒரு பிளவு இருந்து கொண்டேதான் வந்தது. அவளுடைய வாழ்க்கை சூறாவளிகளால் அல்லாடிக் கொண்டிருந்தது.

நான் பிரார்த்தித்தேன்; "அம்மா இறந்து விட வேண்டும்."

உலகில் தாயை இந்த அளவு நேசிக்கிற ஒரு மகள் இப்படி விரும்புவது முதலாவதாகத்தான் இருக்கும்.

எனக்கு இப்படி மனோவேதனைப் பட்டுக் கொண்டு வாழ முடியாது. பல குடும்பங்களுக்குப் போய், அங்கே தங்கியிருந்து விட்டு சுகவாழ்வு எதுவென்று நேருக்கு நேர் பார்த்த நான், என் குடும்ப வாழ்வைப் பற்றி நினைத்துப் பார்க்கும் போது அழுது விடுவேன்.

ஓர் ஆசை! உத்தியோகத்திற்காகப் பல இடங்களுக்குப் போனால்...

நான் பி.எஸ்ஸி., டிகிரி வாங்கினேன். மிகவும் கஷ்டப்பட்டு இரண்டு மாதங்களுக்குள் 96 'எக்ஸ்பெரிமெண்ட்'டுகள் செய்ய வேண்டி வந்தது. இரவும் பகலும் லாபரெட்டரியில் கிடக்க வேண்டி வந்தது. ரேஷன் வந்தது. நல்ல சோறும் கிடைக்காமல் போயிற்று.

ஈஸ்வரா! நான் படித்தேன். ஆனால், எனக்கு 'பார்ஸ்ட்-கிளாஸ்' கிட்டவில்லை. அத்தோடு எம்.எஸ்ஸ¬க்குரிய நுழைவு வாசல்கள் என் முன் மூடின.

எந்தப் பிள்ளையையும் எந்த நிலைக்கும் படிக்க வைக்கத் தயாராய் இருந்தார் அப்பா. ஆனால் அவர்கள் படிப்பிலே சிரத்தை காட்டவில்லை. செல்வமும் பணமும் அவர்களை அப்படி ஆக்கியதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை.



கஷ்டப்பட்டு பி.ஏவும் மற்றதும் பாஸாகவே அவர்களால் இயன்றது. ஒரு சிறப்புப் படிப்பிற்கு யாரும் போகவில்லை.

வடஇந்தியாவுக்குப் போனால் நல்ல இடத்தில், பி.எஸ்ஸி., (கெமிஸ்ட்ரி) ஆனதால் நல்ல உத்தியோகம் கிடைக்கும். பல இலாகாக்களில் சேரலாம். இப்படி எனக்கு ஓர் ஆசை!

சுருக்கமாய்ச் சொன்னால் ஓர் உயர்நிலைப் பள்ளியில் நான் ஒரு அஸிஸ்டெண்ட் ஹெட்மிஸ்ட்ரஸ் ஆகச் சேர்ந்தேன். அப்பாவின் அரைச் சம்மதத்தோடு.

இந்த நீண்ட ஆறு ஆண்டுகளுக்கு இடையில் ஒரு கடிதம் கூட அப்பா எனக்குப் போடவில்லை. சகோதரர்களுக்கும். அவர்கள் ஆயிரம் கடிதங்கள் அனுப்பி இருந்தனர். கல் நெஞ்சம். (நான் அவரை என்னவானாலும் ஆராதிக்கிறேன். நேசிக்கிறேன்).

ஹெட்மிஸ்ட்ரஸ் வாழ்க்கை ஏதோ ஒரு வாழ்க்கையாக இருந்தது. ஆண் பெண் இருவரும் படிக்கும் ஒரு மிக்ஸட் பள்ளி. ஒருவாறு அப்படித்



"என்னங்க இது? படத்தில் பாடல்கள் எல்லாம் ஒரே செய்யுள் நடையில் இருக்கு?"

" 'பத்துப் பாட்டு' இருக்கட்டும்னு சொன்னேன். தப்பாப் புரிஞ்சுக்கிட்டார்!"

– வெ. ராஜாராமன்

துக்கங்களை மறந்து வாழ முயன்றேன்.

எல்லா வாரங்களிலும் வீட்டுக்கு வருவேன்.

ஆனால் பள்ளியில் எனக்குச் சில சிக்கல்கள் ஏற்பட்டன. புதிதாகத் தொடங்கிய அந்தப் பள்ளியின் மூலவரான ஹெட்மாஸ்டர் தவிர, மற்ற எல்லோரும் கல்யாணம் ஆகாத இளைஞர்கள்.

எல்லா வசதிகளும் நிறைந்த சினேகமயமான வாழ்வை எப்போதும் கனவு கண்டு கொண்டிருப்பவர்கள்.

என் மாணவன் ஒருவனே என்னைத் தவறாகப் புரிந்து கொண்டான். என் நண்பர்களும். மனம் திறந்து நான் பழகியதை, சகஜமாகப் புரிந்து கொள்ள அவர்களால் முடியவில்லை. அது என் குற்றமா?

நான் ஒரு மலர்ந்த புஷ்பம்தான். எனினும் அதன் இயல்பான மணத்தை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. என் சுபாவம் அந்தச் சூழ்நிலைகளில் வேலை செய்ய இயலாதென்றும், நான் அங்கேயே தொடர்ந்து இருந்தால் என் பெண்மையைக் காப்பாற்றுவது எனக்குக் கடினம் என்றும் புரிந்தது.

எனவே நான் அந்த இடத்தை விட்டு வெளியேறுவதற்காக, பிற இடங்களுக்கு விண்ணப்பங்கள் அனுப்பினேன். மிக சீக்கிரத்திலேயே எனக்கு செயின்ட் ஸோபியா கல்லூரியில் அஸிஸ்டெண்ட் லெக்சரர் வேலை கிடைத்தது.

என் இதயம் ஸ்தம்பிக்கத் தொடங்கியது.

நான் ஓர் எலும்புக் கூடானேன்.

மாமன் மகள் – சென்னை க்வீன் மேரீஸ் கல்லூரியில் புரொபஸர் – ஒரு கிறிஸ்தவரை மணம் செய்து கொண்டாள்.

ஒரு பூகம்பம்!

தரவாட்டுப் பெருமை, சாதி எல்லாம் போயிற்று.

என் மீது ஒரு புதிய கட்டளை விதிக்கப்பட்டது. உத்தியோகத்திற்கோ வெளியிலோ போகக் கூடாது!

வேலையை ராஜினாமா செய்யச் சொல்லி தந்தி கிடைத்தது.

**உ**த்தியோகம் இல்லாதவளாக நான் வீடு திரும்பினேன். வாழ்வில் இரண்டாவது முறையாக நான் நினைவிழந்து தரையில் வீழ்ந்தேன். அண்ணன்கள் ஆஜ்மீருக்கு அழைத்துச் செல்லலாம் என்று கூறினர்.

அப்பா சம்மதிக்கவில்லை. அப்பா!

என் ஆசைக் கனவுகள் யாவும் தகர்ந்தன. வாழ்வில் எந்த ஒரு தரத்திலும் உள்ள சுகமும் அனுபவிக்கக் கூடாது என்று இறைவன் விதித்திருந்தான்.

மூன்று மாத விடுமுறை கழிந்தது. கிட்டத்தட்ட ஒரு பைத்தியக்காரி ஆனேன் நான். அப்பாவை எதிர்க்க முடியாத சங்கோஜம், அம்மாவை வேதனைப்படுத்தக் கூடாது என்ற சங்கடம்.

தப்பாகப் புரிந்து கொள்வதும், பரஸ்பர நம்பிக்கையின்மையும் நிறைந்த திக்கிலே தான் என் வாசம்.

நான் இன்று சாகாமல் செத்துக் கொண்டிருக்கிறேன்.

பி.டி. காலேஜில் சேர்ந்தேன். படிப்பதற்காக அல்ல. காலத்தைப் போக்க. அப்பாவுக்கு என் மேல் கொள்ளைப் பிரியம். ஆனால் அவருடைய நடவடிக்கைகளுக்கு மதிப்பளிக்க என்னால் இயலவில்லை. எனினும் என் தந்தையை நான் ஆராதிக்கிறேன்; நேசிக்கிறேன்.

எனக்கு இந்த இடத்தை விட்டு அகல வேண்டும். இங்கே வாழ்ந்தால் நான் நானாக இருக்க மாட்டேன். வெகு சீக்கிரத்தில் மனநோய் மருத்துவமனைக்கு நான் போக வேண்டி வரும்.

அதற்கான மனோநிலை உருவாகிறது. வீட்டில் எப்போதும் அழுவேன். கல்லூரியில் எப்போதும் சிரிப்பேன். இதுதான் இப்போதைய வாழ்வு நிலை.

எந்த ஒரு டாக்டருக்கும், மருந்திற்கும் என்னைக் குணப்படுத்தும் வலிமை இல்லை. மரணத்தின் குளிர்ந்த அஸ்திரங்கள்தான் இதயக் கொதிப்பைத் தணிவிக்கும்.

அப்பா என் வாழ்வை நாசமாக்கினார். என் சகோதரியின் வாழ்வை நாசமாக்கினார். என் சகோதரர்களின் எதிர்காலத்தை நாசம் செய்தார். என் தாயை – நேச மூர்த்தியை –

நாசம் செய்தார். என்றென்றைக்குமாக நாசம் செய்தார்.

அறுபத்தியிரண்டு வயதாயிற்று அவ னுக்கு. பணம் கொடுத்தாலும் வேண்டாம். சொத்து கொடுத்தாலும் வேண்டாம்!

இந்தப் பணம் வாழ்க்கையை ஒருக்காலும் மாற்றியமைக்காது என்று அவர் அறிந்திருந் தால்...

பணம்!

நான் அதை வெறுக்கிறேன்.

பழிவாங்கும் உணர்வாலும், சிநேகத்தா லும் என் இதயம் கொந்தளிக்கிறது.

நான் என்ன செய்வேன்?

ஒருவரிடமும் வெளிப்படையாகச் சொல்ல முடியாத ஒரு ரகசிய யுத்தம். வீட் டிற்குள்ளும், நெஞ்சிற்குள்ளும். எவரும் இது ஒன்றையும் அறிய மாட்டார்கள்! நான் மட் டும் சாகாமல் செத்துக் கொண்டிருக்கிறேன்.

எனக்கு இதிலிருந்து விமோசனம் கிட்டாதா?

என் விமோசனத்திற்காக மட்டும் முயற்சிக்க என் இதயம் சம்மதிக்கவில்லை. அந்த அளவு சுயநலவாதி அல்ல நான்.

என்னைச் சந்தேகப்படாதீர்கள். இதில் ஒவ்வொரு சொல்லும் முழு உண்மைகளே. தங்களுடைய மனசின் நான்கு மூலைகளை விட்டு இதன் ஒரு கிரணம் கூட வெளியே போகக் கூடாது.

இது ரகசியமாகக் காப்பாற்ற வேண்டிய சங்கதி. கதைக்கும் கருவாக்கி விடாதீர்கள். மற்றோர் உயிரிடம் – எதிர்காலத்தில் பிரிய மனைவியிடம் கூட – சொல்லாதீர்கள். இவை என் தந்தையின் செயல்கள் என்பதை நினைவில் வையுங்கள்.

ஒரு கேள்வி கேட்கலாம்!

எதற்காக இதையெல்லாம் கொஞ்ச காலத்திய பரிச்சயத்தை மதித்து நான் எழுது கிறேன்? என் இதய பாரம் குறைக்க. நான் தங்களை நம்புவதால். விரும்புவதால். இதன் பொருளைத் தப்பாகப் புரிந்து கொள்ளாதீர் கள்.

நான் ஒரு முழு முட்டாள். குணங்களை உய்த்து அறிவதில் எனக்கு இன்னும் இவ் வளவு பேர்களுடன் பழகியும் பிறத்தியார் சுபாவம் புரிந்து கொள்வதில் எனக்கு அறிவு போதாது.

பகைவரையும் நண்பரையும் பிரித்து அறிய முடியவில்லை. தாங்கள் என் நண்பர் அல்லவா? இவ்வளவு அழுதும் வேதனைப் பட்டும் என் இதயம் நிலைகொள்ளவில்லை. ஒரு சாதாரண நிகழ்ச்சிக்கு நான் மன முடைந்து விடுவேன்.

ஆகவே எனக்கு மோசம் செய்து விடா தீர்கள். புதன் கிழமை சரியாகப் பத்து மணிக்கு அரண்மனை அருகில் பார்க்க வாருங்கள். நான் சிறிது தாமதமாகவே வகுப்பிற்குப் போவேன்.

ஒருநாள் நான் உட்கார்ந்து அழுது கொண்டிருந்தேன். சாவித்திரி வந்தாள்.

"தங்கம்" என்று கூப்பிட்டாள்.

நான் சிரித்தேன்.

கண்களில் இருந்து வெப்ப மலர்கள்.

இது ஒரு புதிய கலை என்று அந்தப் பெண்ணிடம் சொன்னேன். "தங்கத்திற்கு தனிப் பைத்தியம் பிடித்திருக்கிறது" என் றாள் அவள்.

ஏழு வயதில் தொடங்கினேன் அழு வதற்கு. பதினைந்தரை ஆண்டுகள் அழு திருக்கிறேன். இடைவிடாது. இப்போதும் மேற்படி மேற்படி., பைத்தியம் பிடிக்க வில்லை என்றால் அதுதானே அற்புதம்?

இப்படியிருக்க, தங்களுடைய "ஒரு ஜெயில் புள்ளியின் சித்திரம்" என்ற சிறு கதையை வாசிக்க நேர்ந்தது. அதில் வரும் அந்த அம்மாவின் சங்கடமும் மரியாம்மயின் சுயநலமற்ற பிரேமையும் என்னை ஈர்த்தன. தெய்வ கிருபையால் ஒரு கதாசிரியரோடு தொடர்பு கொள்ள 'கோ-எஜுகேஷன்' சந்தர்ப்பம் கொடுத்தது.

என் யதார்த்த சித்திரம், "எ லாட் ஸ்வீட் போயம்". அந்தப் பெயரும் கிட்டியபோது நான், சொன்ன நபரோடு கொஞ்சம் அதிகம்

---

''சம்பள தினத்தன்று மட்டுமாவது குடிக்க அனுமதி கொடுன்னு என் கணவர் கெஞ்சிக் கேட்டதை ஒப்புக் கொண்டது தப்பாப் போச்சு!''

''எப்படி?''

''அவர் பார்த்துக்கிட்டிருந்த மாதச் சம்பள வேலையை ராஜினாமா செய்துட்டு தினக் கூலிக்கு அலையறார்!'' – ஸ்ரீதர்






# ஃபாஷன் ஷோவில் மிஸ்டர் மிடில்கிளாஸ்!

பளீரென்ற முகம். வித்தியாசமான ஹேர் ஸ்டைல். கழுத்தில், காதில், கையில் நவீன சமாசாரங்கள். வாய் நிறைய சிரிப்புடன் ஆங்காங்கே ரெண்டு மூனு பேராய் நின்று பேசிக் கொண்டிருந்த பெண்களைக் கண்டதும் மிஸ்டர் மிடில்கிளாஸுக்குக் கொஞ்சம் திகைப்பு. ஃபாஷன் ஷோ என்றால் அழகிகள் அன்ன நடை நடப்பார்கள் என்றுதானே கேள்விப்பட்டிருக்கிறோம், இங்கே கூடி நின்று பேசிக் கொண்டிருக்கிறார்களே!

திகைத்துக் கொஞ்சம் தடுமாறினபோது, 'ஃபாஷன் ஷோ விரைவில் ஆரம்பிக்கும்' என்ற அறிவிப்பு வந்தது. ஆங்காங்கே நின்றிருந்த அழகிகள், இருக்கைகளில் வந்து அமர்ந்து கொண்டனர்.

சென்னையில் உள்ள ஃபாஷன் இன்ஸ்டிடியூட் மாணவ, மாணவிகள் டிசைன் செய்த ஆடைகளை வெளிச்சம் போட்டுக் காட்டத்தான் இந்த ஃபாஷன் ஷோ.

அத்தனை பேரும் அழகிகள். விதம் விதமாக டிரஸ் போட்டுக்கிட்டு வந்ததைப் பார்த்துக்கிட்டு இருந்தபோது, ஒரே ஒருவர் அவங்க போட்டிருந்த ஹைஹீல்ஸ் செருப்புகளை பார்த்துக்கிட்டிருந்தார். ஏன் அப்படி? இந்த செருப்பு மேல ஏறி நிக்க, ஸ்பெஷலா மினி ஏணி வெச்சிருப்பாங்களோ என்று அவர் சந்தேகப்பட்டிருக்க வேண்டும். அல்லது அவர், ஆடிட்டராய் இருக்க வேண்டும்.

'வாரியர்' என்று சொல்லிவிட்டு அழகிகள் போட்டுக் கொண்டு வந்த உடையைப் பார்த்த போது, அவர்கள் சண்டைக்குப் போகிறவர்களாகத் தெரியவில்லை. ஆனால், இந்த டிரஸ்ஸில் வெளியே போனால், அம்மாக்கள் சண்டை போடுவார்கள் என்பது மட்டும் நிச்சயம்.

முழங்கால் வரை கூட இல்லாத உடைகள், பின்னால், ராஜா வருகிறார் பராக் பராக் சொல்கிறாற்போல நாலு மீட்டர் நீளம் தரையில் தவழ்ந்தது. இனி சிம்ரனுக்கும், இஷா கோபிகருக்கும் மாட்டி, அழகு பார்ப்பார்கள் தமிழ் சினிமாக்காரர்கள்.

புறப்படும்போது, மிஸ்டர் மிடில்கிளாஸுக்கு ஒரு ஆசை. அடுத்த தடவை பேஷன் ஷோ பார்க்க சான்ஸ் கிடைத்தால், மனைவியையும் கூட அழைத்துக் கொண்டு வர வேண்டும். பின்னே! டக் டக் என்று டிரஸ் மாற்றிக் கொண்டு, மேடைக்கு வரும் அழகிகளின் சுறுசுறுப்பைப் பார்த்தாலாவது சீக்கிரம் டிரஸ் பண்ணிக் கொண்டு புறப்படும் பழக்கம் வராதா என்றுதான்!

— மௌலி

படம் : ஸ்ரீஹரி

நெருங்கி வந்தேன். இன்று நான் சொல்கிறேன். தப்பபிப்பிராயக்களை நீக்கவே அன்று நான் எழுதியனுப்பினேன்.

என் இலக்கியப் பணிக்கு உதவுவீர்கள் என்ற ஓர் ஆசை தங்களை நெருங்கும் ஈர்ப்பைத் தந்தது. இந்தப் பயங்கரமான ஒரு பரிணாம வளர்ச்சி அதிலிருந்து உண்டாகுமென்று இந்த முட்டாள் கனவிலும் கருதியதில்லை.

தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள்.

எனக்கு சாதியிலும், அழகிலும், பணத்திலும் மோகமில்லை. உள்ளழகிலும் – உண்மை அன்பிலும் – எனக்கு நம்பிக்கை உண்டு.

புராதனப் பண்பாட்டை நான் பூசிக்கிறேன். அதனால் சாதி விசுவாசம் எனக்கு உண்டென்று கருதி விடாதீர்கள். கடைசிக் கடிதத்தில் அந்தக் குறிப்பீடு என்னை வேதனைப்படுத்தியது.

நான் நேசித்தால், எனக்கு வேண்டுமென்று தோன்றினால், என் காதல் பாத்திரம் முஸ்லீமாக இருப்பதாலோ, பணக்காரனாக இல்லாததாலோ நான் பின்வாங்க மாட்டேன்.

(தொடரும்)

**THE MAGIC OF MANGOES**

**ARE YOU ENVIRONMENT-FRIENDLY?**
**- quiz**

**JUNE '99**
**Rs. 6/-**



**JIMMY**
*- Petpals*

**FREE LABELS**

**MY CHILDHOOD HOME**

# GOKULAM

*The monthly magazine for children*

*47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097*

# சுமி சூப்பர் மார்க்கெட்

# 'மேலே' அனைத்துப் போகும் மலர்!

— சுமி

அந்தக் காலத்துப் பிரபல எழுத்தாளர் ஒருத்தரைப் பத்தி ஒரு நியூஸ் கேள்விப்பட்டிருக்கேன். அவர் கதை பப்ளிஷ் ஆகும் போதெல்லாம், அவரே அம்பது கார்டு வாங்கி, தெரிஞ்சவங்களுக்கெல்லாம் குடுத்து, கதையைப் படிச்சிட்டு, பத்திரிகை ஆபீஸுக்கு லெட்டர் போடச் சொல்லுவாராம்.

அந்தமாதிரி, இங்கிருந்து வெகேஷனுக்கு மும்பை போன நம்ம மன்ற உறுப்பினர் ஈரோடு சௌந்தர்ராஜன், (மும்பைல நம்ம புகழ் பரப்பப் போறதா சொன்னாரே, அவரே தான்!) ஒரு போஸ்ட் ஆபீஸ்ல இருக்கக்கூடிய மொத்த கார்டுகளையும் வாங்கி, கண்ணுல பட்ட அத்தனை ஆசாமிகளுக்கும் இலவசமா டிஸ்ட்ரிப்யூட் பண்ணியிருக்கார்னு நினைக்கறேன். (மூட்டு வலி, ஆஸ்துமா தொல்லையான்னு பிட் நோட்டீஸ் தருவாங்களே பஸ் ஸ்டாண்டுல; அதுமாதிரி.)

லாஸ்ட் வீக் முழுக்க எக்கச்சக்க மும்பை லெட்டர்ஸ். பால்தாக்ரேவும் ஜெயஸ்ரீ ராஜும் மட்டும்தான் பாக்கி.

யாரானா உருப்படியா ஒரு நியூஸ் or bit or joke எழுதியிருந்தாங்களா? அதுவுமில்லை.

சும்மா, தமிழ்த் தாயின் தனிப் பெரும் புதல்வியே, செந்தமிழ்க் கலை வளர்க்கும் சிந்தனைச் சுரங்கமேன்னு கட் அவுட் வெக்காத குறை! எனக்கு இதுமாதிரி புகழெல்லாம் அவ்வளவா பிடிக்காதுன்னு(க்கும்!) தெரியுமில்லை?

கார்ட்ஸ் போறாதுன்னு ஒரு கோஷ்டி ஈ-மெயில் வேற அனுப்பியிருக்கு. அதிலும் இதே புகழுரைகள்! அறிவியல் வளர்ச்சியை இப்படி 108 போற்றி பாடவா யூஸ் பண்றது? (ஒருத்தருக்கு வர்ற ஈ-மெயிலை மத்த இன்டர்நெட் யூஸர்ஸ் வழி மடக்கிப் படிக்கற வழி இருக்கா?)

பை த வே, ஈரோடு சௌ ரொம்ப சிலாகிச்சு அனுப்பிய சத்யவான் சாவித்ரியை 40 பக்கத்துக்கு மேல படிக்க முடியலை. பிரமாதமா இருந்தா நம்ம சூப். மார்க்கெட்ல கொஞ்சம் டிஸ்ப்ளே பண்ணறேன்னு சொல்லியிருந்தேனில்லை? ஸாரி. அது சாத்தியமில்லை. (மும்பை லெட்டர்ஸுக்கும் இதுக்கும் சம்பந்தமில்லை.)

• • •

"கிடைக்கற ஒரு பிட் நோட்டீஸ்கூட விடாம படிச்சுடறதுங்கற வழக்கம் வெச்சுக்கிட்டிருக்கியே, தினமணி மாணவர் மலரைப் படிச்சுட்டியா"ன்னு கேட்டார் என் Male friend சுப்ரமணியன்.

ஐயோ இன்னும் இல்லையே சார்னு அவசரமா வாங்கிப் படிச்சேன். மயக்கமே வந்துடுச்சு! இவ்ளோ சின்ஸியரான ஒரு work ஆன்னு பிரமிச்சுப் போனேன்.

நம்ம சொந்த சகோதரர்களுக்கு மேல் படிப்புன்னா CA அல்லது IIT தவிர வேற எந்தக் கனவும் சட்டுனு வராது. இந்த மலர்ல எவ்னோ மேல் படிப்புகள் பத்தின டீடெயில்ஸ் தெரியுமா?

கேட்டரிங், ப்ளாஸ்டிக், நகை டிஸைனிங், பிஸியோதெரபின்னு பலர் அறியாத ரூட்ஸ் பத்தி டீடெயிலா எழுதியிருக்காங்க.

'அடுத்து என்ன படிக்கலாம்'னு சுமார் 150 ஸ்டூடன்ஸோட கேள்விகளுக்கு பதில் சொல்லியிருக்கறதுதான் ஹைலைட். 150 X 150 பேருக்காவது ரொம்ப யூஸ்ஃபுல்லா இருக்கும்!

கல்வி மையங்கள்ல 'எக்ஸாம்ஸ் எப்படி பண்ணு ஒரு கைட், இன்டர்வியூஸ்க்கு போறதுக்கு டிப்ஸ், பழம் தின்னு கொட்டை போட்ட கல்வியாளர்களோட கட்டுரைகள் ("கம்ப்யூட்டர் மட்டும் படிக்கறவங்க பெரிய லெவல்ல பிரகாசிக்க முடியாது; வேற ஏதாவது ஒரு துறைல நல்லா ஸ்டாண்ட் பண்ணிக்கிட்டு, கம்ப்யூட்டரையும் படிச்சி வெக்கறதுதான் புத்திசாலித்தனம்"ங்கறார் துணைவேந்தர் ஆனந்தகிருஷ்ணன்)

ஒண்ணு பாக்கியில்லை. இருக்கற எல்லா கோர்ஸஸ் பத்தியும் இருவதே ரூபாய் செலவில

ஒரு மெகா பிராஸ்பெக்டஸ் வந்திருக்கிறது – நான் படிச்ச வரைல இதுதான் ஃபர்ஸ்ட் டைம்.

'வாழ்க்கையே வெற்றிதான்'னு டாக்டர் ருத்ரன் ஒரு அருமையான கட்டுரை எழுதி யிருக்கார். ஆனால் அதுல ஒரு விஷயம்... வாழ்க்கையின் தோல்வி அதன் முடிவில் – மரணத்தில்தான் அப்படின்றார்! மரணம் வரை வெற்றியானால் மரணம் எப்படித் தோல்வி ஆகும்?



ஐ டோன்ட் அன்டர்ஸ்டான்ட்!

• • •

**கொ**ளுத்தற வெயிலுக்கு மெட்ராஸ்ல மூலைக்கு மூலை தள்ளுவண்டி ஜூஸ் கடைகள் முளைச்சிருக்கு. வாழைப்பழம், தர்பூஸ், முலாம்பழத்தை சேர்த்துப் பிசைஞ்சி தண்ணி ஊத்தி, ஒரு எஸன்ஸையும் சேர்த்து, ஐஸ் போட்டு கிளாஸ் ரெண்டு ரூபாய்க்கு விக்கற புண்ணியவான்களே! ஜூஸ்ல எதுக்கு சிகரெட் அட்டை? எதுக்கு தேங்காய் நார்? எதுக்கு புளியங்கொட்டை?

தேக ஆரோக்கியத்தில் அக்கறையுள்ள மன்ற உறுப்பினர்கள், தள்ளுவண்டி ஜூஸ் களைப் புறக்கணிக்கக் கேட்டுக் கொள் கிறேன்.

இதோடவே இன்னொண்ணையும் சொல்லிடறேன். மைலாப்பூர் குளத்துக்கு எதிர்ல, அல்லயன்ஸ் பக்கத்துல 'நெல்லை பழரசம்'னு இதே சரக்கு ரொம்ப சுத்தமா கிடைக்குது. அதுல திராட்சை, பைனாப்பிள் துண்டுகளும் அகப்படறதுங்கறது விசேஷ போனஸ்.

அதென்ன நெல்லை பழரசம்? (இன்னும் ரெண்டு மூணு இடத்துலேயும் இதே போர்டு பார்த்தேன்.) ஃப்ரூட் மிக்சர்ங்கறது ஸ்டார் ஓட்டல்கள்லேருந்து சந்து கடை வரைக்கும் காலம் காலமா கிடைக்கிற விஷயம். திருநெல்வேலிக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்னு நெல்லை வாழ் பெருமக்கள் எழுதினா நல்லாருக்கும்.

## ஒரு ஜோக்:

**பு**த்திசாலியான மூணு ஆண்களுக்கு ஒரு தேவதை, ஆளுக்கொரு வரம் குடுக்கத் தீர்மானிச்சுது.

''என்ன வேணும் உங்களுக்கு?''ன்னு கேட்டப்ப, முதல் ஆள் ''இப்ப இருக் கறதைவிட 25% அதிக அறிவு தா''ன்னு கேட்டான்.

'ததாஸ்து'ன்னு தேவதை சொல்ல, அவன் துள்ளிக் குதிச்சான். முகத்துல அறிவுக் களை சொட்ட ஆரம்பிச்சிட்டதே!

ரெண்டாவது ஆள், ''எனக்கு 50% கூடு தல் அறிவு தா''ன்னு கேட்டான். அதையும் தேவதை அக்ஸெப்ட் பண்ணிடிச்சி. அவனும் மகா புத்திசாலி ஆயிடவே, மூணாவது ஆள் யோசிச்சான்.

''நாம உலகத்திலேயே பெரிய அறிவாளியா, திறமைசாலியா ஆகணும்''னு முடிவு பண்ணி, ''எனக்கு மொத்தமா 100% கூடுதல் அறிவு குடுத்துடு''ன்னு கேட் டான்!

ஓகே சொல்லிட்டு தேவதை மறைஞ்சதும் அவன் 'பெண்ணா' மாறிட்டான்!

– பெண் குலத்துக்குப் பெருமை(!) சேர்க்கும் இந்த ஜோக்கைத் தமது 'The best laid plans' நாவல்ல தந்திருக்கறவர் சிட்னி ஷெல்டன். நமக்கு அனுப்பினவர் பெசன்ட் நகர் ராமமூர்த்தி.

சுமி

# நடக்குமென்பார் நடக்கும்!



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கொஞ்சம் முன்னபின்ன இருந்தாலும் எப்படியாவது காரியத்தைச் சாதிச்சிடுவீங்க. பேச்சு சாதுர்யமும் திறமையும் கூடும். நண்பர்கள், உறவினர்களை எக்கச்சக்கமா எதிர்பார்க்காதிங்க. அளவோடுதான் உதவு வாங்க. கலைத் துறையினருக்கு ஓஹோ வாரம் தான். கூல்டிரிங்ஸ் கடை வெச்சிருக்கறவங்களுக்கு அமோக விற்பனை இருக்கும். அக்னி வெயில் தான் அத்தனை கடுமையா இல்லையேன்னு அலையாதீங்க. உடம்புக்கு வந்திடும். குடும்பத்தில் கூடலோடு ஊடலும் இருக்கும். உத்தியோகஸ்தர்கள் ரொம்பப் பொறுப்பா நடந்துக்கனும். பண விஷயம் சாதாரணமாத்தான் இருக்கும்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உங்க செல்வாக்கும் மதிப்பும் மலையளவுக்கு உயரப் போகுது போங்க. கலைத்துறை சம்பந்தப்பட்டவங்க, வெற்றிப் பாதையில் நடப்பாங்க. பெண்களுக்கு விருந்து, உல்லாசப் பயணம்னு சந்தோஷ சமாசாரங்கள் சித்திக்கும் வாரம். பொதுவா, சின்னச் சின்ன பயணங்கள் ஆதாயம் தரும். எதிரிங்க அம்பேலாயிடுவாங்க. வெளிநாட்டுத் தொடர்பால் ஆதாயம் கிடைக்கும். வெளிநாட்டோடு வியாபாரம் பண்றவங்களுக்கு லாபம் உறுதி. ஆனாலும் சிலருக்கு அலைச்சல் அதிகமா இருக்கும். தந்தையால சில பிரச்னைகள் வரலாம். குடும்பத்தில் செலவு கூடும்னாலும் அது சுப காரியங்களுக்கான செலவாத்தான் இருக்கும்!



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

மனசுல தெளிவும் தன்னம்பிக்கையும் இருக்கறதால வெற்றிகள் சுலபமா வந்து சேரும். வீடு, மனை விஷயங்களிலும் ஆதாயம் பார்க்கலாம். புதுசா எதையாவது வாங்குவீங்க. எழுத்துத் துறையில் உள்ளவங்களுக்கு சுபீட்சம் தெரியும். ஆனாலும் 2-ல் ராகுவும், 8-ல் கேதுவும் இருக்கறதால சில பிரச்னைகளும் தலை தூக்கத்தான் செய்யும்! பேச்சுல நிதானம் வேணும்; பயணத்தில் எச்சரிக்கை தேவை. அரசாங்கம் சம்பந்தமான விஷயங்களில் அனுகூலத்தை எதிர்பார்க்க முடியாது. வயிறு, கண் விஷயங்களில் எச்சரிக்கையா இல்லேன்னா அது ஆபரேஷன் வரைக்கும் இழுத்துட்டுப் போயிடும். உஷாரா இருங்க.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

சர்க்கார் விஷயங்களில் சடன் சேஞ்ச் தெரியுங்க. காரணம் குருவின் மாற்றம்! முக்கியஸ்தர்கள் உங்களுக்குப் பக்க பலமா இருப்பாங்க. பண விஷயத்தில் பிரச்னை இருக்காது. சிலருக்கு திடீர் அதிர்ஷ்டத்துக்கும் சான்ஸ் இருக்கு. சுபகாரியங்களும் கூடி வரும். உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றம் ஏற்படலாம். கலைத் துறையினருக்கு நல்ல வளர்ச்சி தெரியும். பெண்களுக்கு உற்சாகமான வாரம். அதாவது, ஷாப்பிங் வாரம். ஏகப்பட்ட பொருள்களை வாங்கிக் குவிங்க. ஸ்பெகுலேஷனிலும் ஆதாயம் தெரியும். பயணத்தில் எச்சரிக்கை தேவை. அரசியல்வாதிங்க மட்டும் ஒரு முறைக்குப் பல முறை யோசிச்சு அறிக்கை விடறது நல்லது.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

செயற்கரிய சில சாதனைகளை இந்த வாரம் துணிச்சலோடு செஞ்சு முடிப்பீங்க. கவர்மெண்ட் சமாசாரங்கள் உங்களுக்குச் சாதகமா இருக்கும். நிர்வாகத்துறையில் உள்ளவர்களுக்கு உற்சாகமான சூழ்நிலை உருவாகும். மத்தவங்க ஆதரவுக்கும் பஞ்சமிருக்காது. ஆனாலும் பண விஷயம் ஏற்ற இறக்கமாகத்தான் இருந்து வரும். அதனால வீண் செலவு கூடவே கூடாது. கைப் பொருளைப் பத்திரமா பார்த்துக்கணும். கலைத் துறையினருக்கு ஏற்றமான வாரம். பெண்களுக்கு நினைச்சது நடக்கற வாரம். பொதுவாச் சொல்லணும்னா, பசங்களால சிறுசிறு பிரச்னைங்க வரலாம். கொடுக்கல் வாங்கல் வேணாம்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

போன வாரம் மாதிரி இந்த வாரம் அத்தனை சுலபமா இருக்காது. பிரச்னைகள் வரத்தான் செய்யும். ஆனாலும் நண்பர்கள் பக்கபலமா இருக்கறதால சமாளிச்சிருவீங்க. கூட்டுத் தொழில் பண்ற



**விருச்சிக ராசிக்காரரான எழுத்தாளர் பாவை சந்திரனுக்குப் பண வரவும் பாராட்டும் ஓஹோ!**

# அக்னிசர்மா பக்கம்

வங்க அதிக லாபம் எதிர்பார்க்க முடியாது. மாணவர்களுக்கு சந்தோஷமான ரிசல்ட் கிடைக்கும். வெளிநாட்டுத் தொடர்பு இருக்கறவங்களுக்கு நல்ல சேதி கிடைக்கும். மீனவர்களுக்கு நல்ல நல்ல மீன்களா வந்து வலைல மாட்டும். கலைத் துறையினருக்கு மாமூலான வாரம்தான். ஆசிரியர்கள், சட்டத் துறையினருக்கு சந்தோஷமான சூழ்நிலை உருவாகும். பொதுவாப் பார்த்தா நிதானம் அவசியம். குடும்ப நலனில் கவனம் தேவை. பண விஷயத்தில் எச்சரிக்கை வேணும். பயணம் தவிர்க்கவும்.

**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

கிரக சஞ்சாரங்கள் உங்களுக்குச் சாதகமாவே இருக்கறதால உங்கள் எண்ணங்கள் ஈடேறும். செயலில் ஒரு வேகம் கூடும். வெளிநாட்டுத் தொடர்பால ஆதாயம் பெருகும்! வேற்று மொழி நண்பர்கள் உதவுவாங்க. விருந்து, கேளிக்கைகளில் கலந்து கொள்கிற வாய்ப்பு கிடைக்கும். பண விஷயம் சீராவே இருக்கும். பெண்கள் டிரஸ், நகைன்னு வாங்கற யோகம் இருக்கு. ஆனாலும் பொதுவாப் பார்த்தா சிறுசிறு பிரச்னைகள் வரத்தான் செய்யும். நிதானத்தோடு அணுகினா சமாளிக்கலாம். வியாபாரிங்க அகலக் கால் வெக்காதீங்க. அரசியல்வாதிங்க திடீர்த் திருப்பங்களைச் சமாளிக்க வேண்டியிருக்கும். குழந்தைகள் நலத்தில் கவனம் அவசியம்.

**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்கள் திட்டங்களைச் செயல்படுத்துவதில் சில குறுக்கீடுகள் வரலாம். பொருளாதாரம் அப்படியும் இப்படியுமாத்தான் இருக்கும். செலவுகள் கட்டுக்கடங்காம வந்து கழுத்தைப் பிடிக்கும். சிலருக்கு டிரான்ஸ்ஃபர் தவிர்க்க முடியாத விஷயமா இருக்கும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல், வாங்கல் விஷயங்களில் எச்சரிக்கையா இருங்க. வியாபாரிகளுக்குச் சமாதான வாரம்தான். தொழிலாளர்கள், விவசாயிகளுக்கு நல்ல வளர்ச்சி தெரியும். கலைத் துறையினருக்கு கஷ்டம்தான். பயணத்தால் பலன் உண்டுன்னாலும் எச்சரிக்கை அவசியம். எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்குப் பாராட்டோட பொருளும் சேரும்!

**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

பராக்கிரமம் உயர்ந்து நிற்கிற வாரம். எதிர்ப்புகள் இருந்தாலும் ஊதித்தள்ளிட்டு வெற்றிப்படி ஏறுவீங்க. சட்டம், ராணுவம், காவல் துறையினருக்குப் புகழும் பாராட்டும் உறுதி. கூடவே புரமோஷனும் கிடைக்கலாம். தொழில் துறையினருக்கும் லாபம் இருக்கும். அரசுப் பணியாளர்களுக்கு அகவிலைப்படியோடு, பதவியுயர்வும் கிடைக்கலாம். தந்தையாலும் கூடப் பிறந்தவங்களாலும் அனுகூலம் கிடைக்க சான்ஸ் இருக்கு. கோர்ட் வழக்கு விவகாரங்களில் வெற்றி வாய்ப்பு கூடிவரும். ஆனாலும் குடும்பத்தில் சில பிரச்னைகள் வரலாம். புது ஆளுங்ககிட்ட ஏமாற நேரிடலாம். பயணம் வேண்டாம். சாப்பாட்டு விஷயத்திலும், நாய்கள் சமாசாரத்திலும் கவனமாக இருங்க.

**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

எடுத்த காரியத்தில் வெற்றி உறுதி. பொறியியல் துறையினர், வியாபாரிகளுக்கு லாபம் நிச்சயம். பத்திரிகையாளர்கள், சிந்தனையாளர்களின் திறமை மதிக்கப்படும். கூடவே ஆதாயமும் கிடைக்கும். கமிஷன் ஏஜெண்டுகளுக்கு இது ஆதாய வாரம்னே கூடச் சொல்லலாம். தொழில் செய்யறவங்களுக்கு அமோக வளர்ச்சி தெரியும். தகவல் துறை தொடர்பானவர்களுக்கு புரமோஷன் கூடிவரும். புதுப் புதுப் பொருள்கள் வாங்கற யோகம் சிலருக்கு இருக்கு. பொதுவாப் பார்த்தா விளையாட்டு வீரர்கள் எச்சரிக்கையா இருக்கணும். புது முயற்சிகளை ஒத்திப் போட்டுடுங்க. பெண்கள் ஆரோக்கியத்தில் கவனமா இருக்கணும்.

**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க புத்திசாலித்தனம் வெளிப்படுகிற வாரம் இது. குடும்பத்தில் மகிழ்ச்சி இருக்கும். ஆனாலும் குரு மாற்றம் நடக்கறதால சில சங்கடங்கள் வரலாம். செலவுகளும் வரலாம். ஆனாலும் சனியின் உதவியோட சமாளிச்சிடுவீங்க. கூடப்பிறந்தவங்களால சில பிரச்னைகள் வரலாம். அதையும் சமாளிப்பீங்க. சிலருக்கு டிரான்ஸ்ஃபர் வரலாம். சிலருக்கு புது வீடாவது மாற வேண்டி வரலாம். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை அவசியம். வேலை தேடிக்கிட்டிருக்கறவங்களுக்கு மனசுக்குப் பிடிச்ச வேலை கிடைக்க சான்ஸ் இருக்கு. ஆனாலும் வெயில்ல அலையறதைக் குறைச்சுக்கங்க. இல்லேன்னா அனாவசியத்துக்கு டாக்டர் பீஸ் தர வேண்டியிருக்கும்.

**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

பேச்சாற்றல் கூடும். தோற்றப் பொலிவும் வசீகரமும் அதிகரிக்கும். வியாபாரிகளுக்கு லாப வாரம். பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்களுக்குச் செழிப்பான பாதை புலப்படும். கலைத் துறையிருக்கு வெற்றிப் பாதைதான். சகலருக்கும் இதுவரையிருந்து வந்த பணக் கஷ்டம் இந்த வாரம் காணாம போயிடும். வர வேண்டிய பாக்கிகள் அலறியடிச்சுக்கிட்டு வந்து சேரும். ஆனாலும் அலைச்சல் கூடும்; அதை சமாளிக்கிற திறனும் கூடும்! செலவுகள் கூடும்னாலும் அவையெல்லாம் நல்ல செலவுகளாத்தான் இருக்கும். ●

## மும்பை மசாலா

### எப்போ எழுவாரோ?

**வா**ஜ்பேயி என்ன தாலாட்டா பாடினார்? அவரது போக்ரன்-2வின் 'டுமீல்' கூடவா காதில் விழாமல் போகும்? தேர்தலை முன்னிட்டு, சிவாஜி பார்க்கில் கூடிய கூட்டம் அப்படி ஒரு குறட்டை விட்டதே? ஜோஷி, ராணே, மஹாஜன், ராஜ், உதவ், முண்டே; ராம் நாயக்... ஊஹூம்.. ஒருத்தராலும் தட்டி எழுப்ப முடியவில்லையே? பழக்க தோஷத்தால், சிவாஜி என்ற பெயர் காதில் விழுந்த போதெல்லாம், கூட்டம் தன்னிச்சையாகக் கண் விழித்து, 'ஹா...ஹா...' என்றது. மற்றபடி, மோடி மஸ்தான் பாணியில் 'அல்லாரும் ஒரு தபா ஜோராக் கையத் தட்டுங்கோ... தட்டுங்கோ...' என்று தலைவர்கள் பலமுறை கூறியும், கூட்டம் கைவிரலை அசைக்கக் கூட யோசனை பண்ணியதேன்? 'தாக்கரே வராததாலா? அவருக்கு உடம்பு (மனசு?) சரியில்லையாமே? ஜோஷியும் ராணேவும் ஒரு நாற்காலி விட்டு அமர்ந்து, தங்களுக்குள் உள்ள இடைவெளியை ஸிம்பாலிக்காக உணர்த்தினார்கள். ''48ல், 35 பார்லிமெண்ட் சீட் நிச்சயம்! மஹாராஷ்ட்ராவில் அப்படி உழைத்துக் கொட்டியிருக்கிறோமாக்கும்'' என்ற ராணேவின் மார் தட்டலுக்குக் கூட ஒரு கைதட்டல் இல்லை! சச்சினைப் பற்றி குறிப்பிட்டபோதுதான் கூட்டத்தில் கொஞ்சமேனும் சலசலப்பு ஏற்பட்டது. ''எப்படி சச்சின் உலகக் கோப்பையை இந்தியாவுக்காக வெல்வார் என்று இந்திய மக்கள் அனைவரும் நம்புகிறார்களோ, அதேபோல், வருகின்ற தேர்தலில் நாங்களே ஜெயிப்போம் என்ற நம்பிக்கை எங்களுக்கிருக்கிறது'' என்று ஜோஷி ஒரே போடாகப் போட்டு விட்டார். ஹூம்! சச்சனின் அப்பா காலமாகி, அவர் பாதி டூரில் ஊர் திரும்ப நேர்ந்த ட்ராஜிடியை எண்ணி, இப்போது சொன்ன உவமைக்கு நாக்கைக் கடித்துக் கொண்டிருப்பார்கள்!

### '·ஃபூலா'கிப் போன 'பூல்'கள்

**மு**ம்பையில் கொஞ்ச காலமாக தெருவுக்குத் தெரு, மூலைக்கு மூலை, 'பூல் பார்லர்'கள் அமர்க்களப்பட்டன. பிலியர்ட்ஸ், ஸ்னூக்கர் வகையறாக்களின் வழித்தோன்றலான இந்த 'பூல்' விளையாட்டு, மும்பைக்காரர்களை என்னமாக ஆட்டி வைத்தது? கீழ் மட்டத்திலிருந்து க்ளப் மட்டம் வரை, எல்லா ரகத்தவரும், வேலை வெட்டி எல்லாம் விட்டு விட்டு, 'பூல்' டேபிள்களையே சுற்றிச் சுற்றி வந்தார்கள். 'பப்', 'டிஸ்கொதே' என்று கெட்டலைவதற்கு இது எவ்வளவோ மேல் என்று, பல பெற்றோர்களும் 'பூலு'க்குப் பச்சைக் கொடி காட்டினார்கள். பார்லர் ஓனர்கள்,




ஓனாஸிஸ், ராக்ஃபெல்லர் கனவுகளில் மிதந்து கொண்டிருக்கையில், அரசு அவர்கள் மீது ஒரு இடீர் போக்ரனை வீசியது. ரூபாய் ஐநூறு கேளிக்கை வரி கட்டிக் கொண்டிருந்தவர்களை, இனி டேபிள் ஒன்றிற்கு, மாதம் ஒன்றுக்கு ரூபாய் ஐயாயிரம் கட்ட வேண்டும்; பெட்டிங், மதுபானம் முதலானவை கூடவே கூடாது' என்று ஆணையிட்டது. காலியாயிருக்கும் கஜானா, இந்த வழியிலாவது 30 கோடிகளைப் பார்க்கட்டுமே 'என்ற நப்பாசை அரசுக்கு, அவ்வளவுதான்!

படபடவென்று ஒவ்வொரு பார்லராக இழுத்து மூடப்பட்டு வருகிறது. இத்தனை தண்டமழுது பார்லர்களை நடத்தினால் அது 'Pool Corner' ஆகவா இருக்கும்? 'Fool corner' ஆகவல்லவா இருக்கும்?

### 'கெடு'பிடிக் கதைகள்

DD கணிப்பாளர்கள் – அட தூர்தர்ஷன்காரங்க இல்லை; 'டூம்ஸ் டே' ஜோசியருங்கதான் (ரெண்டுக்கும் என்ன வித்தியாசம்கறீங்களா?) – மும்பைக்கு மே 8, 12, 20 என்று கெடு வைத்திருந்தார்களா? அதை நம்பி இங்கே ஒரே அல்லோல கல்லோலம்; ஒரு பெண் 'float' எல்லாம் வாங்கி தயாராக வைத்திருந்தார் – பிரளயம் வந்தால் நீந்தி எஸ்கேப் ஆகலாமே! பாங்க் லாக்கரெல்லாம் பாதிக்கு மேல் காலி! ஒரு சார்ஜ் பண்ணுங்கள்; ஆனால் ஒரு ரூம் மட்டும் கொடுங்கள்' என்று பிச்சை எடுத்த எண்ணற்ற பணக்காரர்களின் கதையைச் சொல்லிச் சொல்லி சிரிக்கிறார்கள் விடுதி முதலாளிகள்! ஒன்றுக்கு ஒன்பதாக விலை கொடுத்து, பஸ்ஸிலும் லாரிகளிலும் டிக்கெட் எடுக்கும் கூட்டம் ஒருபுறம் மும்பையை விட்டு ஓட முயலுகையில், கையில் க்ளாஸ் ஏந்தி, 'பப்'களிலும் ரெஸ்டாரண்டுகளிலும் கடைசி நாளைக் குடித்தே முடிக்க நினைத்த கூட்டம் மறுபுறம்! அட... ப்ளானடோரியத்தை அண்டக் கூடப் பலர் பயப்பட்டிருக்கின்றனர் என்றால்... ஹூம்... ஒரு சூறாவளி வந்தால்தானே நம்மில் சூரப் புலிகள் யார் என்பது தெரிகிறது?

### கடையில் அல்ல, கொடையில்...

மும்பையைத் தற்சமயம் தாக்கியிருப்பது... ஹூம்! வைரஸ் ஃபீவரெல்லாமில்லை; கிரிக்கெட் ஜுரம் தான்! முக்கியமான மீட்டிங்குகள், பரீட்சைகள், ஏன், கல்யாணத் தேதிகளேகூட முக்கியமான மாட்சுகளின் அடிப்படையில் மாற்றி அமைக்கப்படுகின்றன. அதுவும் சச்சின் ஜுரம் கொஞ்சம் தலைக்கேறித்தான் இருக்கிறது. eat சச்சின், sleep சச்சின், drink சச்சின் என்று... 'பாட்'டிலிலிருந்து கூல்ட்ரிங்க் வரை எங்கும் எதிலும் சச்சின் ஜெபம்! இப்படி சச்சினுக்கு சோப் போடுகிறார்களே, தாங்குமா என்று நாம் வியக்கையில்... அட, இதென்ன? சோப்பிலேயே சச்சினைப் போட்டு விட்டார்கள் டோய்! இனி சச்சினைக் குழைத்துக் குழைத்து பூசிக் கொள்ளலாம்! ஹாய்... எங்கே ஓடுகிறீர்கள்... சோப் வாங்கவா? கடைக்கெல்லாம் போக வேண்டாம்; CRY (Child Relief and You)க்கு ஒரு டொனேஷன் கொடுத்தால் போதும்; சச்சின் உங்கள் வீடு தேடி வருவார்... சோப் வடிவில்!

# மாம்பழக் கூடையில் வெள்ளையப்பன்!




• சச்சின் சோப்!

மார்வாடி, பாம்பே சென்ட்ரலில் 25 அல்ஃபோன்ஸோ மாம்பழப் பெட்டிகளை ஏற்றிக் கொண்டிருந்ததைப் பார்த்து, போலீஸ் சந்தேகப்பட்டு, ஒவ்வொரு பெட்டியாகத் திறந்தால்... மேலே மாம்பழம்; கீழே கத்தை கத்தையா நோட்டு! வெள்ளத்திலிருந்து பாதுகாப்பாய் ராஜஸ்தானத்துக்குக் கடத்த நினைத்திருக்கிறார் பாவம்! மும்பையைச் சுற்றியுள்ள ஹில் ரிஸார்டுகளுக்கு எக்கச்சக்க டிமாண்டு! 'எத்தனை ஆயிரம் வேண்டுமானாலும்

— ஜெயஸ்ரீ ராஜ்

# வி.ஐ.பியைத் தெரிஞ்சுக்கங்க!

புதுக்கோட்டை - விராலிமலைச் சாலையில் சற்று உள்ளடங்கிய கிராமம் திருநல்லூர். நல்ல நீர்வளம் கொண்ட பூமி. ஊருக்கு முகப்பில் அனிஃப் பாய் வீடு. எண்ணெய்க்காரர் வீடு என்று குறிப்பிடுவார்கள். சுத்துப்பட்டு பதினெட்டுப் பட்டியிலும் ஏதாவது வம்பு தும்பு என்றால் பஞ்சாயத்துக்கு 'அனிப் அண்ணன்' வீட்டுக்குத்தான் வருவார்கள். ஊரில் நாற்பது முஸ்லீம் குடும்பங்கள். தைமாதம் மாரியம்மன் கோயிலில் தடபுடலாகத் திருவிழா. மண்டகப்படி, காப்புக் கட்டுவதற்கு முன் கோயிலிலிருந்து மாலைகளை எடுத்துக் கொண்டு மேள தாளத்தோடு பள்ளி வாசலுக்குச் செல்வார்கள். அனிஃப் பாய்க்கு மாலை அணிவித்து மேளதாளத்தோடு கோயிலுக்குச் கூட்டிச் செல்வார்கள். இன்றும் தொடர்கிறது இந்த வழக்கம்!

அனிப் பாய்க்குப் பதினோரு குழந்தைகள். அதில் ஒருவர்தான், இன்று அப்துஸ் சமதின் அரசியல் வாரிசாக, இந்திய யூனியன் முஸ்லீம் லீகின் தமிழ் மாநிலத் தலைவராகப் பொறுப்பேற்றுள்ள பேராசிரியர் கே.எம். காதர் மொய்தீன்,

திருநல்லூர் திண்ணைப் பள்ளிக் கூடத்தில் படிப்பைத் துவங்கி, திருச்சி செயின்ட் ஜோஸப் பள்ளி, கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றவர் காதர் மொய்தீன். பள்ளியில் குப்புசாமி ஆள்வாரும், குழந்தைவேல் முதலியாரும் சொல்லிக் கொடுத்த தமிழ், மனத்தில் ஆழப்பதிந்து விட்டது. ஆசிரியர்கள் வராவிட்டால் யாப்பிலக்கணத்தைச் சொல்லிக் கொடுக்கும் அளவுக்கு பள்ளி மட்டத்திலேயே தமிழ் அறிவை வளர்த்துக் கொண்டு விட்டார். பள்ளியில் படிக்கும் போதே பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி என்று கலந்து கொண்டு ஜமாய்த்தவர். 12 வயதில் நபிகள் நாயகம் பிறந்த நாள் விழா மேடையில் பேசத் துவங்கியாகி விட்டது. திருச்சிக்குப் பிறகு சென்னை வந்து சட்டக் கல்லூரியில் சில காலம் படித்து, இடையில் விட்டு விட்டு, மாநிலக் கல்லூரியில் எம்.ஏ. படிப்பு. அதிலும் தங்கப் பதக்கம்!

மதங்களை ஒப்பிட்டுப் பேசுவது, மதநல்லிணக்கத்தை வளர்க்கும்படிப்



பேசுவது போன்றவை காதர் மொய்தீனுக்குக் கல்கண்டு சாப்பிடுவது போல.

"சின்ன வயதிலிருந்தே எல்லோருடனும் இணக்கமான சூழலில் வளர்ந்தவன் நான்" என்று சொல்லும் காதர் மொய்தீன், தமாஷாக ஒரு விஷயத்தைச் சொல்கிறார்.

முக்குலத்தோரில் முறைப் பெண்ணைக் கட்டி வைக்காவிட்டால், உறவுக்கார மாப்பிள்ளைகள் பெண்ணைக் கடத்திக் கொண்டு போய் விடுவார்களாம்! திருநல்லூரைச் சுற்றியுள்ள கிராமங்களில் உள்ள வாலிபப் பையன்கள் இது போல் செய்யும்போது, பெண்ணைக் கொண்டு வந்து அனிஃப் பாய் வீட்டில் பாதுகாப்பாக வைத்து விடுவார்கள். அப்புறம் பெண், பையனின் அப்பாக்கள் பஞ்சாயத்துக்கு வர, டும்... டும்தான்!

**1965**ல் ஜமால் முகமது கல்லூரியில் விரிவுரையாளராகச் சேர்ந்து 1980 வரை அங்கே பணிபுரிந்தார். அந்தச் சமயம் குடும்பம் திருச்சிக்குக் குடி பெயர்ந்து விட்டது. தோல் வியாபாரத்தில் ஈடுபட்டார் அனீஃப் பாய். ஊரிலிருந்து திருச்சிக்கு யார் வந்தாலும் தங்கல், அனீஃப் பாய் வீட்டில்தான்.

"எங்கள் வீட்டில் ஒரு அறையில் ஆரோக்கியசாமி பிரேயர் செய்வதும், மற்றொரு அறையில் கோவிந்தசாமி சேர்வை பட்டை பட்டையாக விபூதி பூசிக் கொண்டு கந்த சஷ்டி சொல்வதும், வேறொரு அறையில் என் அப்பா நமாஸ் படித்துக் கொண்டிருப்பதையும் பல விடியல் வேளைகளில் பார்த்திருக்கிறேன்" என்று நினைவு கூர்கிறார் காதர் மொய்தீன்.

அப்பா ஹஜ்ஜுக்குப் போவதென்றால் வேற்றுமை பார்க்காமல் எல்லோருக்கும் பிரியாணி விருந்துதானாம்.

ஒரு முறை கவிதை படிக்கும் போது காயிதே மில்லத் அவர்கள், 'எந்தக் கவிதையுமே பதினாறு அடிக்கு மேல் போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் கேட்பவர்களுக்கும் மனத்தில் பதியும்' என்று சொன்ன ஆலோசனையை இன்னமும் ஞாபகத்தில் வைத்திருக்கிறார்.

மேடை நாகரிகத்தைக் கற்றுக் கொடுத்தவர் காயிதே மில்லத் என்கிறார்.

ஒரு முறை ராணுவ அதிகாரிகள் சென்ற விமானம், விபத்தில் சிக்கி ஐந்து அதிகாரிகள் இறந்து விட்டார்கள்.

"அநியாயமாகக் கொன்னுட்டாங்க என்று நான் பேசினேன். உடனே காயிதே மில்லத் 'நடந்திருப்பது விபத்து. அப்படியெல்லாம் உணர்ச்சி வசப்பட்டுப் பேசக் கூடாது' என்று அன்புடன் கண்டித்தார்."

# அப்துஸ் சமதின் அரசியல் வாரிசு!

**அ**ப்துஸ் சமதிடம் உங்களுக்குப் பிடித்தது என்னவென்று கேட்டால் டக்கென்று பதில் வருகிறது.

"திறமையுள்ளவர்களைப் பாராட்டுகிற பெருந்தன்மை அவருக்குண்டு. குரான்படி வாழ்க்கை, தமிழ்ப் பற்று, மனிதர்களை வேறுபடுத்திப் பார்க்காத பண்பு இந்த குணநலன்கள்தாம் தலைவரிடம் என்னை கட்டிப் போட்டவை."

58 வயதாகும் காதர் மொய்தீன் 'தாருல் குரான்' என்ற பத்திரிகையையும் நடத்தியிருக்கிறார். பிறை, மறுமலர்ச்சி ஆகிய பத்திரிகைகளிலும் நிறைய எழுதியிருக்கிறார்.

"மதம் என்பது வெறியல்ல; அது ஒரு மனித நெறி" என்று சொல்லும் காதர் மொய்தீனுக்கு தி.மு.க., பா.ஜ.க. நெருக்கத்தில் கொஞ்சம் வருத்தம் இருக்கிறது. முஸ்லீம் லீக்கின் செயல்பாடுகளில் பெண்களின் பங்கும் இருக்க வேண்டுமென்பதற்காக மாவட்டங்களில் மகளிர் அணி அமைக்கும் பணியிலும் மும்முரமாக இருக்கிறார் காதர் மொய்தீன்.

சந்திப்பு : **ஸ்ரீநிவாசன்**

படம் : **வெங்கடேஷ்**

## முன் கட்டணப் பதிவு முறை:

ஆட்டோ ரிக்ஷா முன் கட்டணப் பதிவு முறை என்பது சென்னையிலேயே ஃபெயிலியர் ஆன ஸிஸ்டம். மீட்டர் கட்ட ணம் என்றாலே வீசை என்ன விலை என்று எகத்தாளம் பேசும் கோவை ஆட்டோ டிரைவர்கள் மத்தியில் இது அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. எப்படி செயல்படுகிறது இந்த ஸிஸ்டம் என்று ஒரு ரவுண்ட் விசாரித்தோம்...

ரயில்வே ஸ்டேஷன்.



• குமுறும் டிரைவர்கள்

"எங்க பொழைப் புல மண்ணைப் போட்டுட்டாங்க சார்." – எடுத்த எடுப்பில் சொல்லிக் கொண்டு வந்தார் ஓர் ஆட்டோ டிரைவர்.

"மீட்டர் கட்டணம்னாக் கூட எப்படியும் கூட்டிக் குறைச்சு வாங்கலாம். ஆனா இப்ப பார்ட்டிங்க ஒரு இடத்தைச் சொல்லி டோக்கன் வாங்கிக்கிட்டு, சந்துக்குள்ள, வீதிக்குள்ளேன்னு அலைய விடறாங்க. கேட்டா ரகளைக்கு வர்றாங்க. கம்ப்ளைண்ட் பண்ணுவோம்ங்கறாங்க... கோயமுத்தூர் பரபரப்பான ஊர் இல்லை. திரும்ப வரும்போது 'எம்ப்ட்டி'யாத்தான் வர வேண்டியிருக்கு."

"அதே மாதிரி இங்கே பார்ட்டிக யாரும் ஒரு ஆட்டோவுக்காக க்யூவுல நிற்கத் தயாராயில்லை. பெரும்பாலும் ஸ்டேஷனை விட்டு வெளிய போய் இந்த ஸிஸ்டத்துக்கு வராத ஆட்டோவுல போயிடறாங்க. வண்டியும் சுத்தமா இப்பவெல்லாம் ஓட்டமேயில்லை. என்ன செய்யறதுன்னும் புரியலை" என்றனர்.

அங்கிருந்தும் ஓரிரு கிலோ மீட்டர் தூரம் தள்ளிப் போய் இதுபற்றி விசாரித்தாலோ, ஆட்டோ டிரைவர்கள் கிண்டலாகப் பார்க்கின்றனர்.

"அதெல்லாம் கட்டுப்படியாகாத சமாசாரம் சார். அட்வான்ஸ் புக்கிங் பூத்காரங்களும், ஆட்டோ டிரைவர்களும் விளையாடறாங்க. பார்ட்டி எங்கே சார் போய் டோக்கன் போடுது? ஆட்டோ டிரைவர் காசை வாங்கறான். போய்ப் போடறான். பார்ட்டிககிட்டப் பேரம் பேசறதுக்குப் பதிலா பூத்காரங்ககிட்ட பேரம் பேசி எழுதி வாங்கிக்கிறாங்க. அங்கேயும் ஆட்டோ டிரைவர் வைக்கறது தான் ரேட். அதிகாரிக எத்தனை நேரம் காவலிருந்திட முடியும்?"

"எனக்குத் தெரிஞ்ச ஒருத்தன். டவுன் ஹாலுக்கு டோக்கன் போட்டு வாங்கிட்டான். போனது வடவள்ளி. பார்ட்டிகிட்ட வடவள்ளிக்கு வாடகை இவ்வளவுன்னு ஒரு தொகை சொல்லி வாங்கினதோட, முன் பதிவு டோக்கன் சார்ஜைக் காட்டி வேறு, தனியா வாங்கிட்டான். எப்படி ஐடியா?"

"இப்படி நிறைய குளறுபடி தான். எப்படி சார் இது நடைமுறைக்கு வரும்?"

# அஞ்சி ஓடும்

அட்வான்ஸ் புக்கிங்கில் பணிபுரியும் முன்னாள் ராணுவத்தினரிடம் விசாரித்தோம்.

"அப்படியெல்லாம் எதுவும் இல்லை சார். வண்டி தொடர்ச்சியா வரும்போது மட்டும் கொஞ்சம் சிக்கல். க்யூ நின்டுது. பயணிகளுக்குச் சின்ன அறிவிப்புப் பலகை போதாது. பெரிய அறிவிப்புப் பலகை வைக்கச் சொல்லி கேட்கறாங்க. அது ஒண்ணு செய்யணும். மத்தபடி உரிய கட்டணம் வாங்கிட்டு டோக்கன் போட்டு பயணிககிட்ட (கமிஷன் இரண்டு ரூபாய்) கொடுத்திடறோம். அதைத் திரும்ப வந்து ஆட்டோ டிரைவர் கொடுத்தாத்தான் பணம். இதுவரைக்கும் யாரும் அடாவடித்தனம் பண்ணல...!"

இந்த முன் கட்டணப் பதிவு முறைக்கு ஒப்புக் கொண்ட யூனியன் தலைவர்கள் மேல்




• காத்திருக்கும் ஆட்டோக்கள்

# ஆட்டோக்கள்!

ஆட்டோ டிரைவர்கள் பலருக்கும் கோபம்.

"ரெண்டு நாள் போராட்டம் கூடப் பண்ணினோம். வெளியில போய் வாடகை எடுத்தோம். உடனே, 'பர்மிட் ரத்து செஞ்சுடுவோம். கிரிமினல் கேஸ் போடுவோம். டிரைவிங் லைசன்ஸ் கேன்ஸல் பண்ணிடுவோம்'ன்னு அதிகாரிகளே வந்து மிரட்டினாங்க. அதுக்கு பயந்துதான் எல்லோரும் ஓட்டிட்டு இருக்கோம். யூனியன் தலைவர்களே இதுக்கு ஒத்துக்கிட்டு கையெழுத்துப் போட்டிருக்காங்க சார்! அவங்க ஒரு வார்த்தை எங்களைக் கன்ஸல்ட் பண்ணவேயில்லை. அவங்க இங்கே வந்து வண்டி ஓட்டிப் பார்த்தா தெரியும். அதிகாரிகிட்டே அவங்க நல்ல பேர் வாங்க செஞ்ச காரியம். அதனாலேயே இங்கே ஏற்கெனவே இருந்த யூனியன்களைக் கலைச்சுட்டு கலெக்டர்கிட்ட வச்சு இன்னும் போராட்டம் பண்ணப் போறோம்!"

டிரைவர்கள் விருப்பத்துக்கு மாறான ஒரு விஷயத்துக்கு ஒப்புதல் அளித்தது ஏன் என்று சி.ஐ.டி.யுவுடன் இணைக்கப்பட்ட ஆட்டோ டிரைவர்கள் சம்மேளனப் பொதுச் செயலாளர் பி.கே. சுகுமாரனிடம் கேட்டோம்.

"இந்த முன் கட்டணப் பதிவு முறை எங்களுக்கும் உடன்பாடில்லை என்றாலும் கூட இப்போதைய சூழலில் ஆட்டோக்கள் ஒழுங்காக ஓட வேறு வழியில்லை. அதிகாரிகளுக்கும், ஆட்டோ ரிக்ஷா தொழிலாளர்களுக் கும் சுமுகமான ஒரு நிலை வரமுன் மாதிரியாக இது இருக்கட்டுமே என ஒப்புக் கொண்டோம். மீட்டர் கட்டணத்தை ஒப்பிடும்போது இது கொஞ்சம் கூடுதல். முன் கட்டண ஏற்பாட்டில் சில நடைமுறைச் சிக்கல்கள் வந்ததால் அதற்கு மாற்றாக ஒரு கட்டணமுறைப் பட்டியல் தயாரித்து முறைப்படி அரசுத் தரப்பில் கொடுத்துள்ளோம். அதை நியாயமான முறையில் பரிசீலித்து, கட்டண முறையை மாற்றியமைப்பதாக வாக்குறுதி கொடுத்துள்ளார்கள்.

எக்கச்சக்கமா ஆட்டோக்கள் குவியும் ரயில்வே ஸ்டேஷன் இப்போதெல்லாம் அடிக்கடி வெறிச்சோடிப் போகிறது. எண்ணிப் பத்துப் பதினைந்து ஆட்டோக்களையே காண முடிகிறது. ஏன் இப்படி?

"எல்லாம் பயம்தான் சார். காலையில ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து பேர் பண்ணிட்டு, ஒரு வாடகை எடுத்துட்டுப் போனா போனதுதான். அப்புறம் எல்லாம் வெளி வாடகைதான். பர்மிட், லைசன்ஸைக் காப்பாத்திக்க வேற வழி?"

கட்டுரை, படங்கள் : **கா.சு. வேலாயுதன்**

# சோனியா விஷயத்தில் அடுத்தது என்ன?

## கலக்கும் காங். கூடாரம்:



கட்சியில் நடக்கும் களேபரத்தைத் தொடர்ந்து சோனியா காந்தி தேர்தலில் போட்டியிட விரும்பவில்லை என்று அவருக்கு நெருக்கமானோர் சிலர் கூறுகின்றனர். கட்சியும் அவரில்லாத வாழ்க்கைக்குத் தயாராகிக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது.

தன் தலைக்குக் குறிவைத்து இவ்வளவு அஸ்திரங்கள் கட்சியிலிருந்து எய்யப்படுவதற்கு முன்பே தேர்லில் நிற்க வேண்டாமென்றும் பிரியங்காவை அவரது பாட்டியின் ரே பரேலி தொகுதியிலிருந்து நிறுத்துவதென்றும் ஒரு முடிவெடுத்திருந்தார் சோனியா. இது பி.ஜே.பியின் "அந்நியர்" பிரசாரத்தை எதிர்கொள்ள!

ஆனால் இப்போது பிரச்னை இவ்வளவு பகிரங்கமாகக் கட்சிக்காரர்களாலேயே கிளப்பப்பட்ட பிறகு, வெந்த நெஞ்சில் வேல் பாய்ந்த வேதனையடைந்த சோனியா ராஜினாமாக் கடிதத்தைத் திரும்பப் பெறப் போவதில்லை என்று அவரைச் சந்தித்த கட்சித் தலைவர்கள் பலர் கூறினர். பவார், சங்மா, தாரிக் அன்வர் குழுவைத் தாக்கவோ கட்சியிலிருந்து நீக்கவோ வேண்டாம் என்று செயற்குழுவைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். செயற்குழு அவரை மீறிச் செயல்பட்டிருக்கிறது! உணர்ச்சிவசப்பட்ட தொண்டர்கள், சீதாராம் கேசரியையும் அவரது காரையும் தாக்கி ஏக ரகளை பண்ண, போலீஸ் குவியும் அளவுக்கு நிலைமை முற்றிப் போனது!

இதற்கிடையில், சோனியா கட்சியார் இப்போது தயாரித்திருக்கும் திட்டம் சோனியா விரும்பும் ஒருவர் பிரதமர் வேட்பாளராக அறிவிக்கப்படுவார்; இன்னொருவர் கட்சித் தலைவராக்கப்படுவார்; சோனியா மற்றும் குடும்பத்தினர் (முக்கியமாக பிரியங்கா) தேர்தல் பிரசாரம் செய்வார்கள். இதனூடே தினம் ஒரு போராட்டம், "சோனியா வருக! செத்துக் கொண்டிருக்கும் கட்சிக்கு அமிர்தம் அருள்க" என்று தொடரும். "ஓரிருவர் மட்டுமல்ல. கூட்டம் கூட்டமாகச் செத்துப் போவோம் நீ வராவிட்டால்" என்று நித்த நித்தம் ஒரு கூட்டம் மண்ணெண்ணெயை ஊற்றிக் கொண்டு சாகக் கிளம்பும். (அவர்கள் இறுதி நேரத்தில் போலீஸாரால் கைது செய்யப்பட்டு விடுவார்கள்.) ஆகத் தலைவராகத் தொடராமலும், பிரதமர் பதவிக்கு முன்னிறுத்தப்படாமலும் எல்லாவித ராஜோபசாரங்களையும் சோனியா பெறுவார்!

பழி - பாவம் மற்றவர் மேல்! புகழ் மட்டும் தங்களுக்கு இது இப்போதைக்கு அவருக்கு மிக மிக உகந்த யோசனையாக இருப்பதாக இங்கு தகவல்கள். ஆனால் ஒன்று சர்வ நிச்சயம். தேசத்தின் முதற்குடும்பமாக இன்னும் கருதப்படும் பரிவாரங்களில் ஒருவர் இல்லாமல் கட்சி படுத்து விடுகிறது.

சோனியா மீண்டும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவார் என்றே தொண்டர்களும் தலைவர்களும் நம்புகின்றனர். இத்தனை நாடகத்திற்குப் பிறகு வாக்காளர்கள் அவரை ஒருவாறு ஏற்கத் தயாராகி விடுவார்கள் என்பது கட்சியின் எதிர்பார்ப்பு. எனவே ஜூன் அல்லது ஜூலைக்குள் கட்சி பிரச்னையை வெற்றிகரமாக முடித்த ஒரு புதிய வேகத்தோடு தேர்தலை எதிர்

**தலைநகர் தபால்**

கொள்ளத் திட்டமிட்டுள்ளனர்.

நாட்டின் பல திசைகளிலிருந்தும் வரும் சாமான்ய தொண்டர் கூட்டம் சோனியாவே தலைவர் மற்றும் பிரதமர் வேட்பாளர் என்று வெறி கொண்டு கத்துவதைப் பார்க்கும்போது சோனியாவுக்கு சாமான்ய ஜனங்களிடம் இருக்கும் செல்வாக்கையும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

ஒருமுறையாவது டெல்லி ஜன்பத் மாளிகை வாசலில் நின்று பார்த்தால்தான் புரியும். தொலைக்காட்சி தரும் 'தேவைக்கேற்ற விதத்தில் எடிட்' செய்யப்படும் காட்சிகளை மட்டும் பார்த்தால் போதாது!

எனினும் சோனியா இல்லாத ஒரு நிலைக்கான, திட்டத் தயாரிப்பிலும் ஈடுபட்டிருக்கிறது ஒரு குழு.

வேறொரு தலைவர், வேறொரு பிரதமர் வேட்பாளர் முன்னிறுத்தப்படுவர். ஆனால் சோனியாதான் தேர்தலில் கட்சியின் நட்சத்திரப் பிரசாரகர். கட்சி வென்றால் அவர் மீண்டும் கட்சித் தலைவராகலாம். பிரதமராகலாம். அல்லது பால் தாக்கரேயைப் போல் ரிமோட் விசையைச் சதா சர்வகாலமும் கையில் வைத்திருக்கலாம். சர்வ வல்லமை பொருந்தியவராய் வலம் வரலாம். ஆனால் ஒன்று உறுதி! தேர்தலுக்குப் பின் "இந்த மூன்று கோடரிக் காம்புகளையும் (பவார், சங்மா, அன்வர்) ஒரேயடியாக வெட்டிச் சாய்த்து விட வேண்டியது."

"என்ன சொன்னாலும் என் இத்தாலியப் பிறப்பு ஒரு பெரிய தேர்தல் நேர வாக்கு வாதமாகத்தானே போகிறது" என்று சோனியாவே கூறுகிறாராம். அவரைச் சந்திக்கும் தலைவர்களோ பத்திரிகைக்காரர்களிடம் தனியே கூறுவது: "இத்தாலியனோ இந்தோனேஷியனோ, அவர்தான் இன்றைக்குக் கட்சியின் மிகப் பெரிய வோட்டுப் பிடிப்பாளர். அவர் வலையில் விழும் வோட்டு மீன்கள் இன்றைக்கு எந்த ஒரு கட்சித் தலைவரின் வலையிலும் விழாது. சென்ற முறை பி.ஜே.பி. அறுதிப் பெரும்பான்மை பெறுவதை அவரை விட்டால் எவராலும் தடுத்திருக்க முடியாது."

ஆக இப்போதே, எதிர்பார்த்தபடி மன்மோஹன் சிங்கின் பெயர் பிரதமர் பதவிக்கும், பிரணவ் குமார் முகர்ஜியின் பெயர் கட்சித் தலைவர் பதவிக்கும் அடிபடுகின்றன!

— டெல்லி வெங்கட்

படம் : சௌந்தர்ராஜன்

# இந்த வார TV

**விமர்சிக்கிறார், மனநல மருத்துவர் டாக்டர் தாரா ஸ்ரீனிவாசன் (இயக்குனர், ஸ்கார்ப்)**

● 'ஸ்டார் ப்ளஸ்ஸில் ''ப்ரைம் மினிஸ்டர் ஸ்பீக்ஸ்'' என்ற தலைப்பில் பல முன்னாள் பிரதமர்களின் பேட்டிகளை ஒளிபரப்புகிறார்கள். இந்த வாரம் நரசிம்மராவ். பொதுவாகவே இவர் பேசுவது புரியாது. அன்று இன்னமும் மோசம்! கேள்வி கேட்டவரின் குரலிலும் தெளிவில்லை. பொதுவாக பேட்டிகள் தொடக்க நிமிடங்களிலேயே களை கட்டிவிட வேண்டும். அது இந்தப் பேட்டியில் மிஸ்ஸிங்.



● நேர்மாறாக இருந்தது 'அனிமல் ப்ளானட்'. பச்சோந்தியைப் பற்றிய நிகழ்ச்சி. பல்லி, ஓணான், அரணை, பச்சோந்தி போன்றவற்றையெல்லாம் கொஞ்சநேரம் பார்த்தாலே அருவருப்பும், அதிக நேரம் பார்த்தால் குமட்டலும் ஏற்படுவது இயற்கை. ஆனால் பச்சோந்தியைப் பற்றிய நிகழ்ச்சியை மிக அழகாகப் படமாக்கியிருந்தார்கள். பகைவர்களிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள மட்டுமல்ல; மூடுக்குத் தகுந்த மாதிரியும் அது நிறத்தை மாற்றிக் கொள்ளும் என்பதை கலர்ஃபுல்லாகக் காட்டியிருந்தனர்!

● ''டிவிஜ' சானலில் 'Hard Facts' என்ற பகுதியில் முன்பின் தெரியாதவர்கள் பெண்களைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டு வக்கிரத்துடன் பேசுவது குறித்த நிகழ்ச்சி. இதில் இரண்டு விஷயங்கள் 'அட'! என்று வியக்க வைத்தன. கருத்துக் கூறிய டீனேஜ் பெண்கள் ''இதையெல்லாம் ஸ்போர்ட்டிவ்வா எடுத்துக்க வேண்டியதுதான்'' என்றும், நடுத்தர வயதுப் பெண்கள் இதுபோன்ற 'கால்'கள் வந்தால் மிகவும் அப்செட்டாவதாகவும் கூறினார்கள். போலீஸ் மற்றும் தொலைபேசித் துறை உதவியுடன் இப்படிப் பேசும் வக்கிரமானவர்களைக் கண்டுபிடிக்க முடியும் என்பதுடன், ஈவ் டீஸிங் பிரிவின் அடிப்படையில் அவர்களை மூன்று மாதம் சிறைக்குள் தள்ளலாமாமே!

● விஸ்பர் விளம்பரம்– அதைப் பயன்படுத்த வேண்டிய நாட்களில் ஒரு பெண் சமையலறைக்குள் நுழைந்து ஊறுகாயை எடுத்துத் தின்கிறாள். அவர்கள் வலியுறுத்த விரும்புவது பெண் சுதந்தரத்தை. ஆனால் வெறும் கையால் பாட்டிலிலிருந்து ஊறுகாயை எடுப்பது சுகாதாரக் குறைவாயிற்றே என்பதுதான் மனத்தில் பதிகிறது! தவிர, 'அந்த மூன்று நாட்களை'ப் பற்றி நிறைய விளம்பரங்கள் வருவதால், குழந்தைகள் உள்ள வீட்டில் நிறைய சங்கடம் ஏற்படுகிறது.

தொகுப்பு: குல்ஜா

# 'அப்படிப்பட்ட' அரசியல்வாதிகள்!

✉ தலையங்கம் மிகவும் அருமை. பல வகைகளிலும் நன்கு அலசி, ஆராய்ந்து எழுதப்பட்டது. சோனியாவின் பரிதாப நிலையைத் தெளிவாய் உணர்த்தி விட்டீர்கள்.
சிதம்பரம்,
ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ சச்சின் அலங்கரித்த கல்கி அட்டைப் படத்திலிருந்து, உலகக் கோப்பை ஸ்பெஷல் நிறைய விஷயங்களைத் தந்து அமர்க்களப்படுத்தியிருந்தது.
மொரட்டுப்பாளையம்,
க. நா. இராஜேஸ்வரன்.

✉ வாஜ்பாய் Vs சோனியாவின் "ஒரு ரன்னில் தோல்வி" சாருகேசியின் கற்பனை விலா நோகச் சிரிக்க வைத்தது!
நெய்வேலி, க. இந்துமதி.

✉ 'ஏகாந்த ராமன்' ஓர் அருமையான மனோதத்துவ சிறுகதை வடிவம். சின்னச் சின்ன வாக்கியங்களில், யதார்த்தமாகச் செல்லும் அழகுச் சித்திரம்.
சென்னை – 106, மாயன்.

✉ ரௌடித்தனங்களுக்கே சல்யூட் அடித்துக் கொண்டிருக்கும் இன்றைய காலத்தில் அனிதாவுடைய அப்பா எடுத்த முடிவுதான் சரியான முடிவு. அதுதான் கற்பாறையிலும் கண்ணீர் வடிக்கச் செய்யும் என்பதை அழகாக எடுத்துக்காட்டியிருந்தார் பட்டுக்கோட்டை பிரபாகர் - தமது 'தயவுசெய்து' மினி தொடரில்.
திருப்பரங்குன்றம்,
டி.கே. சுப்பிரமணியன்.

✉ நீண்ட நாட்களாக எனக்கு ஒரு சந்தேகம் உண்டு. கல்கி நடுநிலை தவறி தி.மு.கவை ஆதரிக்கிறதோ என்று. ஊழலாட்சியாக நடைபெறும் உள்ளாட்சியில் உள்ள குறைகளை சுட்டிக் காட்டியதில், எனது ஐயம் ஆதாரமற்றது என அறிந்து கொண்டேன். எதற்குமே சரியான தீர்வு சொல்லாமல், பூசி மெழுகியும், தமது இயலாமை வெளிப்படுமாறும் ஆலந்தூர் நகராட்சித் தலைவர் பேசியிருப்பது வருத்தத்திற்கு உரியது. ஊழலற்ற நிர்வாகம் வழங்க நம் முதல்வர் தயாராயிருக்கும் பொழுது, ஓட்டைகளை அவர் கவனத்துக்குக் கொண்டு செல்ல நகராட்சித் தலைவர் ஏன் மறந்தார்?
தூத்துக்குடி, கே. சுதர்ஷன்.

✉ இன்றைக்கும் வடிவேலுவின் குடும்பத்துக்கு அந்த இரண்டரை ஏக்கர் நிலம்தான் இருக்கிறது என்றும், லியோ டால்ஸ்டாய் அவர்களின் மேற்கோள் காட்டி, 'சோதனைகள் வரும்போது இதைத்தான் நினைத்துக் கொள்வேன்' என்று அவர் சொல்வதாகக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். இப்படிப்பட்ட அரசியல்வாதிகள் இருக்கும் இதே நாட்டில்தான் 'அப்பப்படிப்பட்ட' அரசியல்வாதிகளும் இருக்கிறார்கள்!
மயிலாடுதுறை,
இரா. இராஜேந்திரன்.

✉ 'வி.ஐ.பி.யைத் தெரிஞ்சுக்கங்க' பகுதியில் ஒரு திருத்தம். 1952-ல் பாராளுமன்றத் தேர்தலில் தர்மபுரி தொகுதியில் என்.எஸ். சத்யா பிள்ளை காங்கிரஸ் வேட்பாளராகப் போட்டியிடவில்லை. வில் அம்பு சின்னத்தில் சுயேச்சையாகத்தான் போட்டியிட்டார்.
சென்னை – 24,
சி. என். ஜெகன்னாதன்.

✉ ராஜீவ் காந்தி கொலை வழக்கில் உச்சநீதி மன்றம் வழங்கிய தீர்ப்பை செய்தி மூலம் அறிவித்த தொலைக்காட்சி மற்றும் வானொலி உள்பட அனைத்து மீடியாவிலும் 19 பேரை உடனடியாக விடுதலை செய்யும்படியும் உத்தரவிட்டது என்று குறிப்பிட்டார்கள். ஆனால் இந்தச் செய்தி அறிவிப்பு உச்சநீதிமன்றம் அளித்த தீர்ப்பை முழுமையாகப் பிரதிபலிக்கவில்லை. அந்த 19 பேர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த தூக்குத் தண்டனையை 7 ஆண்டுகள் கடுங்காவல் தண்டனையாகக் குறைத்தும், அந்த 7 ஆண்டுக் கடுங்காவல் தண்டனையையும் அவர்கள் காவலில் வைக்கப்பட்டிருந்த கடந்த 7 ஆண்டுகளில் அனுபவித்து விட்டார்களென்றும், அதனால் அவர்களை விடுதலை செய்யும்படியும் உச்சநீதி மன்றம் உத்தரவிட்டது. இதைத் தெளிவுபடுத்தும் வகையில் செய்தி அறிவிக்கப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில், குற்றம் ஏதும் செய்யாமலேயே அந்த 19 பேர்களுக்கும் சென்னை சிறப்பு நீதிமன்றம் தூக்குத் தண்டனை விதித்து விட்டது போலும் என்ற தவறான எண்ணத்தை அந்தச் செய்தி அறிவிப்புகள் பாமர/பொது மக்களிடையே ஏற்படுத்தியிருந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.
சேலம்-16, அ.ந. அழகிரிசாமி.

# 'அட்மிட்' ஆகிச் சிரியுங்கள்!

''மகனுக்கு பீஸ் கட்ட ரொக்கமா இல்லையாம். ஈடாக, தன் நிலத்தில் விளைஞ்ச மிளகாயைத் தரேன்றார்.''

''அந்தச் சின்னக் கட்டடம்தான் காலேஜ்.''

''பக்கத்திலே அரண்மனை மாதிரி இருக்கே அது?''

''காலேஜ் தொடங்கினப்புறம், அதை நடத்துறவங்க கட்டிக்கிட்ட வீடு!''

''டிமாண்ட் அதிகமாயிடுச்சாம். அதுதான்.''

''எப்படியோ என்ர மகனுக்கு காலேசிலே இடம்பிடிச்சுட்டேன்.''

— மதன்

● ஒவ்வொரு வருடமும் பா.ம.க.வினர் சித்ரா பௌர்ணமி அன்று மாமல்லபுரத்தில் வன்னியர் இளைஞர் பெருவிழா என்று ஆர்ப்பாட்டமாகக் கொண்டாடுவார்கள். சென்ற வருடம் ஜெயலலிதாவைக் கூப்பிட்டு ஐஸ் அபிஷேகம் செய்தார்கள். ஆனால் இந்த வருடம் ஒரு சங்கடம். பா.ஜ.க. ஆட்சி கவிழ்ப்பின் தொடர்ச்சியாக தமிழக அரசியலில் ஏற்பட்ட குழப்பமான சூழல் காரணமாக, சித்ரா பௌர்ணமி விழா கேன்ஸலானது. ஆனால் உண்மையில் விழா நடத்தினால் வன்னிய இளைஞர்கள் தி.மு.க.வுடன் கூட்டணி அமைப்பதற்கு எதிராக ஏதாவது சொல்லி விடுவார்களோ என்ற பயத்தில்தான் விழாவை ரத்து செய்துவிட்டார்களாம்.

● புதிய தமிழகம் கிருஷ்ணசாமியை வளைத்துப் போடுவதில் தி.மு.க. - அ.தி.மு.க. இடையே போட்டி. தமிழகத்தில் மூன்று, நான்கு தொகுதிகளில் வெற்றி தோல்வியை நிர்ணயிக்கும் சக்தி புதிய தமிழகத்துக்கு இருக்கிறது. முஸ்லிம் முன்னேற்றக் கழகம், தி.மு.க.வுடன் கூட்டணி அமைக்கக் கூடாது என்று கிருஷ்ணசாமிக்கு அழுத்தம் கொடுத்துக் கொண்டிருக்கிறது. போயஸ்தோட்டத்து அழைப்பு, கிருஷ்ணசாமிக்குத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. "தி.மு.க.வில் இருந்து தனிக்கட்சி கண்ட வைகோவே கலைஞரைச் சந்தித்துக் கூட்டணி அமைத்திருக்கும்போது, பழைய தி.மு.க.காரரான கிருஷ்ணசாமிக்கு ஏன் தயக்கம்" என்று கேட்கிறார் உடன்பிறப்பு ஒருவர்.



# சிக்கலில் கிருஷ்ணசாமி!

● தமிழக போலீஸுக்குத் தேர்தல் முடியும் வரை பெரும் பொறுப்பு காத்திருக்கிறது. 'தீவிரவாதிகளைப் பிடிக்கிறோம்' என்ற போர்வையில் அப்பாவி முஸ்லிம்கள் கொடுமைப்படுத்தப்படுவதாக பல முஸ்லிம் அமைப்புகள் குற்றம் சாட்டி வந்தன. இந்த நிலையில் தி.மு.க. பா.ஜ.க.வுடன் தேர்தல் கூட்டணி அமைத்திருப்பது பல முஸ்லிம் அமைப்புகளைக் கொதிப்படைய வைத்திருக்கிறது. 'பொடா' சட்டத்தை வாபஸ் வாங்குதல், காயிதே மில்லத் மணி மண்டபம் போன்றவை நல்ல உறவு தொடங்குவதற்காக முஸ்லிம்களுக்குக் கொடுக்கிற சிக்னல்தான் என்று உணர்த்த முயன்றாலும் சிறுபான்மை சமூகம் சமாதானமானதாகத் தெரியவில்லை. கோயம்புத்தூர் குண்டு வெடிப்பு, சென்ற பாராளுமன்றத் தேர்தலில் தி.மு.க. கூட்டணிக்கு பலத்த பாதிப்பை உண்டாக்கிய காரணத்தால் இந்த முறை கண்காணிப்பைத் தீவிரப் படுத்த வேண்டிய நிலையில் இருக்கிறது போலீஸ். ஆனால் அதிலும் சங்கடம். தேர்தல் சமயத்தில் கடுமையான நடவடிக்கைகளில் இறங்கினால் அரசின் மீது இன்னும் வெறுப்பு அதிகமானால் என்ன செய்வது?

● தி.மு.க.வுடன் கூட்டணி அமைத்த சந்தோஷத்தில் கனடா பறக்கிறார் வைகோ. அங்கு தமிழர் விழா. ஒரு வார சுற்றுப்பயணமாம். அதேபோல் ம.தி.மு.க.வின் செய்தித் தொடர்பாளரான ராதாகிருஷ்ணன் ஐ.நா. மனித உரிமை கருத்தரங்கத்தில் கலந்து கொள்ளச் சீனா செல்கிறார்!

— சஞ்சயன்

அஜித்குமாருக்கு இரட்டை வேடம். ஒருவர் வாலி, மற்றவர் சுக்ரீவன். தாரைக்கு பதிலாக சிம்ரன். கிஷ்கிந்தைக்கு பதிலாகச் சென்னை. அவ்வளவுதான் கதை!

காது கேட்காத, பேச முடியாத அண்ணன் அஜித், தம்பியின் மனைவியை அடையத் துடிக்கிறார். (முழு வில்லன் ரோலில் பின்னியிருக்கும் அஜீத்துக்கு மானசீகமாய் மலர்ச் செண்டு) அண்ணன் மேல், தம்பிக்கு அளவு கடந்த மரியாதை + நம்பிக்கை. சிம்ரன் அண்ணனைப் பற்றிச் சொல்லும் குற்றச்சாட்டுகளை சகிக்கமாட்டாமல், அவரை ஒரு மனநல மருத்துவரிடம் கொண்டு போய்க் காட்டுகிற அளவுக்கு அவருக்கு அண்ணன் ஒரு கோயில். உண்மை தெரியவரும் போது வாலிவதம். ஒரே வித்யாசம் - உதவிக்கு ராமனைக் கூப்பிடாமல் துப்பாக்கியை எடுக்கிறார்கள் சிம்ரனும், அஜீத்தும்.

கதையின் வலுவே அந்த சாடிஸ்ட் அண்ணன்தான். இன்னும் மேலே, இன்னும் மேலே என்று அந்த கேரக்டருக்கு கனம் சேர்க்காமல் இடைவேளை வரை தம்பி அஜீத்தும் சிம்ரனும் காதலித்து, பாட்டுப் பாடி, டான்ஸ் ஆடுவதையே காட்டிக் கொண்டிருப்பது, ரயிலில் அன்ரிசர்வ்டு கம்பார்ட்மெண்ட்டில் பயணம் செய்வதைப் போன்ற அலுப்பு தருகிறது. இருந்தாலும், ஜன்னலோர சீட் கிடைத்த ஒரு சந்தோஷம் - தேவாவின் பின்னணி இசையும், ஜீவாவின் ஒளிப்பதிவும்!

கடவுளே! சிம்ரன் தானா, இப்படியொரு கேரக்டர் ரோலில் வெளுத்து வாங்கியிருப்பது? "உன்னைக் காதலிச்ச ஒரே காரணத்திற்காக என்னைப் பைத்தியமாக்கிட்டேல்ல" என்று அஜீத்தின் சட்டையைப் பிடித்து உலுக்கியபடி கதறி அழும் காட்சியில் அள்ளிக் கொண்டு போகிறார்.

'பழைய விவேக்தான்' என்றாலும், இறுக்கமான திரைக் கதைக்கு மத்தியில், அவரது காமெடி அவசியமாகத்தான் இருக்கிறது.

புது இயக்குனர் சூர்யாவின் எதிர்காலம் ஒளிமயமாகத் தெரிகிறது. சற்றே புதுசாக ஒரு விஷயத்தை அடுத்தப் படத்தில் அவர் தொட வேண்டும். இந்தத் திரைக்கதையில் இருக்கிற அழுத்தமும் விறுவிறுப்பும் அந்தக் கதைக்கும் வருமானால் அடுத்த மணிரத்னம் தயார்!

— கே.பி.எஸ்.



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1999

**வாசகர்களையும் எழுத்தாளராக்கும் போட்டி!**
**ரொக்கப் பரிசோடு புத்தகப் பரிசு!**

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே!
நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!

**முதல் பரிசு — ரூ. 5000**
**இரண்டாம் பரிசு — ரூ. 3000**
**மூன்றாம் பரிசு — ரூ. 2000**



தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

இவற்றோடு, பரிசு பெறுபவர்களுக்கு மட்டுமல்ல; பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளை எழுதிய கதாசிரியர்களுக்கும் **சுந்தா** எழுதிய **பொன்னியின் புதல்வர்** (அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாறு) நூலும் பரிசாக அளிக்கப்படும்.

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 1999'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 1 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

— **ஆசிரியர்**



சுந்தரி கடிதம் எழுதவில்லை. மணதைப் பிழிந்து அனுப்பியிருந்தாள். ஈரம் சொட்டும் வரிகள். கோபம், வருத்தம், அவனைக் காணாத ஏக்கம். "என்ன தப்பு பண்ணிட்டேன்னு... இப்படித் தண்டிக்கிறே?" என்ற கேள்வி. முக்கியமாக, குழந்தையைப் பற்றியச் செய்தி.

குழந்தை பிறந்து ஒரு வாரம் ஆயிற்றாம். அழகான ஆண் குழந்தை. அசல் அவன் ஜாடையேவாம். கொஞ்சம் கருப்புத்தான். ஆனால் அழகு கருப்பு. "எனக்காக இல்லைன்னாலும் பையன் முகத்தைப் பார்க்கவாச்சும் வா மச்சான்."

சில்லென்று சுகம் பரவ, கண்களை மூடிக் கொண்டான். தனக்கும் ஒரு வாரிசு. தனது அச்சில் குட்டி ஆள். பிஞ்சு முகம். உதைக்கிற கால்கள். பெருமிதத்தில் நெஞ்சு விம்மியது.

கடிதத்தைத் திரும்பத் திரும்பப் படித்தான். கன்னத்தில் ஒற்றிக் கொண்டான்.

"என்னடாது?" என்றார் மேஸ்திரி.

"கொளந்தை பொறந்திருக்கு. பையன்..." என்றான் மாரிமுத்து. கடிதத்தை விரித்துக் காட்டினான்.

"அடி சக்கைன்னானாம். தலைச்சனே ஆம்பளைப் புள்ளையா?" மேஸ்திரியின்

முகம் மலர்ந்தது. "எனக்கு அப்பவே சம்சயம். என்னடா... இத்தினியூண்டு கடிதாசியை இம்புட்டு நேரம் படிக்கிறானேன்னு... அப்படியா 'சேதி... ம்..." தோளில் கை போட்டுத் தட்டிக் கொடுத்தார். புளிச் சென்று தாம்பூலத்தைத் துப்பி விட்டு, "ஏலே... சேதி தெரியுமா... மாரிமுத்துக்கு பையன் பொறந்திருக்கான்" எனச் சப்தமாகச் சொன்னார். கலவை மிஷினின் பெருத்த ஓசையையும் மீறி அவரது குரல் கணீரென்று ஒலித்தது.

"நெசமாவா?" மணல் தட்டைக் கீழே போட்டுவிட்டு தங்கராசு வந்தான். நாலைந்து பேர் வந்தார்கள். எல்லோருக்கும் மகிழ்ச்சியான செய்திதான் இது. "மகராசனா இருக்கட்டும்" என்றாள் மூத்த சித்தாள். "சின்ன மேஸ்திரி கெட்டிக்கார ஆம்பளை தான்" என்றாள் இள வயசு ஒருத்தி.

# கடை நிறைய மனசு

"உனக்கும் ஒருத்தன் வருவான், பொறு...." என்றார் மேஸ்திரி.

"அய்யே..." என அவள் பொய்யாய்ச் சிணுங்க, எல்லோரும் சிரித்தார்கள்.

அவனுக்கு சுந்தரியின் ஞாபகம் வந்திருந்தது.

"பையன் முகத்தைப் பார்க்கவாச்சும் வா மச்சான்."

உரிமையாய்... கெஞ்சுதலாய்....

முகம் இறுகி நேரில் கேட்பதைப் போலிருந்தது. தன் மீது வாஞ்சை இல்லை என்று எண்ணி விட்டாளா? அதுதான் குழந்தையை முன் நிறுத்துகிறாளா?

"கண்டிப்பா வர்றேன்... சுந்தரி..."

"பொய்யி... உங்கம்மா விடாது. மகராசி..."

"ம்ஹூம்... இதுல யாரும் என்னைத் தடுக்க முடியாது..."

**மும்தாஜ் யாசீன்**

**போ**ன வருஷம் அவனுக்குப் பெண் தேடிக் கொண்டிருந்த நேரம். அம்மாதான் பார்த்து விட்டு வந்து சொன்னாள். "பொள்ளாச்சிப் பக்கம் ஒரு பொண்ணு இருக்குடா. உங்க அப்பாரு வகையில சொந்தம். பேரு சுந்தரியாம்... போயிப் பார்க்கலாமா?"

சுந்தரி பளிச்சென்று இருந்தாள். மாநிறம்தான். ஆனால் அவளுள், சலனத்தை ஏற்படுத்தும் வசீகரம் இருந்தது. துருதுருவென்று அலையும் கண்கள். அவனை நேருக்கு நேர் பார்த்தது பிடித்திருந்தது.

"என்னடா சொல்றே?"

"உன் இஷ்டம்...."

கல்யாணம் என்பது சந்தோஷத்தை மட்டுமல்ல. சச்சரவையும் வாங்குவது என்று அப்போது அவனுக்குத் தெரியாது.

ஒரே பிள்ளை என்பதால் அம்மா ஒவ்வொரு சடங்கு சம்பிரதாயங்களையும் வலியுறுத்துவதில் ஆர்வமாக இருந்தாள். சுந்தரியின் அப்பாவோ இடுப்பில் முடிந்து வைத்த காசு அப்படியே இருக்க வேண்டும் என் நினைக்கிற ரகம்.

மூன்றாம் நாளே சம்பந்திகளுக்குள் சண்டை வந்து விட்டது. குடும்ப வழக்கப்படி தாலியை எடுத்துக் கொடுக்கும் சுமங்கலிப் பெண்ணிற்கு சேலை எடுக்க வேண்டுமாம். அம்மா முரண்டு பிடித்தாள்.

அந்த மனுஷன் வெடுக்கென்று சொன்னார். "ஏதேது... எங்களை மொட்டையடிச்சுட்டுத்தான் மறு சோலி பார்ப்பீக போல...."

அம்மா பதிலுக்குக் கேட்டாள். "வெறும் பய குடும்பத்துல பொண்ணு எடுத்தது எங்க தப்புத்தான்..." என்று.

இரண்டு பக்கமும் எகிறினார்கள். பொதுவானவர்கள் தலையிட்டார்கள். ஒரு கட்டத்தில் எரிச்சலடைந்த மாரிமுத்து, "விட்டுத் தொலைம்மா... சேலை வேணா

நான் எடுத்துக் குடுக்கறேன்...'' என்று சொல்ல, அம்மா அடிபட்டது போலானாள். "இப்பவே வக்காலத்து வாங்கறியா... எனக் கென்னடா... விட்டுட்டேன்... போ..."

அம்மா சாது மாதிரி தெரிந்தாலும், கோபம் வந்தால் அடையாளமே மாறிப் போகிறவள். அப்போதைக்கு பிரச்னை பண்ணவில்லை. ஆனால் மகன் மீது சந்தே கம் விழுந்து விட்டது. எதிலும் பட்டுக் கொள்ளாமல் ஒதுங்க ஆரம்பித்தாள்.

"சினிமாவுக்குப் போயிட்டு வர்றம்மா...''

"பொறப்பட்டாச்சு. அப்புறம் என்ன அனுமதி... போப்பா...''

"சுந்தரி ஊருக்குப் போகணும்ங்கிது. என்னம்மா சொல்றே?"

"ஏன்... இதை அவ கேக்க மாட்டாளா... ம்... உனக்கு இஷ்டம்னா போகச் சொல்லு...''

"சுந்தரிக்குப் புடைவை எடுத்தேன். நல்லா இருக்காம்மா?"

"கட்டறவளைக் கேளு, ராசா...''

**ச**ம்பந்தி தலை நோன்புக்கு அழைக்க வருவது தெரிந்தது. மகன் வீட்டிற்கு முதல் நாளே போய் விட்டாள். அவளிடம் சொல்லிக் கொள்ளாமலேயே மாமனார் வீட்டுக்குப் போகும்படி ஆயிற்று.

திரும்பி வந்ததும் அரைப் பேச்சு, கால் பேச்சாகக் குறைய ஆரம்பித்தது. "நான் என்ன சிமைக்கா போயிருந்தேன். வேணும்னு இருந்தா அம்மான்னு தேடி வந்திருப்பான்ல?" எனக் கேட்கிறவர்களிடத் தில் சொல்லிக் கொண்டிருந்தாள்.

''இந்தம்மாவுக்கு என்ன வந்துச்சு? எப்பவும் எதையாச்சும் குத்தம் சொல்லிக் கிட்டே கெடக்கு'' என சுந்தரியும் முணு முணுக்க ஆரம்பித்தாள்.

பெண்களுக்குள் உண்டாகிற பிரச்னை கள் இலேசில் தீருவதில்லை. அவனும் சுந்தரியை அடக்குவதற்கு முயற்சி செய்து பார்த்தான். அவளுக்கும் வாய் கொஞ்சம் வெளிப்படையாகவே தெரிந்தது. சோத்துப் பிரச்னையில் எதிரொலித்தது.

"ஏய்... அம்மா சாப்பிட்டாச்சா?"

"நான் அப்பவே போட்டு வச்சுட்டேன்."

"அப்படியே கெடக்கு... சாப்பிடலையா?"

"நான் என்ன செய்யட்டும்... ஊட்டி விடச் சொல்றியா?"

அம்மாவைப் பதறிப் போய் எழுப்ப, "இப்பத்தான் உன் கண்ணுக்கு நான் தெரிஞ் சனா?" கண்ணீரும் கம்பலையுமாகக் கேள்வி கேட்டாள். இரண்டு நாளாகவே அவள் சாப் பிடாமல் வீம்புடன் இருப்பது தெரிந்தது. சுந்தரி முதன் முறையாக அவனிடம் அடி பட்டாள்.

தகப்பனுக்கு எழுதிப் போட்டிருப்பாள் போல. நான்காம் நாள் அந்தாள் வந்து கத்தவும், அம்மா நேரடியாக மோதினாள்.

வார்த்தைகள் தடிக்க, இரண்டு பக்கமும் நாறியது.

விளைவு சுந்தரி வளைகாப்பு இல்லாம லேயே பிறந்த வீட்டிற்குப் புறப்பட்டாள். அவனது தன்மானத்தில் அடிக்கிற மாதிரி சம்மதம் கேட்கவும் இல்லை. விடைபெறவும் இல்லை.

''நல்ல ஆம்பளைன்னா இனிமே அவளுக தலை வாசலை நீயும் மிதிக்கக் கூடாது... ஆமா...''

அம்மாவும் அவனைக் கட்டிப் போட்டு விட்டாள்.

இரண்டு மாதம் கழித்து சுந்தரி அவனது அம்மா செய்த தப்புக்களைப் பட்டியல் போட்டு தன் பக்க நியாயத்தை எழுதியிருந் தாள். அடி வாங்கிய வீம்பில் சொல்லாமல் வந்து விட்டதற்காக மன்னிப்புக் கோரி யிருந்தாள்.

மாரிமுத்து பதில் போடவில்லை. இனி யும் அப்படி முடியுமா?

**"ஏ**ண்டா இன்னும் நிக்கிறவன்? இன்ஜினீயர் கேட்டா நான் சொல்லிக் கறேன். கௌம்பு'' என்றார் மேஸ்திரி தாம்பூலத்தை மென்றபடி.

தயங்கினான்.

"என்ன... பணம் ஏதாச்சும் வேணுமா?"

"அதில்லை, வந்து இன்னிக்கு வேலையை முடிச்சுட்டு சாயங்காலமா...''

---

**''உங்க வீட்லேயும் எதிர்ப்பு இல்லேங் கறே. உன் காதலி வீட்லேயும் எதிர்ப்பு இல்லேங்கறே. அப்புறம் ஏன் ஓடிப் போறோம்ங்கறே?''**

**''கண்டல்காரனுக்கு பாக்கிக் கொடுக்க வேண்டியிருக்கே!''**

– ஸ்ரீதர்



"மடையன் மாதிரி பேசாதே. கோவம் வருது. பொறப்படு சொல்றேன்" மேஸ்திரி அவனை விசித்திரமாகப் பார்த்தார். "இதென்ன இந்தப் பய இப்படி இருக்கான்...." என்று எல்லோரிடமும் சொல்லுகிற சாத்தியம் இருந்தது. அப்புறம் ஆளாளுக்குப் பதில் சொல்ல வேண்டும்.

"அப்ப வர்றேன் மேஸ்திரி."

நடக்கும்போது வலு குறைந்த மாதிரி இருந்தது. அம்மா என்ன சொல்லுவாள். ஊருக்குப் போக சம்மதம் வாங்க முடியுமா? அவ்வளவு கருணை இருந்தால், "போயி ஒம் பொஞ்சாதியைப் பார்த்துட்டு வாடா'' என்று இத்தனை நாளில் அனுப்பியிருக்க மாட்டாளா?

அம்மா இலேசுப்பட்டவள் இல்லை. வேற்று தேசத்து மனுஷியைப் போலத்தான் சுந்தரியை நடத்தினாள். அவனது வாரக் கூலியை தானே வாங்கி முடிந்து கொண்டு, தொட்டதற்கெல்லாம் அதிகாரம் பண்ணி, "உம்பொஞ்சாதி சொல்றதைக் கேட்டியாடா?" என புலம்பி, அவள் எதிரிலேயே அவனது அப்பனிடம் சண்டை போட்டு புறப்படுகிற நாளில் கூட சுந்தரியை துக்கப் பட வைத்து...

எல்லா அம்மாக்களுமே கல்யாணத்திற்குப் பிறகு மகனிடம் சற்று தள்ளி நிற்கிற மாதிரித்தான் ஆகி விடுகிறது. சகித்துக் கொள்ள முடியாத அம்மாக்கள்தான் சண்டைக்கார மாமியார் ஆகிறார்கள். தாம் உறுதியாக இருந்தால் சமாளிக்க முடியும். சுந்தரியை அடக்க முடிந்தது. அம்மாவை என்ன செய்ய? தகப்பன் இல்லாமல் தங்களை வளர்க்க அவள்பட்ட கஷ்டங்களையும் அவமானங்களையும் நெஞ்சில் அடைகாத்து வைத்திருக்கும் தன்னால் எப்படி எதிர்ச் சொல் பேச முடியும். கடவுளே!

சுந்தரியின் கெஞ்சுதல் முகம் மீண்டும் தோன்றியது.

ஏதாவது செய்யத்தான் வேண்டும். என்ன செய்ய?

**வீ**டு பூட்டி இருந்தது. அம்மா எங்கே?

அவன் தயங்கி நிற்க எதிர்வீட்டிலிருந்து வாசுகி அக்காள் எட்டிப் பார்த்தாள். "அட... மாரிமுத்து. வா... ம்... அப்பனாயிட்டே.... சந்தோஷம்டா..."

மாரிமுத்து வியப்புடன் அவளைப் பார்த்தான். "யாரு சொன்னா?"

''அதப்பத்தி என்ன... தெரியும். என்னமோ... இனிமே ஒத்துமையா பொழைச்சா



''நேற்றுதானே ரேஷன் கடையில வேலைக்குச் சேர்ந்தே... ஏன் அதுக்குள்ள நின்னுட்டே?''

''அளவு கரெக்டா கொடுத்தேன்னு வீட்டுக்கு அனுப்பிட்டாங்க!''

– சீர்காழி ரேவதி

சரி..." வாசுகியக்காள் கீழ்ப் படியில் நின்று கொண்டு சாவியை நீட்டினாள். வாங்கிக் கொண்டான்.

"அம்மா எங்கேக்கா?"

"நாகு வீட்டுக்குப் போயிருக்கு. இப்ப வந்துரும்..."

கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தான். மனதுக்குள் குறுகுறுவென்று இருந்தது: இந்த அக்காவுக்கு யார் சொன்னது? அம்மாவா? அவளுக்கு எப்படித் தெரியும்?

வீடு துப்புரவாக இருந்தது. அவனை எதிர்பார்த்தவள் போல அம்மா சாதம் வடித்திருந்தாள். சாம்பாரும், பொரியலும் கிண்ணத்தில் போட்டு மூடியிருந்தன.

பாய் விரித்தபடி கிடந்தது. சுருட்டி வைக்கக் கூட முடியாமல் அப்படி என்ன அவசரம்?

தாகமெடுத்தது.

சமையற்கட்டில் மண் பானை இருந்தது. கீழே மண் பரப்பி, அடிப் பகுதியில் சுண்ணாம்பு பூசிய பானை. சில்லென்று இருக்கும். எழுந்து சென்று சொம்பு நிறையக் குடித்தான். ஏப்பம் விட்டுத் திரும்பும்போது சுவர் ஓரத்தில் வயர் கூடை கண்ணில் பட்டது. உள்ளே புடைத்துக் கொண்டு துணிமணிகள்.

அம்மா மகள் வீட்டிற்குக் கிளம்பி விட்டாளா? அதுதான் இத்தனை அவசரத்துடன் நாகுவின் வீட்டிற்குப் போயிருக்கிறாள் – வட்டிக்குப் பணம் வாங்க.

சுள்ளென்று கோபம் வந்தது. கூடையை எட்டி உதைத்தான். துணிமணிகள் சிதறி விழுந்தன. அம்மாவின் உடுப்புகள் ஒன்றுமில்லை. எல்லாம் அவனுடைய உருப்படிகள்.

கூடவே புதிதாக வாங்கிய ஒரு குட்டிச் சட்டையும் டிரவுசரும். ●

18

ஆத்மாவை பகவானிடத்திலே சரணாகதி பண்ணி சமர்ப்பிக்க வேண்டுமானால் அதற்கு ஒரு மந்திரம் வேண்டுமல்லவா...?

அதையும் உபநிஷத் நமக்கு எடுத்துச் சொல்கிறது.

ஓம் என்கிற பிரணவத்தைச் சொல்லி இந்த ஆத்மாவை பகவானுடைய திருவடியிலே சமர்ப்பித்தல் வேண்டும்.

'அம்மென நான் அமிழ்ந்தேனே' என்கிறார் சுவாமி தேசிகன். இதைத்தான் கடோ உபநிஷத் சொல்கிறது. இந்த கடோ உபநிஷத் வாசகத்தைத்தான் தமிழிலே சுவாமி தேசிகன் எடுத்துக்காட்டுகிறார்!

பிரணவோ தனு : ஓம்காரம் இருக்கிறதே... அதுதான் வில். அந்த வில்லிலே ஆத்மாவாகிற அம்பைப் பூட்ட வேண்டும். பூட்டிவிட்டு, அப்படியிப்படிப் பார்க்கக் கூடாது. எது உத்தேசமோ, எது குறியோ அதுதான் தெரிய வேண்டும் கண்ணுக்கு! எது லட்சியமோ அதோடு கூட மீதியெல்லாம் தெரிந்தால் என்ன ஆவது! விபரீதம் தான்.

ஆகையால் உத்தேசமானதை மட்டுமே காண வேண்டும்.

வில் வித்தைப் பயிற்சியிலே துரியோதனாதிகளைப் பார்த்துக் கேட்ட போது என்ன சொன்னார்கள்...? மரம் தெரிகிறது, மேலே கிளை தெரிகிறது, இலை தெரிகிறது என்றார்கள். எல்லாம் தெரிகிறது என்றால் லட்சியம் எப்படிக் கண்ணிலே படும்?

ஆனால் அர்ஜுனனைக் கேட்டபோது, குறி மட்டுமே தெரிகிறது என்றான்.

பிரும்மம்தான் நமக்கு உத்தேசம் என்னும்போது அது மட்டுமே நமக்குத் தெரிய வேண்டும்.

மற்றதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தால் அவன் எப்படித் தெரிவான்? சரியாக நம்மை எப்படிச் சமர்ப்பிக்க முடியும்? அதனால் நாம் மற்றதையெல்லாம் மறந்து, மற்றதை சிந்தனை பண்ணாமல் அவன் ஒருவனே குறியாய் இருத்தல் வேண்டும்.

அர்ஜுனனின் அம்பானது எப்படி அந்த லக்ஷ்யத்திலே தைத்து நிற்கிறதோ, அந்த மாதிரி இந்த ஆத்மாவும் எம்பெருமானின் சரணாரவிந்தத்திலே போய் தைத்து நிற்கும். அப்புறம் கீழே விழுமா அது!

அச்சுதன் என்று அவனுக்குப் பெயர் அல்லவா! அச்சுதன் என்றால் தான் கீழே விழாதவன்; தன் திருவடியைப் பற்றியவர்களை நழுவ விடாதவன் என்று பொருள் அந்தப் பெயருக்கு!

அப்படிப்பட்ட அச்சுதனின் திருவடியில் போய்ப் பதிந்து நிற்கச் செய்கிற – இந்த சரணாகதிக்கு ஒரு மந்திரம் – பிரணவம்.

பிரணவத்தைச் சொல்லி எம்பெருமான் திருவடியிலே ஆத்ம சமர்ப்பணம் பண்ண வேண்டும்.

ஓம் என்றால் யார்? பிரணவம் யார்? என்று ஒரு கேள்வி!

ஓம்காரம் என்றால் பரமேசுவரன். இன்னொரு இடத்தில் உபநிஷத் ஓம்காரம் என்றால் விஷ்ணு என்று எடுத்துச் சொல்கிறது. அந்த விஷ்ணுதான் ஓம்காரமாய் இருக்கிறான்.

# குறையொன்றுமில்லை

அது எப்படித் தெரியும் என்றால் இன்னொரு இடத்தில் 'அகாரோ விஷ்ணு வாசக:' என்று வருகிறது.

அந்த ஓம்காரத்திலே இருக்கிற 'அ' இருக்கிறதே அதுதான் விஷ்ணு. அதைக் கவனியுங்கள் என்கிறது.

ஓம்காரமானது மூன்று அக்ஷரமாயிருக்கிறது.

மூன்று வாக்கியமாயிருக்கிறது;

ஒரே அக்ஷரமாகவுமிருக்கிறது!

அதற்கு உள்ள பெருமையைச் சொல்லவே முடியாது!

ஒரே அக்ஷரம் அது. அதைப் பிய்த்தால் அ உ ம என்று மூன்று அக்ஷரம்.

அ என்பது ஒரு பதம்

உ என்பது ஒரு பதம்

ம என்பது ஒரு பதம்.

அ என்பது ஓர் அக்ஷரமாகிறது. உ என்பது ஓர் அக்ஷரமாகிறது. அக்ஷரமானாலும் அது வாக்கியம். ஒரு வாக்கியத்துக்கு எப்படி முழுப் பொருள் கிடைக்கிறதோ, அது மொத்தம் இந்த அக்ஷரத்

துக்கே கிடைக்கும்.

ம என்பது ஒரு வாக்கியமாக இருக்கிறது. ஒரே பதமாகவும் ஒரே அக்ஷரமாகவும் இருக்கிறது. அத்தனை பெருமை இதற்கு!

ஒரு காலத்தில் மஹரிஷிகளெல்லாம் ரிக் வேதத்தைப் போட்டுத் தங்கள் புத்தியாகிற மத்தை இட்டுக் கடைந்தார்கள்.

கடைந்தபோது, இந்த ரிக் வேதத்திலிருந்து அவ்வளவு வேத வான்மயமும் எட்டு அக்ஷரமாக வந்து நின்றது. எட்டே அக்ஷரமாகக் கிடைத்து விட்டது.

அதே மாதிரி ரொம்பக் கடினமான வேதம் யஜுர் வேதம்.

நான்கு திக்குகளையும் சொல்கிறது இந்த வேதம். இதன் சப்தங்கள் இழைந்து இழைந்து வரும். அப்படி இழைந்து வருகிறபோது, என்ன இருக்கிறது இதிலே என்று சொல்ல முடியாதபடி இருக்கும்.

அந்த மாதிரி கடினமாய் இருக்கக்கூடியது யஜுர் வேதம். புத்தியை பிரமிக்கப் பண்ணும். என்ன சொல்வது என்று சட்டென்று புரியாது. அதனால் ரொம்ப சிரமப்பட்டுக் கேட்பார்கள்.

ஒருத்தர் பரீட்சைக்குப் போனார். நன்றாகத்தான் மனப்பாடம் பண்ணி வைத்துக் கொண்டு போனார். ஆனால் சொல்லிக் கொண்டே வருகிறபோது சந்தேகம் வந்து விட்டது.

'ப்ரவுபே ந யசேதா' என்று வருகிறது.

புளியங்கொட்டைப் போட்டு நெட்டுரு பண்ணியவர்தான். அப்படியிருந்தும் பரீட்சைக்குப் போன போது சந்தேகம் வந்து விட்டது!

## அருள்வாக்கு

பக்தி செலுத்துவதால் முக்தி கிடைத்துவிடுமென்று சொன்னால் நாம் செலுத்தும் அந்த பக்தியே நேராக முக்தியைக் கொடுத்து விடுகிறது என்று அர்த்தமில்லை. நாம் செய்கிற எதுவுமே தானாக எந்தப் பலனையும் தருவதில்லை. பலன்களைத் தருகிற பல தாதாவாக ஈச்வரனே இருக்கிறான். அவன்தான் பாப புண்யம் பார்த்து எல்லாருக்கும் எல்லாப் பலனையும் கொடுக்கிறான். அவ்விதத்தில் நாம் பண்ணுகிற பக்திக்குப் பலனாக அவன் பரம க்ருபை செய்து, ஞானத்தைத் தந்து, அந்த ஞானத்துக்குப் பலனாக

'ரிஷபனே' என்று சொல்ல வேண்டுமா 'வ்ருஷபனே' வா...? என்று சந்தேகம் வந்து விட்டது! அந்த இடத்திலே என்ன பண்ணி விட்டார் அவர்... எதிரே பரீக்ஷாதிகாரிகளெல்லாம் உட்கார்ந்திருக்கிறார்கள். இன்னும் பத்துப் பேர் உட்கார்ந்திருக்கிறார்கள், இவர் சொல்வதை கவனிப்பதற்காக.

இவர் என்ன பண்ணினார். பரீட்சைக்கு வந்தார்.... ரொம்ப கெட்டிக்காரர்! அந்த இடத்துக்கு வருகிறபோது வாயைக் கையால் மூடிக் கொண்டு சொன்னார்! எதிரே இருப்பவர்கள் எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும் - அவர்கள் சந்தேகத்திலேயே இருக்கட்டும்... என்பது அவர் நோக்கம்.

அவர்களானால் விடவில்லை. மறுபடியும் சொல்! என்று கேட்டார்கள். இவர் மறுபடியும் வாயை மூடிக் கொண்டார்.

பரீட்சாதிகாரி கிட்டே வந்து உட்கார்ந்து இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு 'சரி இப்போது சொல்லுங்கள்' என்றார்.

இவர் சரியானபடி வ்ருக்ஷேன என்றே உச்சரித்தார்.

"அப்படிச் சொல்லு! இதிலே ஏன் சந்தேகம் உனக்கு.... சரியாகச் சொல்லி விட்டு ஏன் இப்படிப் பயப்படுகிறாய்?" என்றார்.

இவருக்கு வாயைப் பொத்திக்காமலே இருந்திருக்கலாமோ என்று தோன்றி விட்டது!

ஆக, எவ்வளவுதான் சொன்னாலும் சமயத்திலே சந்தேகம் வருகிறது.

அப்படி அந்த வேதம் படுத்துகிற பாடு சொல்லி முடியாது!

---

**"என்னைக் கேலி செய்த ஒரு காலேஜ் ஸ்டூடண்டுக்கு நல்லா பாடம் கத்துக் குடுத்துட்டேன். இனிமே என் பக்கமே திரும்பிப் பார்க்க மாட்டான்."**

**"அப்படி என்ன செஞ்சே?"**

**"ஒரு மணி நேரம் உட்கார வச்சு கெமிஸ்ட்ரி சொல்லித் தந்தேன்!"**

**- என். உஷாதேவி**



மோக்ஷானுபூதியைக் கொடுக்கிறான். ஆக, பலன் தருவது நாம் பண்ணும் பக்தியே அல்ல; அதற்குப் பிரதியாக ஈச்வரன் செய்யும் கிருபைதான் பலனைத் தருவது.

பக்தி நிஜமானதாக இருந்தால் பக்தி பண்ணுகிறவன் அதற்கு ப்ரதியே எதிர்பார்க்க மாட்டான். ப்ரதி ப்ரயோஜனம் எதிர்பார்த்து விட்டால் அது வியாபாரம்தானேயொழிய பக்தி இல்லை என்றே பாகவதாதி நூல்களில் சொல்லியிருக்கிறது. இப்படி பக்தன்



(ப்ரதி வேண்டாமல்) இருந்தாலும் இவனிடமிருந்து நிஜமான பக்தியைப் பெற்றுக் கொண்ட பகவானுக்கு மனசு கேட்குமா? அதனால் அவன் க்ருபை பண்ணத்தான் பண்ணுவான். ஞானத்தை அநுக்ரஹிக்கத்தான் செய்வான். பக்தனை ஸம்ஸாரத்திலிருந்து விடுவித்து மோக்ஷத்தில் சேர்க்கத்தான் செய்வான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

சில சமயங்களில் தப்பு வந்து விடும். எப்பேர்ப்பட்ட மகான்களுக்கும் அந்த மாதிரி வரக்கூடும்.

இப்படி பிரமிக்கும்படியான வேதம் யஜுர் வேதம். யஜுர் வேதத்திலே எட்டு அக்ஷரங்கள் – ரிக் வேதத்தைக் கடைகிற போது எப்படி எட்டு அக்ஷரங்களோ, அதே மாதிரி யஜுர் வேதத்தைக் கடைகிறபோதும் எட்டு – அதே மாதிரி எட்டு அக்ஷரங்கள். அதே மாதிரி ஸாம வேதமும். மற்ற மூன்று வேதங்களைச் சொன்னாலே அதர்வ வேதமும் சொல்லப்பட்டது ஆகும். அவற்றுக்குள்ளேயே அது அடக்கம்.

இந்த உயர்ந்த ஸாம வேதம் இருக்கிறது பாருங்கள்....

விஷ்ணுவுக்கு அதனிடத்தில் ரொம்ப இஷ்டமாம். அந்த ஸாமத்தினாலே அவனை ஸ்தோத்திரம் பண்ண வேண்டும்.

காந்தார ரிஷப ஷட்ஜ ஸ்வராதிகள் – அந்த சங்கீத சாஸ்திரத்துக்கே மூலமான இந்த ஸாமத்திலிருந்து வந்தவைதான்.

ஈச்வரன் – பரமேசுவரனுக்கும் இந்த ஸாமத்திலே ரொம்ப இஷ்டம்.

ராவணன் என்ன செய்தான்...?

ஈச்வரன் தரிசனம் தனக்குக் கேட்டதும் கிடைக்கவில்லை என்று வெளியிலேயே உட்கார்ந்து கொண்டான். தன் உடலையே வீணையாக்கி இந்த ஸாமத்தை கானம் பண்ணினான்.

ஈசுவரன் பிரத்யக்ஷமாகி விட்டார் அவன் முன்னாலே!

அப்படிப்பட்ட ஸாம வேதம். சங்கீத சாஸ்திரத்தின் மூலம்.

அதைப் போட்டுக் கடைந்தபோதும் அதிலிருந்து எட்டு அக்ஷரங்கள் எடுக்கப் பட்டன.

ஆக, மூன்று வேதங்கள், மூன்றிலிருந்தும் மூன்று வாக்கியங்கள்.

மூன்று வேதங்களிலிருந்தும் மூன்று வாக்கியங்கள் ஒன்றி விட்டன.

8, 8, 8 – இந்த மூன்றையும் சேர்த்தால் 24 அக்ஷரம் ஆகிறது.

வேதமே சொல்கிறது :

மூன்று பாதத்தை உடையது காயத்ரி. ஒரு பாதத்துக்கு எட்டு அக்ஷரங்கள். 3X8 24 அக்ஷரங்கள் கொண்டது காயத்ரி. ஸமஸ்த வேதமும் காயத்ரி மந்திரமாக மாறிப் போய் விட்டது!

இதை மேலும் சுருக்கினார்கள் மஹரிஷிகள்.

ரிக் வேதத்திலிருந்து– முதல் வாக்கியத்திலிருந்து பூ : என்றும் இரண்டாவது வாக்கியத்திலிருந்து புவ : என்றும் மூன்றாவது வாக்யத்திலிருந்து ஸுவ: என்றும் எடுத்துச் சேர்த்தார்கள். இது ஒரு மந்திரம். இது வியாக்ருதி மந்திரம் என்று பெயர் : பூர்பு வஸ்ஸுவ :

இதை வெறுமனே விடவில்லை. இதை மேலும் சுருக்கினார்கள்.

சுருக்கினால் முதல் பதத்திலிருந்து அ என்கிற அகரமும் இரண்டாவது பதத்திலிருந்து உ என்பதும் மூன்றாவது பதத்திலிருந்து 'ம' என்றும் மூன்று அக்ஷரங்கள் தோன்றின.

இதைச் சேர்த்து இழைத்தார்கள். ஓம்காரம் பிறந்தது.

(தொடரும்)



• ராஜலட்சுமி



• ஜெயந்தி



• அருணா



• ரேணுகா



• ராதிகா

அரசியலும் கொதிக்கிறது. ஆகாயமும் கொதிக்கிறது. அட கொஞ்சம் ஜாலியா பேசுங்கப்பா என்று ஒரு லயன்ஸ் க்ளப், ஒரு பெண்கள் சங்கம், ஒரு கல்லூரி ஆகியவற்றில் நுழைந்து ஃபாஷன் பற்றிக் கேட்டோம். கூடவே உங்களில் யார் அதிக ஃபாஷன் உணர்வுடன் இருப்பதாக நினைக்கிறீர்கள் என்ற கேள்வியையும் வைத்தோம். சுவாரசியங்கள் தொடர்ந்தன.

லயன்ஸ் க்ளப்பின் மெல்வின் ஜோன்ஸ் பிரிவு உறுப்பினர்கள் அறுவர் குழுமினர்.

"ஃபாஷன் என்றால் என்ன? தமிழ் சினிமா நாயகர்களில் ஃபாஷன் உணர்வு கொண்டவர் யார்?" என்று நாம் தொடங்கி வைக்க,

"ஆண் பாதி ஆடை பாதின்றதுதானே உண்மை. நிகழ்ச்சிகளுக்குத் தகுந்த உடை அணிவதுதான் ஃபாஷன். இந்த விஷயத்திலே கமலுக்கு இணை யாருமில்லை. பங்க் ஸ்டைல் இளைஞனாக இருந்த அவர், 'பட்டத்துக்கு' வந்தவுடன் தோன்றும் முதல் காட்சியிலே அவரைக் காலிலேயிருந்து தலை வரை காட்டுவாங்க. அற்புதமான ட்ரெஸ் சென்ஸ். இந்தியனிலே கூட சுதந்தரப் போராட்டத்துக்கு முன், பின்னு ரெண்டு காலகட்டத்தையும் தன்னுடைய உடைகளிலே அசத்தலா கொண்டு வந்திருக்காரே" என்றார் காந்தி ராஜன்.

"ஃபாஷன் என்பது உடைகள் மட்டுமில்லை. காக்கும் கரங்களிலே எஸ்.எஸ்.ஆர். ஒரு தடித்த ஃப்ரேம் கொண்ட கண்ணாடியைப் போட்டுக்கிட்டு வருவார்.





அது அப்ப ஃபாஷனாயிடுச்சு! பலரும் அப்போ அது மாதிரி வாங்கிக் கிட்டாங்க. நானும்தான்" என்று மலரும் நினைவுகளில் மூழ்கினார் ஏகாம்பரம்.

"மற்றவர்களைக் கவரும் விதத்தில் உடையிலிருந்து ஷூவரை யார் அணிகிறார்களோ அவரே ஃபாஷன் ஸ்டார். அந்த விதத்தில் அரவிந்த்சாமிக்கே என் வோட்டு" - இது விஜய்குமார்.

"ஹேர்ஸ்டைலும்தான். ராஜீவ் காந்தி பிரதமராக இருந்தபோது டெல்லி சலூன்களில் 'ராஜீவ் ஸ்டைல்'னு பின்புறம் கொஞ்சம் வழுக்கை தெரிகிற மாதிரி வெட்டிவிடுவது ஃபாஷனாக இருந்து. பிரபு தேவாவைப் பார்த்து தாடி வைத்துக் கொண்ட இளைஞர்கள் நிறையப் பேரைப் பார்க்கிறோமே" என்ற

# எம்.ஜி.ஆர். கண்ணாடியும் சிம்ரனின் சுரிதாரும்...



மோகன், பாண்டியராஜன், செந்தில் இடம் பெற்ற ஒரு சினிமாக் காட்சியைக் குறிப்பிட்டார். செந்திலின் பாண்ட்டின் கால்பகுதியை நாயொன்று கிழித்துவிட, பாண்டியராஜனும் தன் பாண்ட்டின் ஒரு காலை முட்டி வரை கிழித்துக் கொண்டு விடுவார். பிறகு அமெரிக்காவில் இதுதான் ஃபாஷன் என்று அவர்கள் கூற, அடுத்த நாள் பலரும் தங்கள் பாண்ட்டின் ஒரு காலைக் கிழித்துவிட்டுக் கொண்டிருப்பார்கள்!

"சூழலுக்குத் தகுந்த உடைதான் என்னைப் பொறுத்தவரை ஃபாஷன்" என்ற உன்னி கிருஷ்ணன் நம்பியார் தேர்ந்தெடுத்தது 'நாயகன்' கமலை.

"ஃபாஷன் என்பது உடையில் மட்டுமல்ல. பழகும் முறையிலும் கூடத்தான். ஃபாஷனான கதாநாயகன்னா ஜெமினி கணேசனைத்தான் சொல்வேன். மிஸ்ஸியம்மா, கல்யாணப் பரிசு ஆகிய படங்களிலே அவரது உடைகள் அப்போ வெகு பிர பலம்" என்றார் சுவாமிநாதன்.

"அழகுக்கும் ஃபாஷனுக்கும் சம்பந்தமில்லை. கண்களை உறுத்தும்படி எதையுமே அணிவதை ஃபாஷனென்று ஏற்றுக் கொள்ள முடியாது. அதே சமயம் ஃபாஷன் உடைகள் மீண்டும் ஒருமுறை பார்க்கத் தூண்டுவதாக இருக்க வேண்டும்" என்றெல்லாம் கருத்துக் கூறிய இந்திராநகர் பெண்கள் சங்க உறுப்பினர்கள் இவரிடம், "ஃபாஷனான உடைகள் அணிவதில் உங்கள் வீட்டினருக்கு மறுப்பேதும் உண்டா?" என்று கேட்டோம்.

"சல்வார் அணிவதில் கணவருக்கு ஆட்சேபனை இல்லை. ஆனால் என்னுடைய டீனேஜ் குழந்தைகள்தான் விரும்புவதில்லை" என்றார் ரேணுகா ஸ்ரீனிவாசன்.

"ஃபாஷன் உடைகளைப் பார்த்து ரசிப்பேனே தவிர அணிவதில்லை. இத்தனைக்கும் என் மருமகளே என்னை அப்படி அணியச் சொன்னதுண்டு" என்றார் அழகு நிலையம் ஒன்றை நடத்தும் ராஜலட்சுமி வசந்தராஜ்.

"காலேஜுக்கு ஜீன்ஸ் அணிந்ததுண்டு. வீட்டுக்குள் ஷார்ட்ஸ். அப்பா, அம்மா எதிர்ப்புத் தெரிவித்ததில்லை. சௌகரியமாக உள்ள ஃபாஷன்தான் நிலைக்கும்" என்றார் ராதிகா சேஷன்.

"சொந்தத்திலேயே திருமணம் செய்து கொண்டதாலோ என்னவோ, சல்வார், மிடி



வேண்டியிருக்கு. மேக்கப்பிற்கு எங்கே நேரம்? ஐந்து மணிநேரம் வகுப்புகளிலே உட்கார வேண்டியிருக்கிறதே. ஹேர் ஸ்டைல் கலைந்துவிட வாய்ப்பு அதிகம்'' என்றார்கள்.

கதாநாயகிகளில் ஃபாஷனானவர் யார் என்ற கேள்விக்கு மட்டும் வித விதமான பதில்கள்.

அல்ட்ரா மாடர்ன், மினி ஸ்கர்ட்டுகள் கூட பொருந்துகின்றன. ஏன் ஜீன்ஸ்ஸும் கூடத்தான் என்ற காரணத்தால் ரம்பா (அனுஷா, மந்த்ரா, சுஜி), இறுக்கமான சுரிதாரில் வெகு நேர்த்தி என்ப தால் சிம்ரன் (ஷைலாதேவி, கணிதசெல்வி), ஷராரா வகை உடையில் பேரழகு என்பதால் கஜோல் (ப்ரியா), ஷாட்ஸில் துள்ளும் இளமையோடு காட்சி தரும் ப்ரீதி ஜிந்தா (ஷர்மிளா), எல்லா நவீன உடைகளுக்கும் ஏற்ற லைலா (சங்கீதா), ஜீன்ஸ் மற்றும் ஷாட்ஸில் கண்ணைப் பறிக்கும் கரிஸ்மா (ஜெயலட்சுமி), புடைவை தவிர எதிலும் பிர காசிக்கும் ஐஸ்வர்யா ராய் (குணசுந்தரி), என்ன காரணமென்று கூற முடியாவிட்டாலும் இஷா (மணிமேகலை), எல்லா உடைகளிலும் சிக்காக விளங்கும் மனிஷா (லட்சுமி) ஆகியோர் தேர்வு செய்யப்பட்டனர்.

நட்சத்திரங்கள் இருக்கட்டும். இவர்கள் கல்லூரியில் யார் ஃபாஷன் திலகம் என்ற கேள்விக்கு ரம்யா, ப்ரீதா, நித்யா, பாலா, ரேஷ்மி என்று பதில்கள் (அவர்களில் சிலர் ஃபாஷன் பரேடில் இங்கே). இவர்களெல்லாம் டீசன்ட்டாக அதே சமயம் நாகரிகமாகக் காட்சி தருவதால்தான் இந்த வோட்டாம். 'ஆனால் நீங்கள் கதாநாயகியைத் தேர்ந்தெடுத்தபோது இந்த 'டீசன்ஸி' என்ற அளவுகோலை வைத்துக் கொண்டதாகத் தெரியவில்லையே?' என்ற கேள்விக்கு "நிஜம் வேறு. சினிமா வேறு. நடிகைகள் இந்த உடைகளுடன் பஸ்ஸில் வருகிறார்களா என்ன?'' என்றனர்.

...போன்றவற்றிற்கு எதிர்ப்பு இல்லை. ஜீன்ஸுக்கு மாமியார் ஆட்சேபம் தெரிவித்திருக்கக் கூடும். ஆனால் அப்போது நாங்கள் தனித் தனி இடங்களில் இருந்தோம். என் மகள் தான் நான் ஜீன்ஸ் போடுவதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கிறாள். "உன் அக்காவா?'' என்று அவளை அவள் நண்பர்கள் கேட்டு விடுகிறார்களாம்'' என்று சிரித்தார், மற்ற பெரும்பாலான உறுப்பினரால் ஃபாஷன் உணர்வு அதிகம் உள்ளவர் என்று கருதப்பட்ட ஜெயந்தி சுந்தர்.

**மொ**த்தம் பதிமூன்று பேர் கலந்து கொண்டார்கள் கருத்தரங்கத்தில். செல்வி, மந்த்ரா, ஷர்மிலா, சங்கீதா, மணிமேகலை, கீதா, குணசுந்தரி, ஜெயலட்சுமி, சுஜி, லட்சுமி, ஷைலாதேவி, அனுஷா, ப்ரியா. இவர்களில் பின்பாதியினர்தான் தங்கள் கருத்துக்களைக் கொஞ்சம் அழுத்தமாகச் சொன்னார்கள். என்றாலும் எந்தக் கருத்தையும் ஒரே குரலில் இவர்கள் கூறியது கொஞ்சம் ஆச்சரியமாக இருந்தது.

"ஃபாஷன் கல்லூரிகள் என்றால் எதிராஜ், ஸ்டெல்லா, எஸ்.ஐ.ஈ.டி.'' என்று அடுக்கத் தொடங்கியவர்கள் திடீரென்று ரோஷத்துடன் "எங்கள் செல்லம்மா கல்லூரியும் மிக முன்னேறி இருக்கிறது. ஒரு காலத்தில் தாவணி கல்லூரி என்று பெயரெடுத்திருந்த எங்கள் கல்லூரியில் இப்போது எங்கு திரும்பினாலும் சுரிதார்தான். அதுவும் மாலைக் கல்லூரியில் வருபவர்கள் ஃபாஷனில் கரை கண்டவர்கள். இந்த விஷயத்தில் எங்களுக்கு ஐம்பது மதிப்பெண் என்றால் அவர்களுக்கு எண்பது கொடுக்கலாம்'' என்றார்கள். என்ன காரணம்?

"ஏன் சார், நாங்க சீக்கிரம் கிளம்ப...

அதுசரி எந்த மாதிரி உடல்வாகு இருந்தால் ஃபாஷனான உடைகள் எடுப்பாக இருக்கும்?

"ஒல்லியாக, அதிக உயரத்துடன், கொஞ்சம் பணக்காரக் களையுடன், சரியான அங்க அளவுடன் இருந்தால்தான். மற்றபடி கறுப்பா, சிவப்பா என்பது பற்றிக் கவலையில்லை'' என்ற பதில் கோரஸாக வந்தது.

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : ஸ்ரீஹரி

ஜெயலலிதா, சோனியாவை நோக்கி, 'சோனியா... சோனியா...' என்று பாடுவார். அதைப் பார்த்துக் கொண்டு நிற்கும் வாஜ் பாய் "ஏமாறாதே! ஏமா றாதே!" என்று பாடுவார். இந்தக் கார்ட்டூன் ராஜ் டி.வியில் காட்டப்பட்டபோது, பாராட்டாதவரில்லை. காரணம், இந்த கார்ட்டூன் டி.வியில் ஒளிபரப்பான சில நாட்களுக்குப் பின்னர்தான் பா.ஜ.கவுக்கு அளித்து வந்த ஆதரவை ஜெ. வாபஸ் பெற்றுக் கொண்டு. சோனியாவை டீ. பார்ட்டியில் சந்தித்தார்!




# 'ராஜ்'டூன் ஹீரோ!

பத்திரிகைகளில் கார்ட்டூன் என்பது வழக்கமான அம்சம்தான் என்றாலும், டெலிவிஷன் சானல் நியூசில், அந்த கார்ட்டூனையும் வெறுமனே காட்டாமல், சற்றே அனிமேஷன் எஃபெக்டுடன், கார்ட்டூன் திரைப்பட பிரேம்கள் போலக் காட்டுவது ராஜ் டீ.வி. நியூசில் மட்டுமே!

இப்படி தினம் இரண்டு (ஆங்கில செய்திக்கு ஒன்று, தமிழ் செய்திக்கு ஒன்று) என்ற கணக்கில் இதுவரை எண்ணூறுக்கும் அதிகமான கார்ட்டூன்கள் வரைந்து தள்ளியிருக்கிறார் கார்ட்டூனிஸ்ட் பாரி (44).

பாரியின் ரத்தத்தில் ஊறிப் போன விஷயம் கார்ட்டூன் வரைவது. காரணம், பாரியின் அப்பா ஜனசக்தியில் தொடங்கி துக்ளக் வரை பல்வேறு பத்திரிகைகளில் கார்ட்டூன் வரைந்த பிரபல கார்ட்டூனிஸ்ட் ராகி என்கிற ராமகிருஷ்ணன் தான்!

ராஜ் டி.வியில், செய்திகள் ஆரம்பித்த சமயம், டீ.வி. சானலின் நியூசில் கார்ட்டூன் என்கிற ஐடியாவுடன் ராஜ் டீ.வி.யை இவர் அணுக, ஐடியா கிளிக் ஆகி விட்டது. அது முதல், தினமும் காலை எல்லா பத்திரிகைகளையும் பார்த்து, கார்ட்டூனுக்கு விஷயம் தயார் பண்ணிக் கொண்டு, டெலிபோனில் ராஜ் டீ.வி. செய்திப் பிரிவு நிர்வாகிகளுடன் கலந்தாலோசிக்கிறார். உடனே உட்கார்ந்து வரையத் தொடங்கினால், இரண்டு மணி நேரத்தில் இரண்டு கார்ட்டூன்களும் ரெடி.


• பாரி

பண்ருட்டி ராமசந்திரன், சிவாஜி, சோ உட்படப் பல பிரபலங்கள் இவரது கார்ட்டூன்களை டீ.வியில் பார்த்து, ரசித்து பாராட்டுத் தெரிவித்துள்ளனர்.

"சாதாரண கார்ட்டூன் எப்படி, டெலிவிஷனில் அனிமேஷன் செய்யப்பட்ட கார்ட்டூன் ஆகிறது?"

"கார்ட்டூனை அப்படியே படம் பிடித்து, அதை கம்ப்யூட்டர் பிளாப்பிக்கு மாற்றி, கம்ப்யூட்டர் உதவியுடன் கழுத்தையோ, கைகளையோ, வாயையோ அசைப்பது மாதிரி செய்து விடுகிறார்கள். இந்த அனிமேஷன் எஃபெக்டுக்கு மக்களிடையே நல்ல வரவேற்பு."

சென்னை ஓவியக் கல்லூரி மாணவரான பாரிக்கு, சுமார் எழுபது தமிழ், தெலுங்கு திரைப்படங்களில் டைட்டிலுக்கு அனிமேஷன் ஒர்க் செய்த அனுபவமும் உண்டு!

— பாரதி




Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621
Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 950/- (Air Mail)

